# மங்கையர் மலர்

ஏப்ரல் '89

ரூ. 4/-

## கை நிறைய பூ!

அனுராதாரமணன்

குறுநாவல்

# இன்சுவையின்
# இனிய பெயர்

# NUTRINE



உற்சாகமூட்டிடும் நியூட்ரின் மில்க் பிஸ்கெட்டுகள்
இருக்கும் போது ஆனந்தத்திற்குக் குறைவேது!
வீட்டுப் பாடங்கள் கூட இனி ஜோராய் இனிக்கும்.
பால் புரதத்துடன் கூடிய மொறு மொறு
பிஸ்கெட்டுகள். உள்ளங்கவர் மழலைச் செல்வங்கள்
நாளும் சுவைத்து மகிழ்ந்திட.




**பால் நலம்.**
**சுவை வளம்.**

Mudra:Bir:NB:175:89:TAM

* உழைப்பும், உறுதியும் மட்டும் இருந்தால் போதும். பெண்கள் எல்லாத் துறைகளிலும் முன்னேறி விடலாம் என்ற சுப்புலட்சுமி ஜெகதீசனின் கூற்று மறுக்க முடியாத உண்மை.

பழனி — 1, ஆர். எஸ். கீதாராணி.

* மங்கையர் மலரில் ஜெயலட்சுமி என்பவர் தனியாக பஸ்ஸில் சென்ற பொழுது, பாஸ்கர், ஆறுமுகம் என்ற டிரைவரும், கண்டக்டரும் நடந்து கொண்டதைப் பற்றி எழுதியிருந்தார். இவர்களைப்போல நல்லவர்கள் பலர் இருக்கையில் ஒரு சிலர் இப்படியும் இருக்கிறார்கள். நான் எனது மனைவியைக் குடந்தையிலிருந்து இரவு பத்து மணி பஸ்ஸில் (தி. போ. க.) சென்னைக்கு ஏற்றி அனுப்பினேன். டிரைவரிடம் அவளை குரோம்பேட்டை நிறுத்தத்தில் அங்கு நிற்கும் உறவினர் வசம் கூறி இறக்கி விடும்படி கூறினேன். பஸ் புறப்படும் வரை இதையே பல முறை கூறி ஏற்றி விட்டேன். ஆனால் டிரைவர் விடியற் காலை பல்லாவரத்தில் பஸ்ஸை நிறுத்தி, 'இதுதான் குரோம்பேட்டை' எனக் கூறி இறக்கிவிட்டு விட்டார். பின் என் மனைவி அங்கிருந்தவர்களை விசாரித்துப் பின் வீடு போய்ச் சேர்ந்தாள். இதனைப் படித்த பிறகாவது அவர்களைப் போன்றவர்கள் திருந்தி நடக்கட்டும் என்பதற்காக இதனை எழுதுகிறேன்.

கும்பகோணம், கிருஷ்ணமணி.

* பெண்கள் தங்களுக்குள்ளே தன்னம்பிக்கையை வளர்த்துக் கொள்ளவும், தாழ்வுமனப்பான்மையை அகற்றிக்கொள்ளவும் தங்களது இதழ் பெரிதும் உதவி வருகின்றது. தங்களது இதழில் வெளியாகும் எந்தவொரு கதையையும், நேரத்தைப் போக்குவதற்காகப் படித்துவிட்டு, ஒதுக்கி விட முடியாது. 'மீண்டும் ஒரு பாவை நோன்பு' குறுநாவல் மேற்கூறிய கருத்தைத் தான் பிரதிபலிக்கின்றது. கண்ணைக் கசக்கிக் கொண்டு, பெண்கள் அடுப்படியில் நின்ற காலம் மலையேறி விட்டது. இன்று, தன்னம்பிக்கையோடும், சமுதாயத்திற்கு அஞ்சாமலும், ஒரு பெண் செயல்பட்டால், அவளால் முடியாதது என்று எதுவும் இல்லை. கதை ஆசிரியருக்கும், வெளியிட்ட உங்களுக்கும் எனது வாழ்த்துக்கள்!

சென்னை — 74, எஸ். விஜயலெட்சுமி.

* வையவனின் குறுநாவல் ஒரு வித்தியாசமான படைப்பு! நல்ல இலக்கை நோக்கிப் போய்க்கொண்டிருக்கும் போது இடையில் கேட்க வேண்டியிருக்கும், கேலிகளைப் பற்றியும், இயல்பான குடும்பப் பிரச்னையையும் ஒரே நேரத்தில் கொடுத்த ஆசிரியருக்குப் பாராட்டுக்கள்.

ஆட்டையாம்பட்டி,
திருமதி தேன்மொழி சந்திரசேகரன்.

சொல்ல விரும்புகிறோம்:

# உழைப்பும், உறுதியும் போதும்!

* சீனாவின் சிறப்பு மருத்துவப் பிரிவுகளில் முதலிடம் வகிக்கும் ''அக்குபங்சர்'' பற்றிய அழகான உரைகளை ஆணித்தரமாக ஆதாரப் படங்களுடன் தெளிவாக விளக்கிக் காட்டிய விதம் சிறப்பாக அமையப் பெற்றிருந்தது. முதன்மைக் கருத்தான ''தலையில் குட்டுவதனால்'' ஏற்படும் தீமைகள் பற்றித் தெள்ளத் தெளிவாக அறிய முடிந்தது. வரவேற்கப்பட வேண்டிய தொடர்தான்.

கங்கைகொண்டான் — 52,
ஸ்ரீமதி கங்காதேவி.

* வீட்டிலிருந்தே சம்பாதிக்கலாமே என்ற புதிய தொடரை வாழ்த்தி வரவேற்கிறேன். திறமை இருந்தும் வேலைக்குப் போகும்சூழ்நிலை இல்லாத பெண்களுக்கு எந்தத் தொழிலை எவ்வாறு செய்தால் இலாபம் வரும் என்று சம்பந்தப்பட்ட தொழில் செய்யும் பெண்மணிகளைக் கொண்டே விளக்கம் கொடுப்பது மிக அருமை.

சென்னை — 94, கலாவதி ஜெயவீரமணி.

* காளியின் அவதாரங்கள் பல நூறு என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் கல்கத்தா ஹௌராவில் இருக்கும் ஆயிரம் கை காளி கோயில் பற்றி மங்கையர் மலர் மூலம்தான் தெரிந்து கொண்டேன். காளியின் வரலாறும், ஆயிரம் கையின் வரலாறும், ஆயிரம் கைகாளியின் திருவுருவப் படத்தையும் வழங்கிய உங்களுக்கு ஆயிரம் நமஸ்காரங்கள்!

பாண்டிச்சேரி — 13,
திருமதி தனலட்சுமி வடிவேல்.

* 'துணை'யின் தேவையை எத்தனை அழகாக ஒரு சிறுகதையின் மூலம் சித்திரித்து உள்ளார் ரஜினி சந்தானம். எடுத்தவுடன் விவாகரத்துக் கோரும் இக்காலப் பெண்களுக்கும், ஆண்களுக்கும் சரியான படிப்பினை. பல இன்னல்களுக்கு நடுவே பொறுமையாகப் பெரிய பெரிய படிப்பெல்லாம் படித்துப் பட்டம் வாங்கும் இவர்கள் வாழ்க்கையில் மட்டும் பொறுமையைக் கடைப்பிடிப்பதிலும் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து வாழ்வதிலும் பட்டம் வாங்கத் தயங்குவதேனோ?

பெங்களூர் — 8, சம்பந்தன்.



# பின்னால் ஒரு பெண்

சாந்தீபிகா

“பாட்டீ...” என்று வாசலில் நின்று குரல் கொடுத்தேன். ஒரு பதிலும் இல்லை. கதவை இரண்டொரு முறை தட்டிப் பார்த்தேன். பலன் இல்லை. வாசல் கதவு வெறுமனே சாத்தித்தான் இருந்தது. ‘ஆவது ஆகட்டும்’ என்று தைரியமாய்க் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே போனேன்.

வழக்கமான கிராமத்துவீடுதான். கதவைத் திறந்ததும் ஓர் இரேழி. தாண்டினால் நேரே முற்றம். முற்றத்தை ஒட்டி, பக்கவாட்டில் வராண்டாவும் கூடமும். பழங்காலத்து வீடாகையால் குட்டை குட்டையாய் நிலைப் படிகள். ஜாக்கிரதையாய்க் குனிந்து போய் கூடத்தில் எட்டிப் பார்த்தேன்.

கூடத்தில் ஊஞ்சலின் மீது அந்தப் பாட்டி உட்கார்ந்து கொண்டு மெதுவாக ஆடிக் கொண்டிருந்தாள். எண்ணெயைக் கண்டே இராததால் அலுப்பான கதியில் ஊஞ்சலின் கொக்கி கிரீச்சிட்டுக் கொண்டிருந்தது.

பாட்டி நான் வந்ததைக் கவனித்ததாகவே காணோம். முகவாயைத்தடவியபடி மோட்டு வளையைப் பார்த்தவாறே என்னவோ தனக்குத்தானே பேசிக் கொண்டிருந்தாள். பட்டென்று கையைத் தட்டிக் கன்னத்தில் வைத்துக் கொண்டு ஒரு சிரிப்பு வேறு சிரித்தாள்.

எனக்கு இப்போதுதான் சற்று பயம் வந்தது. “அந்தக் கிழவி கொஞ்சம் ஒரு மாதிரி; நீ அவகிட்டப் போய்க் கேட்கிறது எனக்குச் சரியாப் படலை; பிறகு உன் இஷ்டம்.” என்று என் மாமா சொல்லித்தான் அனுப்பினார். என் ஆசை என்னை விடவில்லை. ஓர் அசட்டுத் தைரியத்தில் வந்துவிட்டேன்.

விஷயம் ஒன்றும் பெரிதில்லை. எனக்கு டிசம்பர் பூக்கள் என்றால் பைத்தியமாய் ஓர் ஆசை. நேற்று மாலை மாமாவின் வீட்டுக் கொல்லையிலிருந்து, அடுத்த வீடான இந்தப் பாட்டியின் வீட்டுக் கொல்லையை நோட்டம் விட்ட போது, இங்கு கொள்ளை கொள்ளையாய் டிசம்பர் பூக்கள் பூத்துக் குலுங்குவதைப் பார்த்து மயங்கி விட்டேன். யாருமே பறிக்காமல் வீணாகிப் போகும் பூக்களை நான்



போய்ப் பறித்துத் தலைக்கு வைத்துக் கொண்டால் என்ன?

பெண் குழந்தை இல்லாத மாமாவுக்கு நான் ரொம்பச் செல்லமான மருமான். வருஷா வருஷம் லீவுக்கு மாமா வீட்டுக்குப் போகாமல் நான் இருந்ததே இல்லை. ரயில்வேயில் ஸ்டேஷன் மாஸ்டராய் இருக்கும் மாமாவுக்கு அடிக்கடி ஊர் மாற்றம். இந்த வருஷம் இந்தக் கிராமத்தில் குடி வந்தவுடனேயே எனக்கு லீவும் வந்ததால் ஓடி வந்து விட்டேன். கிராமத்துச் சூழலும் அமைதியும் எனக்கு ரொம்பப் பிடித்தமான விஷயங்கள்.

எவ்வளவு நேரம்தான் 'திருட்டு முழி' முழித்துக்கொண்டுகூடத்தில்நிற்பது? கொஞ்சம் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, சற்றே இரைந்து, "பாட்டி!" என்று குரல் கொடுத்தேன்.

பாட்டி சாவகாசமாய்த்திரும்பி என்னைப் பார்த்தாள். திடீரென்று புது மனுஷி ஒருத்தி உள்ளே வந்து நிற்பதைக் கண்ட அதிர்ச்சியோ, சலனமோ அவள் முகத்தில் இல்லை.

"யாருடி குட்டி நீ? என்ன வேணும்?" என்று சாவதானமாய்க் கேட்டாள் பாட்டி.

எனக்குப் பயம் விலகிற்று. வந்த காரியத்தைச் சொன்னேன்.

"அதுக்கென்ன? பேஷாய்ப் பறிச்சுக்கோ! வீணாய்த்தானே போகிறது?"

நான் சந்தோஷத்தோடு கொல்லைப் பக்கம் ஓடினேன். பூக்களைப் பறித்து மடியில் கட்டியவாறே இந்தப் பாட்டியைப் பற்றி யோசித்தேன்.

'பாவம், புருஷன் காலமாகிப் பல வருஷங்கள் ஆகிவிட்டதாம். பிள்ளை குட்டி கிடையாது.' பூர்வீகச் சொத்தான இந்த வீடும், 'மஞ்சக் காணியில்' கிடைக்கும் ஏதோ கொஞ்சம் சாப்பாடும்தான் ஜீவனத்துக்கு ஆதாரம். பாட்டியின் அண்ணா ஒருவர் உள்ளூரில் இருக்கிறார். அவர் மட்டும் அவ்வப்போது 'இருக்கியா, செத்தியா' என்று எட்டிப் பார்த்துவிட்டுப் போவாராம்.

கிழவிக்கு வயது எழுபது இருக்கும். யார் செய்த புண்ணியமோ, வெள்ளைப் புடைவையும் மொட்டைத் தலையுமாக நிற்காமல் சாதாரணமாகவே இருந்தாள். தலையெல்லாம் தும்பைப் பூதான். ஒடிசலான மாநிற தேகம். உருண்டை விழிகளும், முன்னால் துருத்திய பல்லும், ஒட்டிய கன்னமும் பாட்டி சின்ன வயதில் கூட லட்சணமாய் இருந்திருக்க மாட்டார் என்று பறைசாற்றின.

பாட்டிக்கு யாரோடும் கலந்து பழகும் குணம் கிடையாது போலிருக்கிறது. ஆண்டாண்டுகளாய்த் தனிமையை அனுபவித்து வந்திருக்கும் அவளுக்கு 'ஹிஸ்டீரியா' வின் அறிகுறிகள் இருப்பதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. எனக்கு அவளை நினைத்தால் பாவமாய் இருந்தது. பாட்டியைப் பற்றி எனக்கு இந்த விஷயங்கள் தெரிந்ததெல்லாம் என் மாமியின் மூலமாகத்தான்.

"யாருடீ குட்டி நீ? கொல்லையிலே என்ன பண்றே? யாரைக் கேட்டுண்டு உள்ளே நுழைஞ்சே?"

குழந்தைகளிடம் அப்பா வேண்டுமா, அம்மா வேண்டுமா என்று ஒரு போதும் கேட்காதீர்கள். அவர்களுக்கு இருவருமே வேண்டும். உங்களுடைய கேள்வியை யால் அவர்கள் மனத்தில் யாராவது ஒருவர் போதும் என்ற நினைப்பை நீங்கள் பதிய வைத்து விட்டீர்களேயானால், ஒதுக்கப் படுவது நீங்களாகவே கூட இருக்கலாம்.

— தங்கம்.

யோசனையில் மூழ்கியிருந்த நான் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தேன். பாட்டி இடுப்பில் கையை வைத்துக் கொண்டு கண்ணை உருட்டியவாறே என்னைப் பார்த்துத்தான் இப்படிக் கேட்டாள்!

நான் அதிர்ந்து போனேன். "என்ன பாட்டி யிது? உங்களிடம் சொல்லிக் கொண்டு தானே நான் பூப்பறிக்க வந்தேன்?"

"இத்தனூண்டா இருந்துண்டு பேசற பொய்யைப் பாருடீம்மா? இந்தக் கிழவின்னா எல்லோருக்கும் இளக்காரமான்னா போச்சு? இருந்த போது புருஷனும் மதிக்கலே, அவர் செத்தப்புறம் யாருமே மதிக்கலே..." பாட்டி ஆகாயத்தைப் பார்த்துக் கையைக் கையை ஆட்டிக் கொண்டு வாய் மூடாமல் புலம்ப ஆரம்பித்து விட்டாள்.

எனக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. பொங்கிக் கொண்டு அழுகை வர, கட்டுப்படுத்த முயன்று முடியாமல் போகவே, கண்களிலிருந்து கண்ணீர் கரகரவென்று வழியக் கேவ ஆரம்பித்தேன்.

கிழவி புலம்பலை நிறுத்திவிட்டு என்னைக் குழப்பமாய்ப் பார்த்தாள். அழுகையைப் பார்த்ததும் மனசு இளகியிருக்க வேண்டும். "சரி சரி, பூதானே வேணும்? பறிச்சிண்டு போ," என்றாள்.

"எனக்கு வேண்டாம். நான் போறேன்" என்று கிளம்பியவாறே நான் வீட்டுக்குள் நுழைந்தேன்.

"இருடி குட்டி இரு," என்றவாறே கிழவி பின்னாலேயே வந்தாள்.

"இப்படி சித்த உட்காரு. பூவைக் கொண்டா. நான் தொடுத்துத் தர்றேன்!" முற்றத்துக்கு நடுவே பாட்டி உட்கார்ந்து கொண்டாள். எனக்கு இப்போது சிரிப்புத் தான் வந்தது. கிழவியின் மனநிலையை நினைத்துப் பரிதாபமாகவும் இருந்தது. பேசாமல் உட்கார்ந்து கொண்டேன்.

பாட்டி என்னிடம் பேச்சுக் கொடுத்தாள். கிராமத்துக்காரர்களின் வழக்கப்படியே என் பூர்வீகம், அப்பா, அம்மா, உடன் பிறந்தார் எல்லாரைப் பற்றியும் கேட்டாள். பேச்சு வாக்கில் என் அண்ணா ஒருவன் அமெரிக்காவில் இருப்பதைப் பற்றியும் சொன்னேன்.

"அமெரிக்காவா? என் ஆத்துக்காரர் கூட அங்கேதான் போய் ஆராய்ச்சி பண்ணினார். அங்கேயே மண்டையைப் போட்டார்," என்று சொன்னாள் பாட்டி!

எனக்குச் சிரிப்பாய் வந்தது. சரியான பைத்தியம்தான் இந்தப் பாட்டி என்று நினைத்துக் கொண்டேன்.

சாயந்திரம் மாமா வந்ததும் நான் பக்கத்து வீட்டுப் பாட்டியின் வீட்டுக்குப் போய்ப் பூப் பறித்து வந்த கதையைச் சிரிக்கச் சிரிக்கச் சொன்னேன்.

"இதில் ரொம்ப வேடிக்கை என்ன தெரியுமோ? என் ராமு அண்ணா அமெரிக்காவில் வேலை பார்ப்பதாகச் சொன்னதும்,

"உங்கள் பழைய காஸ் ஸ்டவ்வுடன்

ரூ. 895/- மட்டுமே செலுத்தி



# Seetha™

ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்
காஸ் ஸ்டவ்
உடனே பெறுங்கள்"

10 வருட உத்திரவாதம்




IS:4246



* இச்சலுகை தமிழ்நாட்டில் மட்டுமே!

Also available :
Water Filter,
Hot Carrier,
Hot Casserole &
Heater Drum.

* காந்தம் கவராத AISI-304 சேலம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் தகடுகளால் வடிவமைக்கப்பட்டது.
* விசேஷமான பித்தளை பர்னர்கள் உள்ளதால் மிகுந்த எரிபொருள் மிச்சம்.
* முனைகள் சுத்தமாக மடித்தமையால் கைகளைக் காயப்படுத்தாது.
* சுத்தம், பராமரிப்பது மிக எளிது.

தயாரிப்பாளர்கள்:
**meera industries**
146, கிழக்கு கடலோரசாலை, சஞ்சம்பாக்கம்,
சென்னை 600 041. போன் : 416669
416663.

கிடைக்குமிடம் :
**Seetha**
**Home Appliances**
"K.R. பில்டிங்ஸ்"
124-A லாட்டிஸ் பிரிட்ஜ் ரோடு, அடையார்
சென்னை - 600 020. போன் : 418876.
(அடையார் சிக்னல் அருகில்)

# தாக பாரம்



## எடை தூக்குபவருக்கும் லிம்கா
## எடை மிகுந்தவருக்கும் லிம்கா

நீங்கள், எடை தூக்கி தூக்கி, அல்லது உங்கள் எடையை சுமந்து சுமந்து களைத்து தாகத்தால் தவிக்கும் பொழுது... ஐஸோடானிக் ஸால்ட் அடங்கிய கிருமிகள் அற்ற லிம்கா அருந்தி தாகத்தை தணிப்பீர்.




எலுமிச்சை நீர்போன்ற சுவையான பானம் குளிர்வித்துக் கொடுக்கவும்.




RADEUS/PE/L/2-89-TAM

ARTIFICIALLY FLAVOURED. CONTAINS NO FRUIT JUICE OR FRUIT PULP
® THE REGISTERED TRADEMARK OF PARLE (EXPORTS) LTD., BOMBAY.

அந்தப் பாட்டி, தன் ஆத்துக்காரரும் அமெரிக்காவில் - போய் இருந்ததாகச் சொன்னாளே பார்க்கணும்!'' நான் விழுந்து விழுந்து சிரித்தேன்.

"சிரிக்காதே; பாட்டி நிஜம்தான் சொல்லியிருக்கிறாள். அந்தக் காலத்திலேயே 'அஸ்டிரானமியில்' ஆராய்ச்சி பண்ணுவதற்காகப் பாட்டியின் புருஷன் அமெரிக்கா போனாராம். பாட்டியின் அண்ணா கிச்சாமி மாமா என்னிடம் ஏற்கெனவே சொல்லியிருக்கிறார்,'' என்றார் மாமா.

நான் மூக்கின்மேல் விரலை வைத்தேன். எனக்குப் பாட்டியின் மீது சுவாரஸ்யம் அதிகமாயிற்று.

கடந்த மூன்று நாலு நாட்களாக நான் விடாமல் பாட்டியின் வீட்டுக்குப் பூப்பறிக்கப் போனேன். பாட்டி என்னோடு சிநேகமாகி விட்டாள் என்றுதான் சொல்ல வேண்டும். நடுநடுவே 'ஹிஸ்டீரியா' போல வந்து சம்பந்தமில்லாமல் உளறுவதோ, திட்டுவதோ உண்டு என்றாலும் பாட்டியின் மீது எனக்கு வந்துவிட்ட ஓர் அபிமானத்தால் அது எனக்குப் பெரிதாய்ப் படவில்லை.

ஒருநாள் சாயந்திரம் பாட்டியின் வீட்டு முற்றத்தில் பூத் தொடுத்துக் கொண்டே கேட்டேன்.

"ஏன் பாட்டி, உங்க ஆத்துக்காரர் எப்படி அமெரிக்கா போனார்?'' என்று.

"அவருக்கு அசாத்திய மூளைடி. ராத்திரியெல்லாம் சதா ஆகாயத்திலே இருக்கிற நட்சத்திரங்களையெல்லாம்வெறிச்சுப்பார்த்திண்டிருப்பார். இல்லையானால் சிம்னி விளக்கை ஏத்தி வைச்சுண்டு மாயமாய்க் கணக்குப் போட்டுண்டு இருப்பார். நம்மூர்க்காரர்களுக்கு இவர் மூளை புரியலை. பட்டணத்திலே காலேஜிலே சேர்ந்து படிச்சப்போ, வெள்ளைக்காரப் புரொபஸர் இவரைப் பத்தித் தெரிஞ்சு கொண்டான். எங்களுருக்கு வந்து ஆராய்ச்சி பண்ணுடான்னு சீமைக்குக் கூட்டிண்டு போனான். என்னவோ எரி நட்சத்திரம் பத்தி ஆராய்ச்சி பண்ணினார்னு சொல்லிக் கேள்வி. எனக்கு என்ன, நாலு எழுத்தா படிச்சிருக்கேன்? மரமண்டை ஒன்றும் புரியாது...'' பாட்டியின் பேச்சு புலம்பலாய் மாறலாயிற்று.

"அவர் பேரென்ன பாட்டி?''

"அவர் காலந்தான் முடிஞ்சாச்சே? பேரைச் சொன்னா என்ன? ராமசேஷன்னு பேரு. அவர் கையெழுத்தெல்லாம் முத்து முத்தாய் இருக்கும். தலையெழுத்துத்தான் சரியில்லே. குப்பை குப்பையாய் எத்தனை நோட்டு எழுதியிருக்கார்...! இன்னும் எல்லாம் பரண் மேலே கெடக்கு...''

பி.எஸ்ஸி. பௌதீகமாணவியான எனக்கு சுவாரஸ்யம் அதிகமாயிற்று. ஐம்பது வருஷங்களுக்கு முன்னால் இந்த குக்கிராமத்து விஞ்ஞானி என்னதான் ஆராய்ச்சி பண்ணியிருப்பார்? பாட்டியின் அனுமதியோடு, ஏணி வைத்துக் கொண்டு பரண் மீது ஏறினேன். பழுப்பேறியும், ஆங்காங்கே செல்லரித்துப் போயிருந்த நோட்டுப் புத்தகங்களை



கல்யாண சீசனில் உங்களுக்குக் கிடைக்கும் பேசினில் இரண்டு ரூபாய் செலவு செய்து சிறு துளைகள் போட்டுக் கொண்டால் வடிதட்டாக உபயோகிக்கலாம்.

— கற்பகம்.



ஜாக்கிரதையாய்க் கீழிறக்கித் தூசி தட்டினேன். ஒன்றிரண்டைப் பிரித்துப் பார்த்தேன். சூரிய மண்டலக் கிரக அமைப்புகளின் படங்கள், அடித்தும் திருத்தியும் எழுதிய கணிதங்கள், ஃபார்முலாக்கள் போன்றவை கண்ணில் பட்டன.

பாட்டியின் அனுமதியோடு ஒரு நோட்டை மட்டும் எடுத்துக் கொண்டு மற்றவற்றை மீண்டும் பரண் மீது ஏற்றினேன்.

லீவு முடிந்து காலேஜ் திறந்ததும் முதல் காரியமாய் எங்கள் புரொபஸர் ராமமூர்த்தியைப் பார்த்தேன்.

"பேரு என்ன சொன்னே? ராமசேஷனா? எங்கோ காதில் விழுந்த பேரா இருக்கேம்மா. அஸ்ட்ரோ ஃபிஸிக்ஸ் விஷயம் தெரிந்த யாரையாவது கேட்டால் மேலும் விவரம் கிடைக்கும். ரெண்டு நாள் டயம் கொடு'' என்றார் அவர்.

ரெண்டு நாட்கள் கழித்து, புரொபஸர் கூப்பிடுவதாகச் சொல்லி பியூன் வந்து கூப்பிட்டான். போனேன்.

"வாம்மா; ஐ ஹேவ் சம்திங் இன்ட்ரஸ்டிங் ஃபார் யூ. ஐ. ஐ. டி. யில் டாக்டர் பஞ்சரதம் என்று ஒரு புரொபஸர் இருக்கிறார். இந்தச் சுற்று வட்டாரத்திலேயே அஸ்ட்ரோ ஃபிஸிக்ஸில் அவர்தான் அதாரிட்டி. அவருக்கு ஃபோன் பேசிக் கேட்டேன். பூமியில் வந்து விழும் விண் கற்களின் பௌதீக குணங்களைப் பற்றி 'ராமசேஷன்ஸ் ஹிப்பாதிஸிஸ்' என்று ஒரு தனி தியரியே இருக்கிறதாம். அந்த தியரி முழுமை அடைவதற்கு முன்னாலேயே ராமசேஷன் காலமாகி விட்டார் போலிருக்கிறது. அதில் குறையாய் இருக்கும் பல கணித மாடல்களுக்குப் பிற்பாடு வந்த ஆராய்ச்சியாளர்களால் முழு உருவம் கொடுக்க முடியவில்லையாம். நீ கொண்டு வந்த நோட்டைப் பற்றிச் சொன்னேன். டாக்டர் பஞ்சரதம் ரொம்ப 'திரில்' ஆகிவிட்டார்! ராமசேஷனின் நோட்டோடு உன்னை கையோடு அனுப்பி வைக்குமாறு எங்கிட்டே சொன்னார்.''

**பா**ட்டி போட்டுக் கொடுத்த ஒலைப் புகை வாசனை அடித்த காப்பியைக் குடித்து விட்டு டாக்டர் பஞ்சரதம் பரண் மேலிருந்த நோட்டுக்கள் அத்தனையையும் அள்ளிக் கொண்டு

பக்கத்து வீட்டுக்குப் போய் விட்டார். நான் மட்டும் பாட்டியோடு ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தேன். எனக்கு இப்போது பாட்டியைப் பார்த்தால் ஏதோ ஒரு பழம்பெரும் ஹீரோயினோடு பரிச்சயம் ஏற்பட்டாற்போல் பெருமையாய் இருந்தது! ஒரு பெரிய விஞ்ஞானியின் மனைவி எனக்குத் தெரிந்த பாட்டி என்றால் சும்மாவா?

ஐம்பது வயதிலும் டாக்டர் பஞ்சரதத்தின் சுறுசுறுப்பு என்னை வியக்க வைத்தது. ராமசேஷனின் நோட்டை என்னிடமிருந்து வாங்கி ஒருநாள் படித்துப் பார்த்து, என்னையும் அழைத்துக் கொண்டு நேரே பாட்டியின் இந்தக் கிராமத்துக்கே வந்து விட்டார்.

"விஞ்ஞான உலகத்துக்கு உன் உபயத்தில் ஒரு பெரிய பொக்கிஷம் கிடைக்கப் போகிறது, பார்" என்று ரயிலில் வரும்போது என்னிடம் சொல்லிக் கொண்டே வந்தார் அவர். ஆனாலும், பாட்டி நோட்டுக்களையெல்லாம் கொடுப்பாளோ என்று அவருக்கு ஒரே கவலை. எனக்கும் உள்ளூற உதறல்தான். பாட்டியின் 'மூடை'ப் பற்றி யாரால் சொல்ல முடியும்?

"காசா பணமா? வெறும் காகிதம்தானே? என்னைப் பொறுத்த வரைக்கும் அது வேண்டாத குப்பைதான். அள்ளிண்டு போங்கோ. பரணாவது சுத்தமாயிடும்," என்று தூக்கிக் கொடுத்து விட்டாள் பாட்டி.

ஊஞ்சலில் ஆடியபடியே பாட்டியைக் கவனித்தேன். சாதாரண மூடில்தான் இருந்தாள் அவள். ஒரு பெரிய விஞ்ஞானியோடு பாட்டியின் மண வாழ்க்கை எப்படி இருந்திருக்கும் என்று எனக்கு அறிந்து கொள்ள ஒரே ஆவல்!

"பாட்டி, உங்களுக்கு அவரோட எத்தனை வயதில் கல்யாணம் ஆச்சு?"

"சரியா ஞாபகமில்லேடி. பத்துப் பன்னிரண்டு வயதிருக்கும். அப்போது அவருக்குப் பதினாறு பதினேழு வயதிருக்கும்."

"அவர் பார்க்க எப்படி இருப்பார்?"

"மூஞ்சிய நிமிர்ந்து பார்த்துப் பேசினதாகவே ஞாபகமில்லேடி. எத்தனை மாமாங்கம் முடிஞ்சுப் போச்சு? அதோ பிறையிலே ஒரு போட்டோ இருக்கு பாரு."

எடுத்துப் பார்த்தேன். பழுப்பேறிய அந்தப் படத்தில் உச்சிக் குடுமியும் வட்ட முகமுமாய்க் கோபமாய் விழித்துக் கொண்டிருந்தார் அந்த விஞ்ஞானி.

"பார்த்தால் கோபக்காரராய்த் தெரிகிறாரே?"

"அதை ஏன் கேட்கிறே? சரியான முசுடு; துர்வாசர்தான்."

"ஏன் பாட்டி? அவரோட விஞ்ஞான ஆராய்ச்சி பற்றியெல்லாம் உங்ககிட்டே சொல்வாரா? உங்க ஹெல்ப் ஏதாவது கேட்பாரா?" — ரேடியோ டீ.வி. யில் பேட்டி காண்பவர்களைப் போல், நானும் கேள்விகளைத் தொடுத்தேன். 'ஒவ்வொரு பெரிய மனிதனுக்குப் பின்னால் ஒரு பெண் இருக்கிறாள்' என்று சொல்லுவார்களே, பாட்டி விஷயத்திலும் அது உண்மையா? என்று தெரிந்து கொள்ள ஒரே ஆவல்.,

"எங்கிட்டேயா? என்னத்தைச் சொல்றது? நானோ படிப்பறிவில்லாத முண்டம்; எங்கிட்டே சொன்னாலும் என்ன புரியும்?"

"அவர் மெட்ராஸிலே காலேஜிலே படிச்சார்னு சொன்னேன். அப்புறம் அங்கேர்ந்து நேரே அமெரிக்கா போயிட்டாரா? நீங்க ரெண்டு பேரும் சேர்ந்து எப்போ குடித்தனம் நடத்தினீங்க?"

பாட்டி பெருமூச்சு விட்டாள். பிறகு மோட்டு வளையைப் பார்த்தவாறே பழங்கதையைச் சொல்ல ஆரம்பித்தாள்.

"நான் பெரியவளானதும் புக்ககத்திலே கொண்டு வந்து விட்டாங்க. எனக்கு மாமனார் கிடையாது. உடம்பு முடியாத மாமியார் கிழவி ஒருத்திதான். சதா ரேழியிலே படுத்துண்டு அதிகாரம் மட்டும் பண்ணிண்டிருப்பா. வருமானம்னு சொல்லிக்கற மாதிரி ஒழுங்கா ஒண்ணும் கிடையாது. ரொம்ப கஷ்ட ஜீவனம்.

"இவருக்குப் படிப்பிலே ஒரே ஆசை. கும்பகோணத்திற்குத் தினமும் வண்டி கட்டிண்டு போய் ஹைஸ்கூல் படித்தார். அம்மா கிட்ட ஒரே பயம். என்னை மதிச்சு அனுசரணையா நாலு வார்த்தை பேசத் தெரியாது. சாப்பாடு ஏதோ கொஞ்சம் அணில் மாதிரி கொறிப்பார். ஆனாலும் நாக்குக்கு வக்கணையா இருக்கணும். உப்பு புளிப்பு கொஞ்சம் மாறினாலும் தட்டை விட்டெறிஞ்சு ஆர்ப்பாட்டம் பண்ணுவார்..."

பாட்டி தடங்கலின்றிப் பேசிக் கொண்டே இருந்தாள். நான் குறுக்கே இடை மறிக்காமல் கேட்டுக் கொண்டே இருந்தேன்.

"அவருக்குப் பசி எப்போது எடுக்கும், எப்போது எடுக்காதுன்னு யாருக்கும் தெரியாது. பசிச்சபோது சோறு இருக்கணும். அவ்வளவுதான். அந்தக் காலத்திலே புருஷன் சாப்பிடாமே பெண்டாட்டி சாப்பிடலாமோ? மாமியார்க்காரி கொன்னுட மாட்டாளோ? எத்தனை நாள் நான் பசியும் பட்டினியுமாக் காத்திண்டிருந்திருக்கேன்? தூங்காம முழிச்சிண்டிருந்திருக்கேன்" பாட்டி கொஞ்சம் நிறுத்தினாள்.

"ஏன் பாட்டி, அவர் எப்போது நட்சத்திர ஆராய்ச்சியெல்லாம் பண்ணினார்?"



கல்யாண சீசனில் உங்களுக்குக் கிடைக்கும் பேசினை என்ன செய்வதென்று தெரியவில்லையா? அவற்றைத் திருப்பி யாரிடம் கொடுப்பது என்பதும் பிரச்னை. கவலைப்படாதீர்கள். சிறிது உயரமான பேசினாக இருந்தால் பேசினின் மத்தியில் ஒரு துளை போட்டு, கடையில் 2 அல்லது 3 ரூபாய்க்குக் கிடைக்கும் எவர்சில்வர் 'நாப்' வாங்கிப் பொருத்தி விடுங்கள். வாணலி மூடி ரெடி.

— கற்பகம்.

"பள்ளிக்கூடத்திலே படிக்கிறப்பவே ராத்திரியெல்லாம் ஊர்க் கோடியிலே களத்து மேட்டிலே நின்னுண்டு மாயமா ஆகாயத்தைப் பார்த்துண்டு நின்னுண்டிருப்பார். பாதி நாட்கள், நடு ராத்திரியிலே மாமியார் பக்கத்து வீட்டு மாட்டுக்காரனை அனுப்பி அவரை இழுத்துண்டு வரச் சொல்லுவார். ஸ்காலர்ஷிப் கிடைச்சுப் பட்டணம் போய்க் காலேஜிலே சேர்ந்தார். அங்கே போய்த்தான் இந்த ஆராய்ச்சிகளையெல்லாம் ரொம்பப் பைத்தியமாயிடுத்து. லீவுக்கு இங்கே வந்தாலும் சதா புத்தகமும் நோட்டுமாகவே இருப்பார். விடிய விடியக் கணக்குப் போட்டுண்டு இருப்பார்..."

"ஏன் பாட்டி, தன் ஆராய்ச்சி பத்தியெல்லாம் உங்ககிட்ட சொன்னாறா? நீங்க அதுல ஏதாவது உதவியா இருப்பேளா?" என்று மறுபடியும் கேட்டேன்.

"எங்கிட்டேயா? என்னை ஒரு மனுஷியா மதிச்சு இதெல்லாம் சொல்லுவாரா என்ன? நானோ படிப்பறிவில்லாத முண்டம். எனக்கென்ன தெரியும்? இருந்தாலும், அவருக்குப் புடிச்ச விஷயம் ஒண்ணைப் பற்றி பேசினால் கொஞ்சம் நெருங்கி வருவாரோங்கற நப்பாசைல நானே போய் பேச்சுக் கொடுப்பேன். ஏதோ கொசுவைப் பார்க்கிற மாதிரி பார்ப்பார். 'ஜடம் உனக்கு சொன்னாலும் புரியாது, சும்மா இரு, தொந்தரவு பண்ணாதே'ன்னு திட்டித் தொறத்துவார்..."

பாட்டிக்குக் குரல் கம்மிற்று. கண்கள் பனித்தன. !

"இந்த மனுஷன் எதுக்குக் கல்யாணம் பண்ணிக்கணும்? சம்சார சந்தோஷங்களிலே நாட்டம் கிடையாது. குழந்தை குட்டி வேணும்னு நினைச்சது கிடையாது, தன் மூளை, தன் சுயநலம்..."

நான் பாட்டியை இடைமறித்தேன். "அவர் மாதிரி பெரிய மூளை உள்ளவா இப்படித்தான் வித்தியாசமா இருப்பா பாட்டி" என்று சமாதானம் சொன்னேன்.

"என்னடி பெரிய மூளை? மனுஷத்தன்மை இல்லாத ஜென்மம்? அவர் விஷயம் அவருக்கு பெரிசாயிருக்கலாம். அதுக்கென்ன அப்படி ஒரு அகங்காரம்? தெரியுமாடி உனக்கு? அந்தக் காலத்திலேயே நான் பாட்டுப் பாடினா தேனாயிருக்கும்னு என் அம்மா உருகுவாள். முறைப்படி ஆதரிச்சிருந்தான்னா ஒரு 'எம்.எஸ்.' மாதிரி வந்திருப்பேன். விதவிதமாய் கோலம் போடறதிலே என்னை மிஞ்ச அக்கம் பக்கம் யாரும் கிடையாது. என் இந்த சாமர்த்தியத்தையெல்லாம் இவர் ஒரு பொருட்டா மதிச்சதுண்டா? வாய்க்குள்ளே நான் பாட்டு முணுமுணுத்தாலும் திட்டு விழும். எனக்குத்தான் இந்த சாமர்த்தியமெல்லாம் இருக்கேன்னு நான் சோறு வடிக்காமல் பாட்டுப் பாடிண்டு, கோலம் போட்டுண்டு உட்கார முடியுமா? இந்த மனுஷன் தன் ஆராய்ச்சிதான் முக்கியம்னு என்னை

சுவையில்லாத செவ்வாழை, வெயிற்கால 'சிறுநீர் சுருக்குக்'ச் சிறந்த மருந்து. நேந்திரம் பழத்தை வெந்நீரில் வேகவிட்டு, தேன் விட்டு அருந்தினால் வெயிலுக்கு நல்லது.

— சித்ரா.

அனாதையாய் விட்டுட்டு சீமைக்குப் போனானே, அவனுக்கு மனசுன்னு ஒண்ணு உண்டாடி? இங்கே நான் அரை வயத்துச் சோத்தோடு தனியாய் மாமியார் கிழவியோடு மாரடித்த பாவம் சும்மா விடுமாடி அவனை..."

அவ்வளவுதான் பாட்டிக்கு ஹிஸ்டீரியா வந்து ஓவென்று புலம்ப ஆரம்பிக்க நான் கழண்டு கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

அடுத்த ஆறு மாதங்களில் நடந்த விஷயங்கள் பிரமிப்பானவை. டாக்டர் பஞ்சநதம் லேசுப்பட்டவரில்லை. பாட்டி வீட்டிலிருந்து கொண்டு போன காகிதங்களுக்குள் புகுந்து முத்துக் குளித்தார். அமெரிக்கா ஓஹையோ ஸ்டேட் யூனிவர்ஸிட்டிக்கு ஒரு அவசரப் பயணம் போனார். 'ராமசேஷன்ஸ் ஹிப்பாதீஸிஸ்' இல் பூரணமாகாத விஞ்ஞான கணக்குகளுக்கான தீர்வுகள் ராமசேஷனின் வீட்டிலிருந்து கொண்டு போன காகிதங்களில் குறிப்புகளாய்க் கிடைத்தன. கம்யூட்டர்களின் உதவியோடு கணக்குகள் முடிக்கப்பட்டு அதிசயத்தக்க விஞ்ஞான முடிவுகள் வெளிவந்தன. விஞ்ஞான உலகமே ராமசேஷனைப் பற்றிப் பேசலாயிற்று. பத்திரிகைகளில் பத்தி பத்தியாய் செய்திகள் வந்தன. கிராமத்து மூலையில் சோற்றுக்கும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் விசாலாட்சிப் பாட்டிக்கு யோகம் அடித்தது. அமெரிக்க யூனிவர்ஸிட்டி கிழவிக்காக பத்தாயிரம் டாலர் பண முடிப்பை அறிவித்தது. இந்திய அரசாங்கம் தன் பெருமைக்காக மாதம் ஆயிரம் ரூபாய் கிழவிக்குப் பென்ஷன் அறிவித்தது.

தமிழக அரசின் சார்பில் ஒரு மாபெரும் விழா நடத்தி விஞ்ஞானியின் மனைவியைக் கௌரவிக்க ஏற்பாடாயிற்று. விஞ்ஞானியின் புகழை வெளிச்சத்துக்குக் கொண்டு வர நானும் ஒரு கருவியாய் இருந்ததாலும், பாட்டிக்கு நான் ரொம்ப நெருங்கியவளாய் ஆகிவிட்டதாலும் விழாவின் அமைப்புக் குழுவில் எனக்கு முக்கிய பங்கு கொடுக்கப்பட்டது.

கூசங்கிய பட்டுப் புடவையுடன் விழா மேடையில் மிரண்டு போய் உட்கார்ந்திருந்தாள் பாட்டி. தைரியத்துக்கு நான் பக்கத்திலேயே இருந்தேன். அமெரிக்க யூனிவர்

ஸிட்டியிலிருந்து ஒரு பிரதிநிதி விசேஷமாக இந்த விழாவுக்கென வந்திருந்தார். மாநிலக் கல்வி அமைச்சர் ஒரு மணி நேரமாய் பேசிக் கொண்டிருந்தார். அவரும் அவருக்கு முன்னால் பேசியவர்களும் 'வெற்றி பெற்ற மனிதனுக்குப் பின்னால் ஒரு பெண்ணாக' பாட்டி இருந்ததைத் தவறாமல் சொன்னார்கள்.

பாட்டி நாற்காலியில் நெளிய ஆரம்பித்தாள். அவள் கைகள் புடைவை நுனியைத் திருக ஆரம்பித்தன. பாட்டியின் மூச்சு பெரிதாய் வந்தது. எனக்குப் பயம் வந்தது. பாட்டிக்குக் கோபம் வந்து கத்த ஆரம்பிப்பதற்கு முன்னால் இப்படித்தான் செய்வாள்.

பாட்டி என் காதருகே குனிந்து "எனக்கு ரெண்டு வார்த்தை பேசணும்னு ஆசையா இருக்குடி" என்றாள். நான் வியர்த்தேன். பாட்டியைத் தடுத்துப் பார்த்தேன். பாட்டியோ பிடிவாதமாய் இருந்தாள்.

வேறு வழியின்றி நான் விஷயத்தை விழாத் தலைவரின் காதில் போட உடனே அவர் "இப்போது மாண்புமிகு. விஞ்ஞானியின் துணைவியார் ஓரிரு வார்த்தைகள் பேசுவார்" என்று அறிவிக்க, கரகோஷம் கிளம்பிற்று.

மைக்கொன்று பாட்டியின் முன்னே வைக்கப்பட்டது.

பாட்டியின் கைகள் நடுங்கின. குரல் குழறிற்று.

"எனக்குக் கோர்வையாப் பேச வரலே; பெரியவர் மன்னிக்கணும். நீங்க கொடுக்கப் போற பணங்காசையும் உதவியையும் வாங்கிக்கிற தகுதியோ மனசோ எனக்கில்லே. எனக்கோ எழுபது வயசாச்சு. சந்ததி எதுவும் கிடையாது. இந்தப் பணங்காச வெச்சிண்டு இந்த வயசிலே நான் என்ன ரெண்டாம் கல்யாணமா பண்ணிக்கப் போறேன்?"

"உங்களுக்கெல்லாம் ராமசேஷன் மகாப் பெரிய மனுஷனாய் இருக்கலாம். என்னைப் பொறுத்தவரை அவர் ஹிருதயமே இல்லாத ஜென்மம். அவருக்கு வாழ்க்கைப் பட்டு நான் ஒரு சுகமும் அனுபவிச்சது இல்லே. அவர் உசிரோட இருந்த போதும் சரி, செத்தப்புறமும் சரி. நாப்பது அம்பது வருஷமா நடைப்பிணமா நான் அரை வயித்துச் சோத்தோட தனிமையிலே கஷ்டப்பட்டதெல்லாம் பட்டாச்சு. இன்னும் எத்தனை நாள்? இப்பவோ அப்பவோ போய்ச் சேர வேண்டியதுதானே?

"இந்தப் பணங்காசெல்லாம் நீங்களே வெச்சுக்குங்கோ. இந்த மாதிரி மகாப் பெரிய விஞ்ஞானியைக் கல்யாணம் பண்ணிண்டு சித்திரவதைப் படற பொண் குழந்தைகளைப் பார்த்து கண்டு பிடிச்சா, அவாளுக்கு ஒரு புனர் ஜென்மம் கொடுக்கறதுக்கு இந்தக் காசை வெச்சுக்குங்கோ; போங்கோ..."

பாட்டி பட்டென்று நாற்காலியில் உட்கார்ந்தாள். கூட்டமே ஸ்தம்பித்துப் போய் உட்கார்ந்திருந்தது;



'இவருக்குக் கோபமே வராதா?' என்று ஆச்சரியப்படும் அளவுக்குச் சாந்த குணம், எதிராளி தப்புச் செய்தாலும் தட்டிக் கொடுத்து மன்னிக்கும் பெருந்தன்மை; மென்மையான குரலில்சிரிக்கச்சிரிக்கப்பேசும்நகைச் சுவை; உள்ளமோ மாசுமறுவற்ற குழந்தை உள்ளம்!

இவை அனைத்தும் ஒன்று சேர்ந்தவர்தான் குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா! தம் மனைவிக்கு அறுபது வயது நிறைந்த போது மணிவிழாக் கண்ட அற்புதக் கணவர் அவர். குழந்தைகளோடு குழந்தையாக வாழ்ந்து மறைந்து விட்டார்.

நேரு பிறந்த நாளின் போது ஒவ்வொரு பதிப்பகத்தாரையும் கட்டாயப்படுத்தி, குழந்தைகளுக்கான புத்தகங்களைப் போடச் சொல்லுவாராம். குழந்தைகளுக்காக நிறைய நல்ல புத்தகங்கள் வரவேண்டும், நல்ல திரைப்படங்கள் வரவேண்டும் என்று கடைசிவரை சொல்லிக் கொண்டிருந்தார். குழந்தைகளுக்காக அவர் கண்டகனவுகளை நிறைவேற்றமுயலுவதுதான் நாம் அவருக்குச் செலுத்தும் சிறந்த அஞ்சலியாகும்.

# திக்குவாய் பிறவிக் கோளாறல்ல!









**பொ**துவாக எல்லாக் குழந்தைகளும், முதன் முதலாக நடக்க ஆரம்பிக்கும் போது, விழுந்து, தட்டுத் தடுமாறி எழுந்து நடக்கக் கற்றுக் கொள்வது போல், முதன் முதலாகப் பேசக் கற்றுக் கொள்ளும் போது, மெதுவாக, திக்கித் திக்கிப் பேசு வது சகஜம். பெரும்பான்மையான குழந் தைகள், நாளடைவில், திக்குவது நின்று சகஜமாகிப் பேசத் தொடங்குகிறார்கள். ஆனால் சில குழந்தைகளுக்கு, இது நரம்பு சம்பந்தமான கோளாறாகி, பல ஆண்டு களானாலும், சரளமாகப் பேச முடியாமல், திக்கிப் பேசுபவராக ஆகிவிடுகின்றனர். இது குழந்தையின் மன, உடல் வளர்ச்சியை யும், முன்னேற்றத்தையும் வெகுவாகப் பாதிக்கக் கூடியது.

ஆரம்ப நாட்களில் தனக்குச் சரியாகப் பேச முடியாததைக் குழந்தை புரிந்து கொள் ளக் கூடிய மனவளர்ச்சி பெற்றிருக்காது. ஆனால் நாட்கள் செல்லச் செல்ல, மற்ற குழந்தைகள் பேசுவதைக் கேட்கும் போது, தனக்கும் அம்மாதிரி சரளமான பேச்சு வரவில்லையே என்று குழந்தை ஒரு தாழ்வு மனப்பான்மைக்கு ஆளாகி விடுகிறது. இக் காரணத்தினால் மற்ற குழந்தைகளோடு விளையாடவும், சரளமாகப் பேசும் தம் வய தினர் மத்தியில் பழகவும் மிகத் தயங்கு கிறது. நாளடைவில் எல்லோரையும் ஒதுக்கி, தான் ஒதுங்கியே இருக்கும் பழக்கத் தைக் கொண்டு விடுகிறது. குழந்தை திக்கு வதை நிறுத்திச் சரளமாகப் பேச வேண்டு மானால், முதலில் குழந்தைக்குத் திக்கு எக் காரணத்தினால் ஏற்பட்டது என்பதைப் புரிந்து கொள்வது மிக அவசியம்.

**திக்கு ஏற்படக் காரணங்கள்:**

பொதுவாக, குழந்தைப் பருவத்தில் ஏற் படும் நரம்பு அதிர்ச்சியாலோ அல்லது குழந்தைக்கு ஏற்படும் பயங்கரமான அனு பவத்தாலோ திக்குவாய் ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறது. சில சமயம் கண்ணில் விழும் பூவுக்காகச் செய்யப்படும் இரண சிகிச்சை, டான்சில்ஸுக்காகச் செய்யப் படும் ஆபரேஷன், கக்குவான் இருமலின்

பின் விளைவு, தட்டம்மை, இன்ஃப்ளூயன்சா, ரிக்கெட்ஸ் எனும் எலும்பு சம்பந்தமான வியாதி முதலானவை, குழந்தைக்குப் பயங்கர மன அதிர்ச்சியைக் கொடுக்கின்றன. பீதி, மன உளைச்சல் ஏற்பட்டு இதனால் பேசுவதில் தடை ஏற்படுகிறது.

**திக்குவாய் ஏற்படுத்தக் கூடிய சூழ்நிலைகள்:**

1. குடும்பத்தில் இன்னொரு குழந்தை பிறக்கும்போது முதல் குழந்தைக்கு ஏற்படும் பொறாமை — இரண்டாவது குழந்தை பிறக்கும் போது, முதல் குழந்தைக்குப் பொதுவாக இரண்டிலிருந்து மூன்று வயது இருக்கலாம். இன்னொரு குழந்தை பிறந்தவுடன், அம்மாவின் கவனம் இக்குழந்தையின் மீது திரும்புகிறது. தன்னை யாரும் சரியாகக் கவனிக்க மாட்டேன் என்கிறார்களே என்பது முதல் குழந்தைக்கு மிக அதிர்ச்சி தரக் கூடிய சூழ்நிலையாகும்.

2. பல பெற்றோர்கள், தம் குழந்தை சிறு தவறு செய்து விட்டால் கூட, மிகவும் கோபம் கொண்டு, எதனால் அத்தவறு ஏற்பட்டது என்று தெரிந்து கொள்ள முயற்சிக்காமல், குழந்தையைப் போட்டுப் புரட்டி எடுக்கும் பழக்கம் உடையவர்களாக இருப்பார்கள். தான் செய்தது தப்பு என்பதையே புரிந்து கொள்ள முடியாத நிலையில் இருக்கும் குழந்தைக்கு, மேலும் தன்னை எதற்காக அடித்து நொறுக்கிறார்கள் என்றும் தெரியாமல் திகைத்து நின்றுவிடும் நிலை. இது குழந்தையின் மனத்தில் பெரிய அதிர்ச்சியை உண்டு பண்ணும். முணுக்கென்றால் குழந்தையை அடித்து நொறுக்கும் பழக்கமுடைய பெற்றோர்கள் பலர் உண்டு. கணவனுக்கு மனைவி மீதோ அல்லது மனைவிக்குக் கணவன் மீதோ இருக்கும் மனத்தாங்கலைத் தீர்த்துக் கொள்ளும் விதத்திலோ, மருமகளுக்கு மாமியார், மாமனார் மீது ஏற்படும் மனத்தாங்கலைத் தீர்த்துக் கொள்ளும் விதத்திலோ குழந்தைகளை அடித்து நொறுக்கி விடுகிறார்கள். இதை ஆங்கிலத்தில் **Battered Child Syndrome** என்று குறிப்பிடுகிறார்கள். மேலே குறிப்பிடப்பட்டுள்ள சூழ்நிலையில் குழந்தை மிகப் பீதியடைந்து பலத்த அதிர்ச்சிக்குள்ளாகிறது.

குழந்தையை ஒரேயடியாக எல்லாவற்றிலும் கட்டுப்படுத்துவது. மிலிடரியில் பின்பற்றப்படும் கட்டுப்பாடுகள் போன்று மிகக் கண்டிப்பான வரைமுறைகள். சில வீடுகளில் அப்பா அலுவலகத்திலிருந்து வரும்போது, குழந்தைகள் எதிரிலேயே வராது. எங்காவது ஓடி ஒளிந்து கொள்ளும். அப்பா என்றாலே சிம்ம சொப்பனம் ஆகிவிடுவது ஏன்? மிகச் சிறிய தவறுக்காகப் பயங்கர தண்டனை கொடுப்பது (சாப்பாடு போடாமல் அறையில் பூட்டி வைப்பது, நான் சொல்லும் வரை ஒரே காலில் இதே மூலையில் நில்லு, மண்டிக்கால் போடு போன்றவை).

குழந்தையின் வரையறைகளைப் (limitations) புரிந்து கொள்ளாமல் குழந்தையிடமிருந்து அதிகமாக எதிர்பார்ப்பது. தற்காலத்தில் குழந்தைகளை ஆங்கிலப் பள்ளிகளில் சேர்ப்பது அந்தஸ்து சம்பந்தப்பட்ட பிரச்னையாகிவிட்டது. இப்பள்ளிகளில் சிலவற்றில் மிக்க கட்டுப்பாடுகளைக் கடைப்பிடிக்கிறார்கள். மாதா மாதம் பரீட்சை என்று ஒன்று நடத்தி ரேங்க்குகளை அறிவிக்கிறார்கள். ஒரு குழந்தை ஒரு மாதம் முதல் ரேங்க் எடுத்திருக்கலாம். அடுத்த மாதத்தில் ஐந்தாவதோ எட்டாவதோ ரேங்க் வரலாம். எந்தக் காரணத்தால் குழந்தை பின்தங்கிவிட்டது என்பதைச் சற்றும் சிந்தித்துப் பாராமல் அக்குழந்தையைப் போட்டு அடித்து (''உனக்கு வெட்கமாக இல்லை. இப்படி எட்டாவது ரேங்க் வாங்கியுள்ளாயே) விடும் தாய்மார்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு வருகிறது. ரேங்க் என்றாலே என்ன என்று புரிந்து கொள்ள முடியாத அந்த எல். கே. ஜி. அல்லது யூ. கே. ஜி. குழந்தைக்கு, எட்டாவது ரேங்க் என்ன என்பதைப் புரிந்து கொள்ள முடியுமா என்ன?

குழந்தையின் கஷ்டங்களைப் புரிந்து கொள்ளாமல், அவைகளிடமிருந்து அளவுக்கு மீறிய எதிர்பார்ப்புகளினால் குழந்தைக்கு மன உளைச்சல் ஏற்படுகிறது. அதிக பயமும் உண்டாகிறது. இதனால், குழந்தை தன் எண்ணங்களை வார்த்தையால் வெளிப்படுத்தும்போது தடை ஏற்படுகிறது.

மேலும் ஒரு குழந்தையை, அதே வீட்டில் இருக்கும் மற்ற குழந்தைகளுடனோ அல்லது அக்கம்பக்கத்தில் உள்ள மற்ற குழந்தைகளுடனோ ஒப்பிட்டுப் பேசக் கூடாது. ''அவனைப் பார். அவனுக்கும் உன் வயசு தான். எப்போதும் முதல் ரேங்க் வருகிறான், எத்தனை பரிசுகள் வாங்கியிருக்கிறான்? எப்படிச் சுறுசுறுப்பாகத் துறுதுறுவென்று

**யான் பெற்ற இன்பம்**
**நீங்களும் பெறலாம்!**

முதல் நாள் வடை சுடுவதற்காக ஊற வைத்த உளுத்தம்பருப்பை, ஏதோ காரணத்தினால் அரைக்க முடியாமல் போகவே, ஃப்ரிஜ்ஜில் வைத்து விட்டேன். மறுநாள் விருந்தினர் சிலர் வரவே, ஊற வைத்திருந்த பருப்பை கிரைண்டரில் நீர் தெளிக்காமல் அரைத்து வடை தட்டி எண்ணெயில் போட வடை புஸ் புஸ்வென்று உப்பிக் கொண்டும், ஸ்பான்ஜ் மாதிரி மெதுவாகவும் இருப்பதைக் கண்ட என் விருந்தினர் என்னைப் பாராட்டிய பொழுது நான் பெற்ற மகிழ்ச்சியை நீங்களும் பெற முதல் நாளே ஊற வைத்த பருப்பை ஃப்ரிஜ்ஜில் வைத்து மறு நாள் சுட்டுப் பாருங்களேன்!

— டி. சந்திரலேகா.

நாம் விஞ்ஞானியாக இருக்கலாம். அதி மேதாவிகளாகவும் இருக்கலாம்.

நர்சரி பள்ளியில் பணியாற்றும் ஆசிரியைக்கு நம்மளவிற்கு நிச்சயமாகவே விஷயம் தெரியாமல் இருக்கலாம். ஆனால் நீங்கள் ஆசிரியைக்கு ஒன்றும் தெரியாது என்று ஒரு போதும் குழந்தைகளிடம் ஏளனமாகக் கூறாதீர்கள்.

குழந்தையைப் பொறுத்தமட்டிலும் ஆசிரியர் ஒரு மேதை. அவரிடமிருந்து கற்பதற்கு ஏராளமாக உண்டு.

அவரிடமிருந்து கற்க வேண்டியதைக் கற்று முடித்ததும் குழந்தை தானாகவே வேறு ஆசிரியரிடம் படிக்கப் போய் விடும். அதேசமயம், தன்னுடைய பழைய ஆசிரியரிடம் அன்பையும் மதிப்பையும் என்றும் கைவிடாமல் கண்ணியமாக நடக்கவும் அது முற்படும். அந்த ஓர் உயர்ந்த தன்மையை நீங்களே அழித்துவிடக் காரணமாகி விடாதீர்கள்.

— தங்கம்.

இருக்கிறான்'' என்று குழந்தையின் எதிரில் பேசும் போது குழந்தைக்குத் தாழ்வு மனப்பான்மை வந்துவிடும். இது திக்குவாய்க்கு அடிகோலும்.

குழந்தைக்கு வெகுநாட்களாகப் பழகிவிட்ட ஒரு பக்கத்தை குழந்தையைப் பயங்கரமாக மிரட்டி, பலவந்தமாக நிறுத்தும் போதும் திக்குவாய் ஏற்படலாம். எடுத்துக் காட்டாக, விரல் சூப்பும் பழக்கத்தையோ அல்லது இடக்கைப் பழக்கத்தையோ பலவந்தமாகத் தடை செய்யும் போது, குழந்தையின் மனநிலையில் மிக வேறுபாடு ஏற்பட்டு, அதனால் திக்குவாய் ஏற்படலாம்.

பெரியோர்களுடன் குழந்தை பேசிக் கொண்டேயிருக்கும் போது, ''பெரியோர்களுடன் என்ன பேச்சு, போய் விளையாடு'' என்று பலவந்தமாகக் குழந்தையை மிரட்டித் தடுக்கும்போது, குழந்தை பேச வேண்டும் என்று நினைத்து உண்டாகும் வார்த்தைகளில் பாதி வாய்க்குள்ளேயே நின்று விடுகின்றன. இதனால் பிற்பாடு, குழந்தை தான் பேச வேண்டும் என்று நினைக்கும் போது, நினைத்த மாதிரி சொற்கள் வெளிவருவதில்லை. இவ்வாறு, குழந்தை, தான் அதிகமாகப் பேச வேண்டுமென்று நினைக்கும்போது, நினைத்த மாதிரி, பேச முடியாது தடுக்கப்படும் போது, குழந்தையின் அடிமனத்தில் அசாத்தியமான பீதி உண்டாகி, பேச நினைத்த சொற்களைப் பேச முடியாமல் திக்கும் கோளாறு ஏற்படுகிறது.

குழந்தை முதன் முதலாக நிறையப் பேச ஆரம்பிக்கும் நிலையில், திக்குவாய் போல நடித்துக் காட்டும் பழக்கத்தைக் கொண்டால், நன்றாகப் பேசும் குழந்தையும் திக்க ஆரம்பிக்கும். சரளமாகப் பேச முடியாத ஒரு நபரோடு, தொடர்ந்து குழந்தை பழகுமானால், பேச்சு சரியாக வராது. குழந்தையைப் பார்த்துக்கொள்ள வேலைக்கு அமர்த்தப்படும் நபர் நல்ல சரளமாகப் பேசக் கூடியவராக இருக்க வேண்டும். எனக்குத் தெரிந்த ஒருவர் தம் குழந்தையைப் பார்த்துக் கொள்ள ஊமைப் பெண்ணை வைத்திருந்ததால் அக்குழந்தை வெகு நாட்கள் வரை, ஊ, ஊ, என்று கையால் காட்டிக் கொண்டு இருந்தது. பிறகு அவர்கள் வேறு ஊருக்குச் சென்றபிறகே குழந்தைக்கு வார்த்தைகள் வர ஆரம்பித்தன.

### திக்குவாயைச் சரியாக்குவது எப்படி?

குழந்தையின் மன, தேக ஆரோக்கிய நிலையைப்பாதுகாப்பதுதிக்குவாயைச்சரிப்படுத்துவதில் முதல் படியாகும். திக்குவாய் உள்ள குழந்தைகளில்பலர்நரம்புக்கோளாறு உள்ளவர்களாகவும், போதிய இரத்தமில்லாமலும் இருக்கிறார்கள். முதலில் இக் கோளாறுகளைச் சரி செய்ய வேண்டும்.

பொதுவாக, திக்குவாய்க் குழந்தைகள் மூச்சு விடும்போது, அசையும் தசைகளில் இழுத்துப் பிடித்தது போன்ற நிலை ஏற்படலாம். இக்குழந்தைகள், நிறுத்தி நிதானமாக மூச்சு விடாமல், அவசரம் அவசரமாக மூச்சு விடலாம். மூச்சை நிதானமாக இழுத்து வெளிவிடாமல், மூச்சுக் காற்று முழுதும் வெளிவருவதற்கு முன்னாலேயே உள்ளே இழுத்துவிடலாம். பேசி முடிப்பதற்குள், ஒரேயடியாக ஒரே தடவையில் மூச்சுக் காற்றை வெளியில் விட்டு விடலாம். பேச ஆரம்பிக்கும் முன்பே மூச்சை வெளியே விடக்கூடாது. இவைகளை குழந்தைகள் விட்டு, சரியான முறையில் மூச்சு இழுத்து விடும்படியான பயிற்சிகளை அளிக்க வேண்டும்.

ஒரே மூச்சில் பல தடவைகள் அ, ஆ என்றோ, ஏ, பி, சி, டி என்றோ வரிசையாகச் சொல்ல வைக்க வேண்டும். அல்லது ஒரு பாட்டைத் தொடர்ந்து சொல்லச் செய்ய வேண்டும்.

திக்குவாயைச் சரிசெய்வதில் பெற்றோர்களின் ஒத்துழைப்பு மிக முக்கியம். குழந்தையின் மனஉளைச்சலைப் பெற்றோர்கள் நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும். குழந்தை திக்கித் திக்கிப் பேசும்போது உதாசீனம் செய்து விடாமல், உன்னிப்பாகக் கவனிக்க வேண்டும். ஒவ்வொரு நிலையிலும் குழந்தையைத் திருத்தவோ அல்லது கட்டுப்படுத்தவோ கூடாது. குழந்தை பேசுவதை அமைதியாகக் கவனித்துக் கொண்டிருப்பது குழந்தைக்கு ஒரு நம்பிக்கையைக் கொடுக்கும். குழந்தைக்கு ஏற்படும் இந்த நம்பிக்கையே, திக்குவாயைச் சரிப்படுத்துவதில் மிக முக்கியமான சிகிச்சை.

எதையும் கற்றுக் கொள்ளும் போது தவறுகள் ஏற்படுவது சகஜம். திக்கிப் பேசும்

# இலவசம்!
# இலவசம்!
# இலவசம்!
# இலவசம்!







**சிறப்பு அம்சங்கள்:**

- முழுவதும் பாதுகாப்பான சூட்டை உறுதி செய்ய, சிறந்த, தரமுயர்ந்த தெர்மோஸ்டாட் மற்றும் பிரெஷர் ரிலீஸ் வால்வு.
- நீண்ட உழைப்பை உறுதிசெய்ய, ஐஎஸ்ஐ தரநிர்ணயங்களின்படி, விசேட தரமுள்ள ஹீட்டிங் எலிமெண்ட்.
- உலோக அரிப்பையும் சேதத்தையும் தடுக்க, சோதனை செய்யப்பட்ட, கனமான செப்புத் தகடுகளாலான ஸ்டோரேஜ் டாங்க்
- சூடு வீணாவதைத் தடுக்க, தரமுயர்ந்த கிளாஸ் வுல் இன்சுலேஷன்.
- கவர்ச்சியான வண்ணங்கள், மாடல்கள் மற்றும் பல்வேறு கொள்ளளவுகளில் கிடைக்கின்றன.

# விஜய்
## வாட்டர் ஹீட்டர்

Vijay® - a friend of your family

JAISONS AMA 1189 TAM

குழந்தைக்குப் பேசும் போது தவறுகள் செய்வதற்கும் வாய்ப்பு கொடுக்கப்பட வேண்டும். மேலும், மேலும் தொடர்ந்து பேசுவதற்கு வாய்ப்புக்கள் கொடுக்கப்பட வேண்டும். குழந்தை திக்கிப் பேசும் ஒவ்வொரு தடவையும், குழந்தையைத் திருத்திக் கொண்டிருக்கக் கூடாது. குழந்தை பேசுவதற்கு வாயைத் திறந்தவுடனேயே, ''அப்படி இல்லை, இப்படி'' என்று திருத்த முற்பட்டால், குழந்தை பேசுவதற்கு முயற்சியே செய்யாது. குழந்தையை ஊக்குவிக்கும் விதத்தில் பேசி, அதற்குத் தைரியத்தைக் கொடுத்து நம்பிக்கை ஊட்ட வேண்டும். தாம் பேசும் போது தடை ஏற்பட்டாலும் மேலும் தொடர்ந்து பேச வேண்டும் என்ற எண்ணம் குழந்தைக்கு ஏற்பட வேண்டும்.

அமைதியாக, அவசரப்படாமல் குழந்தை பேசுவதை அன்பாகச் சரிப்படுத்த வேண்டும். குழந்தை சரியாகப் பேசுவதற்கு முதலில் தனிமையில் நன்றாகப் பயிற்சி அளிக்க வேண்டும். பிறகு மற்றவர்கள் முன்னிலையில் பேசுவதற்கு வாய்ப்பு அளிக்க வேண்டும். நாம் குழந்தைகள் சொல்லிய கதை பற்றியோ, அல்லது வேறு ஏதாவது பொது விஷயத்தைப் பற்றியோ குழந்தையைப் பேசச் செய்ய வேண்டும். தன்னைச் சுற்றியுள்ளவர்கள், நேசமுடன், தான் பேசுவதைக் கவனிக்கிறார்களா என்ற நம்பிக்கை குழந்தைக்கு வந்தால், தங்கு தடையில்லாமல், பேசும். குழந்தை வார்த்தை வராமல் திக்கித் தவிக்கும் போது, படக்கென்று குழந்தையை மடக்குவது, குழந்தையை வெகுவாகப் பாதிக்கும்.

குழந்தைக்குச் சிறிய பாட்டு ஒன்று சொல்லிக் கொடுத்துக் குழந்தையோடு நாமும் சேர்ந்து பாட வேண்டும். ஆரம்பத்தில் சேர்ந்து பாடிப் பிறகு, கொஞ்சம் கொஞ்சமாக நாம் நிறுத்திவிட்டுக் குழந்தையை மட்டும் தொடர்ந்து பாடச் செய்ய வேண்டும். வாயால் ஊதிக் காற்றுக் குமிழிகள் ஏற்படச் செய்வது பலூன் ஊதச் செய்வது, குழந்தையை நம் காதருகில் கிசுகிசுக்கச் செய்வது, போன்ற பயிற்சிகள் நல்ல பயனைத் தரும்.

எப்போதெல்லாம் பேசுவதற்கு வாய்ப்பு அளிக்க முடியுமோ, அப்போதெல்லாம் வாய்ப்பளித்து ஊக்குவிக்க வேண்டும். கடைகள், கடற்கரை, ஆற்றங்கரை, மிருகக் காட்சி சாலை என்று பல இடங்களுக்கு அழைத்துச் சென்று குழந்தையைப் பேசச் செய்ய வேண்டும்.

புத்தகத்தைக் கொடுத்து உரத்துப் படிக்கச் செய்ய வேண்டும். நாம் படித்துக் கொண்டே, குழந்தையைச் சொல்லச் செய்ய வேண்டும். குழந்தை சிந்திப்பதற்கு அவகாசம் கொடுக்காமல், தொடர்ந்து படிக்க வேண்டும். சிந்திப்பதற்கு அவகாசம் இல்லை என்றால், குழந்தை என்ன படிக்கிறார்கள் என்பதில் கவனம் செலுத்தி அதைத் தானும் திரும்பச் சொல்ல வாய்ப்பு ஏற்படுகிறது. இப்படியாக முதலில் கவனித்து, பிறகு அதைத் திரும்பச் சொல்லி, பிறகு வார்த்தைகளைக் கற்று — இப்படியாகத் தொடர்கிறது. புத்தகத்தைக் குழந்தையே உரக்கப் படித்து அதே சமயத்தில் படிப்பதை எழுதும் பழக்கத்தை உண்டாக்க வேண்டும். அதாவது, படிப்பது, எழுதுவது இரண்டையும் ஒரே சமயத்தில் செய்யும்படிச் செய்ய வேண்டும்.

திக்குவாய், குழந்தைக்குப் பிறப்பில் ஏற்படும் கோளாறு அல்ல. ஆகவே, தக்க பயிற்சிகளினால், பெற்றோரின், மற்றோரின் ஒத்துழைப்புடன், இக்கோளாறைச் சரி செய்ய முடியும்.

— ராஜி.

இரண்டு ஸ்பூன் நெய்யில் 1 சிறிய கப்
கோதுமைமாவைவறுத்துஎடுத்து.இஞ்சியை
சுமார் (100 கி) அரைத்து சாறு வடிகட்டி.
அதில் 100 கி சர்க்கரை போட்டு, வாண
லியில் வைத்துக் கிளறி, ஒட்டாமல் வரும்
போது, கோதுமை மாவைக் கொட்டிக்
கிளறி, தட்டில் சிறிது நெய் தடவிக் கொட்டி,
வில்லை போட்டு எடுத்து வையுங்கள். இரு
மணம், பார்ட்டி எங்காவது போகும்
முன்பு, குழந்தைகளுக்கு இரண்டு வில்லை
கள் கொடுத்துவிட்டு (நீங்களும்தான்)
அழைத்துச் செல்லுங்கள். விருந்தில்
அவர்கள் புகுந்து விளையாடினாலும் வயிற்
றுக் கோளாறு வராது. சாதாரணமாக
வாரத்துக்கொரு முறை கொடுக்க, நல்ல
ஜீரண சக்தி பெறுவார்கள். இஞ்சி சாக்
லேட் என்று கேட்பார்கள்.

— பார்வதி.

## மக்காச் சோள முறுக்கு

நம்மில் பலருக்கு மக்காச் சோளத்தை உபயோகிக்க தெரிவதில்லை. விலையில் மலிவான பட்சணங்கள் செய்து போடலாம். அரிசி மாவு அரைக்கக் கஷ்டப்படும் பம்பாய் போன்ற நகரங்களில் வசிப்போருக்கு இது ஒரு வரப்பிரசாதம். நன்றாக சலித்த மக்காச் சோள மாவில் காரப்பொடி, உப்பு, சிறிது டால்டா, பெருங்காயப் பவுடர் தேவையான அளவு சேர்த்து நாடா பக்கோடா, முள்ளு முறுக்கு எது வேண்டுமானாலும் செய்யலாம். வெங்காயம் நறுக்கிப் போட்டு பக்கோடா, பஜ்ஜி மாவாகக் கரைத்து கறிகாய்களால் பஜ்ஜி எதுவானாலும் சுவையோ, சுவைதான். விலையும் மலிவு. உடம்புக்கும் நல்லது.

— வசந்தா.



# எண்ணிப் பாருங்கள்—இன்னும் பத்து ஆண்டுகளில் இவர்கள் எப்படி இருப்பார்கள் என்று.

நீங்களே பெருமிதப்படக்கூடிய வகையில் ஆரோக்கியத்தின் சின்னமாக இவர்கள் திகழக்கூடும். ஏனெனில் தாய் என்ற முறையில் உங்களால் முடிந்த எல்லாவற்றையும் இவர்களின் ஒளிமயமான எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு நீங்கள் செய்து கொண்டிருக்கின்றீர்கள்.

நீங்கள் காட்டும் அன்பின் முக்கிய அம்சமே இவர்களின் உடல் நலனுக்கு உகந்த ஊட்டச்சத்துகளை முழுமையாகப் பெற்றுத் தருவதுதானே.

ஹார்லிக்ஸ் அளிக்கும் ஊட்டச்சத்து. இவர்களின் வளரும் வயதுக்கேற்ற ஊட்டச் சத்து.



"ஹார்லிக்ஸில் அடங்கியுள்ள முக்கிய ஊட்டச்சத்துகள்—புரோட்டீன்ஸ், விட்டமின்ஸ், மினரல்ஸ் மற்றும் கார்போஹைட்ரேட்ஸ் ஆரோக்கியத்திற்கும், வளர்ச்சிக்கும் மிக உகந்தவை.

இதில் சேர்க்கப்பட்டுள்ள கூடுதல் கால்ஷியம் வலுவான பற்களுக்கும், ஆரோக்கியமான எலும்புகளுக்கும் இன்றியமையாதது.

வளரும் குழந்தையின் வயதுக்கேற்ற தெம்பும், முழுமையான ஆரோக்கியமும் அளிக்கவல்லது."




சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

HTA 6223 TAM

## அனுராதா ரமணன்

(குறுநாவல்)

# கை நிறைய பூ

'அவதானா...?'

மைதிலி, சமையலறைப் பக்கம் ஜாடையாய்ப் பார்க்கிறாள்.

அவளேதான்...

அந்தக் கண்ணும், மூக்கும், அச்சில் வார்த்தாற் போன்ற முகமும் யாருக்கு வரும்... அலையலையாய் முதுகில் புரளும் கூந்தலும் அவள் மாயவரம்—சந்நிதித் தெரு அபயம்தான் என்பதைச் சொல்லாமல் சொல்லுகிறது...

ஆனால்...

பசுமை படர்ந்த முகமும், நெற்றியில் பளீரிடும் குங்குமமும்தான் மைதிலியின் சந்தேகத்துக்குக் காரணம்...

அபயத்தின் நெற்றி—பிறை சந்திரனைக் கவிழ்த்துப் போட்டாற் போல இருக்கும்... குங்குமமோ, சாந்துப் பொட்டோ கண்டதில்லை... சின்னதாய்ச் சிவன் கோவில் திருநீறுதான்... வெறும் கழுத்துதான்... கட்டுக்கடங்காமல் புரளும் கூந்தலை — 'ஏ சனியனே, அடங்கப் போறியா — இல்லை — நாலு வீறு வீறட்டுமா?' என்று இழுத்துப் பிடித்துக் கட்டி வைத்திருப்பாள்...

கூடவே இடுப்பில் ஒன்றும் கையில் ஒன்றுமாய்...

திரும்பவும் மைதிலி — சமையல் கட்டை எட்டிப் பார்க்கிறாள்.

"என்ன பார்க்கிறே... உனக்கு ஊர்ப்பட்ட வேலைவச்சிருக்கா கஸ்தூரி—முதல்லே ரயில் அழுக்கு போகக் குளிச்சிட்டு சாப்பிட வா... வந்ததும் வராததுமா சமையல் கட்டுல போய் உட்கார வேண்டாம்..."

மைதிலியின் மாமியார் லட்சுமி, செல்லமாய் மருமகளை விரட்டுகிறாள்.

வீடு கொள்ளாத கூட்டம்... இத்தனைக்கும் டில்லியில் கல்யாணத்தை வைத்துக் கொண்டால் — யார் வருவார்கள் என்று ஒவ்வோர் உறவும் சொல்லிக் கொண்டே, மூட்டை முடிச்சோடு நாலு நாட்கள் முன்பே வந்து டேராப் போட்டாகி விட்டது.

மைதிலிதான் லேட்...

"மச்சினன் பெண் கல்யாணத்துக்கு, இப்படித்தான் சம்பந்தி மாதிரி கடைசியாக வந்து இறங்கறதா...?"

உள்ளே நுழையும் போதே — கும்பலில் ஒரு குரல் தனி ஆவர்த்தனம் வாசித்தது.

மைதிலி புன்னகைத்துக் கொண்டாள்.

எத்தனை மைல் தள்ளி — எங்கே குடியேறினால்தான் என்ன...

தஞ்சாவூர் சாப்பாடும், குத்தலும் பின்னோடு ஓடி வந்து விடுகிறதே....

பல் தேய்த்து விட்டு வந்தவளின் எதிரே—காப்பியை வைத்துவிட்டு, குறும்பாய் சிரித்தாள் கல்யாணப் பெண்...

"ஃபில்டர் காப்பி சித்தி.. சும்மா — டீ.வி. அட்வர்டைஸ்மெண்ட் டயலாக் இல்லே... நிஜம்மாவே ஃபில்டர் காப்பி கல்யாணத்தை மெட்ராஸ்லே நடத்தினா எல்லாச் சௌகரியமும் இருக்கும்னு அடிக்கடி சொல்லுவீங்க. டில்லி பாருங்க... மெட்ராஸிலேயே கிடைக்காத அயிட்டம் கூட இங்கே கிடைக்கும்..."

"ஆமா... இப்படிச் சொல்றவதான் மாப்பிள்ளையை மெட்ராஸ்லேயிருந்து பிடிச்சா..."

சமையலறையிலிருந்து ஒரு குரல் கிளம்ப— மைதிலி எட்டிப் பார்க்க...

அப்படியே திகைத்து விட்டாள்.

'இது அபயம் இல்லையா...'

குரலுக்குடையவள், இவளைத் திரும்பியே பார்க்கவில்லை... கையும், கண்ணும் காரியாலயத்திலேயே குறியாக இருந்தது.

அப்படியே நிமிர்ந்து பார்த்திருந்தாலும்— மைதிலியை அவர் அடையாளம் கண்டு கொள்வது சிரமம்தான். எத்தனை வருஷங்களுக்கு முன் பார்த்தது?

அதுசரி... இது அவள்தானா...?

மைதிலியின் எதிரிலிருந்த காப்பி, டில்லி குளிருக்குப் பச்சைத் தண்ணீராய்க் குளிர்ந்து போக...

லட்சுமிதான் அதட்டுகிறாள்.

"வந்ததும் வராததுமா — சமையக்கட்டுல என்ன பார்வை... குளிச்சிட்டு வந்து — வாங்கியிருக்கிற சாமான் எல்லாத்தையும் சரி பாரு... ஏதாவது விட்டுப் போயிருந்தாச் சொல்லு... சாயந்திரம் பாலு காரோட வருவான்... அழைக்க வேண்டியவர் எல்லார் வீட்டுக்கும், நீயும் உன் வீட்டுக்காரனுமாய்ப் போயிட்டு வந்துடுங்க... நாளைக்கு ராத்திரி சத்திரத்துக்குக் கிளம்பியாகணும்... ஏதோ— கட்டா கட்டையா அபயம் மாமி இருக்காளோ... எனக்குத் தெம்பா இருக்கு..."

அவளேதான்!!!

மைதிலியின் நெஞ்சுக்குள் சிக்கல் விழுந்த நூல் கண்டாய்த் திணறிக் கொண்டிருந்த சந்தேகத்துக்கு நூல் முனை கிடைத்து விட்டது.

இவள் மாயவரம் அபயமேதான்.

சுமங்கலிக் கோலம்தான் புதுசு...

மைதிலியின் பிறந்த வீட்டுக்குக் கூட அபயம், தன் தாயாரோடு, இரண்டு குழந்தைகளோடு வந்திருக்கிறாள், சமைக்கத்தான்...

ஆனால் ஒரு வித்தியாசம்...

அபயத்தின் தாயார் பழுத்த சுமங்கலி... யார் வீட்டில் கல்யாணம், சுமங்கலிப் பிரார்த்



தனை என்றாலும் அவள் வருவாள்.

கல்யாணத்துக்கு முன்னும் – பின்னுமாய் வீட்டில் கூடும் உறவுப் பட்டாளங்களுக்குப் பரிமாறி, எச்சில் எடுத்து, அம்மாவுக்கு உதவியாய் ஏற்றியிருக்க அபயம் ஆஜராகி விடுவாள்.

மைதிலிக்கு அப்பொழுது பத்து வயசு.

அபயத்துக்கு...

என்ன, ஓர் இருபத்தைந்து வயசிருக்கும். உயரமும், பருமனும் – மற்ற பெண்களி லிருந்து வித்தியாசமாய்...

அத்தனை வாளிப்பாய் இருந்ததினால் தானோ என்னவோ – யாராவது ஒரு சொல் சொன்னால் – கூனிக் குறுகுகையில் பரிதாப மாய் இருக்கும்...

சும்மா சொல்லக் கூடாது.

இந்த மனிதர்களுக்குப் பணமும் பத்தாய் இருக்க வேண்டும். பெண்ணும் முத்தாய் இருக்க வேண்டும்.

திவசக் காரியங்களுக்கும், சாவுச் சடங்கு களுக்கும் வடித்துக் கொட்ட அபயம், அபயம் என்று இவர்கள் காக்கா கூட்டம் மாதிரி அடித்துக் கொள்வார்கள்.

"நீ வந்துடு அபயம்... நாளைக்கு மாமா – அவர் அப்பாவுக்குப் பண்ணற திதி... காலமே சுருக்க சாப்பாடாயிடணும் அவ ருக்கு. பத்தரைக்கு இலை போட்டாயிட ணும். நீ வந்தாத்தான் சரியா இருக்கும்..."

"பெரியவனை நாளைக்கு ஆஸ்பத்திரிக்கு அழைச்சிண்டு போகணும் மாமி... மார் சளி... ரெண்டு மாசமா வாய் ஓயாமக் குலைச் சுத் தள்ளறான்... அம்மாவை அனுப்ப றேனே..."

"சாயந்திரமா ஆஸ்பத்திரிக்குப் போக லாம்டீ... திவச காரியம்... அம்மாவுக்குவயசா யிடுத்து பாரு... அரைக்க ஒருத்தர்... இடிக்க ஒருத்தர்னு சுத்துக் காரியத்துக்கு நாம யாராவது புடைவையை வரிஞ்சு கட்டிண்டு நிற்கணும். உனக்குத்தான் தெரியுமே... மாமா வுக்கு இது மாதிரி நாளுல எல்லாம் மூக்கு நுனியில கோபம் நிற்கும். சாஸ்திரிகள் லேட் டாக்கினா – பெண்டாட்டியைப் பிடிச்சு சுத்துவார். நான் ஒண்டியா எங்கேன்னு அவ தாரம் எடுக்க முடியும்... தயவு செஞ்சு வந்து டுடீ அபயம்...

மைதிலியின் தாயே எத்தனையோ முறை இதுபோல, அபயத்தின் முகவாயைப் பிடித் துக் கொண்டு கெஞ்சியிருக்கிறாள்.

இதுவே – நாலு சுமங்கலிகள் கூடுகிற விசேஷமாகட்டும்... அபயத்திடமே – அவள் தாயாரை வரச் சொல்லி ஏவுவதை விடவும் – அவளை வரக் கூடாது என்று குறிப்பாகச் சொல்லுவது இருக்கிறதே...

மைதிலி கூட அம்மாவை ஒரு முறை கேட்டி ருக்கிறாள்.

"ஏம்மா... அபயத்தோட அம்மாவுக்குத் தான் ஒரு வேலையும் செய்ய முடியலே இல்லே... அப்புறம் எதுக்காக அந்த மாமிய வரச் சொல்லி கம்பெல் பண்றே... அபயம் சமைச்சாலே ஜோரா இருக்கு. அவளையே வரச் சொல்லேன்..."

"போடி அசடு. தத்து பித்துன்னு உள றாதே... சின்னவளா, லட்சணமா இரு... அபயம் – இன்னிக்கெல்லாம் இங்கே வரக் கூடாது...

"ஏன்?"

"வரலட்சுமி நோன்புடீ... பெரிய மாமி வந்தா – உட்கார வச்சுச் சாதம் போட்டு, தாம்பூலமும், ரவிக்கைத் துணியும் கொடுத்து விழுந்து சேவிக்கலாம். வயசான சுமங்கலி... சமையல் ஏறத்தாழ இருந்தாலும் – அட்ஜஸ்ட் பண்ணிண்டாப் போச்சு...

அபயத்தின் தாயார் இது போன்ற சம யங்களில் – வெட்கத்தை விட்டு – தான் வேலை செய்யும் வீடுகளில் கேட்பாள்.

"குழந்தைக்கு உடுத்திக்க நல்லதா, ஒரு புடைவை இல்லே... ஏதாவது பழசு பட்டு இருந்தா எடுத்து வையுங்களேன். இந்த வய சுக்கு நான் வீடு வீடாப் போய் வடையும், பாயசமுமாச் சாப்பிட்டு, நீங்க கொடுக்கிற ரவிக்கைத் துணி, புடைவை எல்லாத்தையும் வாங்கிண்டு போறேன். அவ தலையெழுத்து திவச சாப்பாடும், எள்ளுருண்டையுமாவே போச்சு..."

"பகவான் எழுதினதை யாராலே மாத்த முடியும் மாமி... ஏதாவது இருந்தா எடுத்து வைக்கிறேன். ஆனா ஒண்ணு... இப்ப நாங்க உங்களுக்குக் கொடுத்ததை நீங்களே கட்டிக் குங்க... இத்தனை கோடிச்சு சுமங்கலிப் பிரார்த்தனை பண்ணியிருக்கோம். எங்களுக் குப் புண்ணியம் கிடைக்காம செஞ்சிடா தீங்க..."

"சேச்சே... என்ன நீங்க... இது கூடத் தெரியாதா எனக்கு...?"

அபயத்தின் தாய் சங்கடத்தில் முனகியபடி நகருவாள்.

மைதிலிக்கு நன்றாக நினைவிருக்கிறது. அபயத்தின் தாய் இறந்ததும் – வயசான தகப்பனாருடன் – இரண்டு பிள்ளைகளை யும் வைத்துக் கொண்டு அவள் திண்டாடி யதும்...

வழக்கம் போல — திதி காரியங்களுக்கு அபயத்தின் உதவி அந்த ஊர் ஜனங்களுக்குத் தேவையாக இருந்தது... ஆனால், அதே சமயத்தில் — கல்யாணம், பண்டிகைகளுக்கும் ஒரு சுமங்கலி சமையற்காரி வேண்டியிருந்தது...

பக்கத்து ஊரிலிருந்து ஒருத்தி வந்தாள். அவள் இரண்டு வித விசேஷங்களுக்கும் தான்தான் வருவேன் என்று பிடிவாதம் பிடித்தாள்.

அபயம் குடும்பத்தோடு வேறு ஊருக்குக் கிளம்பினாள்.

கிளம்பின அன்றுகூட மைதிலியின் தாயிடம் குரல் அடைக்கச் சொன்னாள்.

"எனக்கு மனசுல ஒண்ணுமே இல்லே மாமி... சிலேட்டுப் பலகையை அழுத்தித் துடைச்சாப்பல இருக்கு... கல்யாணம் கார்த்திகைக்குக் கூட — ஒண்டியா பட்சணம், பருப்புத் தேங்காய் எல்லாம் செய்வேன். சுமங்கலிப் பிரார்த்தனைக்குச் சமைச்சா — புதுப் புடைவை, ரவிக்கை எனக்குத்தான் வேணும்னு அடம் பிடிக்கிற அளவுக்குச் சின்னக் குழந்தையா நான்? எனக்கு என் நிலை தெரியாதா...? இதுக்காகப் போய் — இன்னொருத்தியைப் புதுசா வரவழைக்கணுமா...?"

"எனக்குப் புரியறது குழந்தை... ஆனா இந்தப் பாழும் உலகத்துக்குப் பயப்பட வேண்டியிருக்கே... உன்னை வைச்சுண்டு தீபாவளிக்கு டின்டின்னா பட்சணம் செஞ்சு வாங்கலியா இந்த ஊர்க்காரா? நவராத்திரின்னா பயப்படறா... நான் மட்டும், 'நீ வந்து நவராத்திரி ஒன்பது நாட்களும் சமைச்சுப் போடுடீன்னு' சொல்றேன்னு வச்சுக்கோ. நெருப்புன்னா வாய் வெந்துடாது... நாளைக்கே ஏதாவது ஓர் அசம்பாவிதமாச்சுன்னா — ஊரே உன்னைத் தானே கொட்டைப் பாக்காட்டம் வாயிலப் போட்டு மெல்லும்? அதுக்காகப் பார்க்கிறேன்."

அபயம் போன பிற்பாடு, மைதிலி — அம்மாவின் புடைவைத் தலைப்பைப் பிடித்துக்கொண்டே போய்க் கேட்டாள்.

"பாவம்மா அவ... யார் என்ன சொன்னா என்னன்னு நீ அவளை, இங்கேயே தங்க வச்சிருக்கலாம்!"

"ஆமா... உங்க தாத்தா இங்கே சத்திரம் கட்டி வச்சிருக்கார் பாரு... அது ஒண்ணுதான் பாக்கி..."

"ஏம்மா இப்படிச் சொல்றே?"

"பின்னே என்ன...? இவ வந்து, கல்யாணத்துலேயும், சுமங்கலிப் பிரார்த்தனையிலேயும் சுத்திச் சுத்தி வந்து நின்னா — எவளும் சும்மா சிரிக்க மாட்டா..."

அபயம் அந்த ஊரை விட்டுப் போய் — ஏன் — மைதிலியின் மனசை விட்டே மறைந்து போய் இருபது வருஷங்களாயிற்றே... அதற்கு மேலேயே இருக்கும்... மைதிலிக்கே முப்பத்தி மூன்று வயசாகிறதே!

இப்பொழுது — இத்தனை வருஷங்களுக்குப் பிறகு அபயத்தை — டில்லி ஜனக்புரியில் சந்திப்போம் என்று மைதிலி கனவு கூட காணவில்லையே!

அவளிடம் போய்த் தன்னை அறிமுகப் படுத்திக் கொள்ள வேண்டுமென்றுதான் இதயம் பரபரக்கிறது...

ஆனால் எப்படி?

இருபத்தைந்து வயசுக்கு மேல், இரண்டு பிள்ளைகளையும் வைத்துள்ள இவளை — எந்தப் புண்ணியவான் தாலி கட்டி — சுமங்கலியாக்கினான்.

எப்படிக் கேட்பது?

## 2

"இந்த ஈடு வடையோட அடுப்பை அணைச்சுட்டு நீங்களும் போய் பந்தியிலே உட்காருங்கோ மாமி..."

"இருக்கட்டுமே... எனக்கு என்ன அவசரம்? எண்ணெய் அடுப்பின் கீழே நின்று நின்று — எனக்கு இப்ப எதுவுமே வேண்டியிருக்காது. எதுவானாலும் பொட்டலமாக கட்டிக் கொடுத்திருங்க. வீட்டுக்கு எடுத்துண்டு போறேன். ராத்திரி சாப்பிடறேன்..."

அபயம் நாசூக்காய் மறுதலித்தபடியே — பம்பரமாய்ச் சுற்றுகிறாள்...

"அடியே... கல்யாணப் பொண்ணே... வெட்கப்படாதே... பிறந்தகத்துல வேண்டியதைக் கேட்டு வாங்கிச் சாப்பிட்டாத்தான் உண்டு... கஸ்தூரி... முதல்லே உன் மாமியாரோட வந்து நில்லு... ஓர்ப்படியையும் கூப்பிடு... கையில அட்சதைய எடுத்து, பொண்டுகள் புடைவைச் சாத்தியிருக்கிற இலை முன்னாடி வந்து நில்லு..."

அபயம், வடையைத் தட்டிக் கொண்டே — டேப் ரிக்கார்டர் மாதிரி சொல்லிக் கொண்டே போகிறாள்.

"அட்சதையைத் தூவி... குடும்பத்துல சுமங்கலியாப் போன பெரியவாப் பேரைச் சொல்லிக் கூப்பிடுங்கோ..."

கஸ்தூரி, மாமியாரைப் பார்க்கிறாள்.

"என்ன பேரும்மா?"

"என் மாமியார் பேரு செல்லம்... நான் கல்யாணமாகி வர்றதுக்கு முந்தியே நாத்தனார் ஒருத்தி... என்ன பேருன்னு மறந்து போச்சே...

---

# ஈஸி இன்ஸ்டன்ட் அரிசி சேவை. (இடியாப்பம்)

## ஐந்தே நிமிடங்களில் மிருதுவான, பூப்போன்ற ருசிமிக்க சேவை தயார்!

பாக்கெட்டைத் திறந்து வடாம்போல் இருக்கும் ஈஸி சேவை மேல் கொதிக்கும் வெந்நீரை ஊற்றுங்கள். ஐந்து நிமிடம் ஊறவையுங்கள் நீங்கள் செய்ய வேண்டியது அவ்வளவே. தும்பைப் பூ போன்று வெள்ளை வெளேரென்று, மிருதுவான சேவை தயார். எலுமிச்சம்பழம் சேவை, மிளகு சேவை, உளுத்தம் சேவை, வெஜிடபிள் சேவை, வெல்ல சேவை, தேங்காய் சேவை, தயிர் சேவை என மனம்போல் செய்து களிக்கலாம். ஒரு பாக்கெட்டிலிருந்து இவ்வளவு ருசியா என வியந்து போவீர்கள்.

Eazy

தமிழ்நாடு C&F ஏஜெண்ட்

ஜகதீஷ் எலெக்ட்ரிகல்ஸ் (ஏஜென்ஸி பிரிவு)
69, வில்லேஜ் ரோடு, நுங்கம்பாக்கம்,
சென்னை-600 034. தொலைபேசி: 472208

வியாபாரம் மற்றும் பிற விவரங்களுக்கு அணுகவும்.

திரு. கே. வி. கிஷோர்,
அகிலா ஃபுட்ஸ்
1, கஸ்தூரிபாய் சாலை,
பெங்களூர்-560 001.
தொலைபேசி: 211024, 213636




OBM 2871 TAM

## வாங்குவீர்

# சுப்ரீம்

இருமுறை சுத்திகரிக்கப்பட்ட
சுத்தமான தாவர எண்ணெய்




பெறுவீர் ஒரு "எவர்சில்வர் தட்டு"

## இலவசமாக!

ஒவ்வொரு 1 கிலோ, 2 கிலோ மற்றும்
5 கிலோ சுப்ரீம் வாங்கும்போதும்.

## முந்துங்கள்!

இச்சலுகை ஏப்ரல் 30-ம் தேதி வரை மட்டுமே.
இச்சலுகை இல்லாமலும் சுப்ரீம் கிடைக்கும்.

## சுப்ரீம்

சிறந்தவை அனைத்தும் கொண்ட
சிக்கன சமையல் எண்ணெய்

Artig/SSD/099

''அப்படிச் சொல்லாதீங்கோ... இதுக்காகத்தான் உங்களவர் கிட்ட காலம்பறவே பேரையெல்லாம் கேட்டு எழுதி வாங்கிண்டேன். படிக்கிறேன். கேட்டுட்டுத் திருப்பிச் சொல்லுங்கோ...''

''அபயத்தோட மூளை தனிதாண்டி...''

''ஒரு தனியும் இல்லே... இந்த டில்லியில எத்தனை கல்யாணம், சுமங்கலிப் பிரார்த்தனை பார்த்திருப்பேன் நான்... சொல்லுங்கோ... செல்லம்மா...''

''செல்லம்மா...''

''சரஸ்வதி...''

''சரஸ்வதி...''

''கோமதி... பருவதம்... இன்னும் அறிஞ்சவா — அறியாதவா...''

''...அறிஞ்சவா — அறியாதவா.''

''தெரிஞ்சவா — தெரியாதவா... எல்லாரும் வந்திருந்து திருப்தியாச் சாப்பிட்டு, குடும்பத்தை அமோகமா வைக்கணும்...

லட்சுமியும், அவளது இரு மருமகள்களும் டீச்சரின் கட்டளைக்குக் கீழ்ப்படியும் மாணவிகளைப் போல — அபயம் சொன்னதைச் செய்தார்கள்.

அப்பொழுது கூட மைதிலிக்கு மனசு — எதிலும் ஒட்டவில்லை.

சுற்றிச் சுற்றி — அபயத்திடமே போய் நின்றது.

அபயத்தின் தோற்றமும், கம்பீரமான குரலும் — சாப்பாட்டுக்குப் பின் விநியோகிக்கப்பட்ட பானகத்தை விடவும் இதமாக இருக்கிறதென்றாலும்...

அபயத்துக்கு என்ன அதிசயம் நேர்ந்தது?

அன்று மாலை —

கஸ்தூரியுடன் சத்திரத்துக்கு வேண்டிய சாமான்களை எடுத்து வைத்துக் கொண்டிருந்த போது — மைதிலி — தன்னை அடக்கிக் கொள்ள மாட்டாமல் கேட்டே விட்டாள்.

''மன்னி... இந்த அபயம் மாமியை எங்கே பிடிச்சீங்க...?''

''பிடிச்சேனாவது — இந்த டில்லியில — தென்னிந்தியக் குடும்பம் வாழற எந்தப் பகுதியில வேணுமானாலும் போய்க் கேளு... அபயம்னா அபயம்தான். கூப்பிட்ட குரலுக்கு அபய ஹஸ்தத்தோட 'டாண்'னு வந்து நின்னுடுவா... மாமி ரொம்ப வருஷமா இங்கேதான் இருக்கா...''

''குடும்பம்...''

''எங்கே... புருஷன் சந்நியாசம் வாங்கிண்டு போயாச்சு... ஒரு பிள்ளை அமெரிக்காவுல இருக்கிறதாச் சொல்லுவா... பொண்ணு ஒண்ணு கல்யாணத்துக்கு இருக்கு. அவளுக்குக் கல்யாணமாயிடுத்துன்னா தானும் புருஷனைத் தேடிண்டு கிளம்பிடுவேன்னு அடிக்கடி சொல்லுவா...

கஸ்தூரி சொல்லிக் கொண்டிருந்த அதே நேரத்தில் அபயம் அங்கே வருகிறாள்.

''இந்தாடி... ஆபரேஷனைப் பண்ணிண்டு எதுக்காக அந்தப் பெட்டியை ஒருத்தியா நகர்த்தறே. நீ நகரு... இந்தாம்மா மைதிலி... உன்னையும்தான் சொல்றேன்... நீயும் நகரு...''

தேங்காயைத் துருவிப் போட்டுப் பொரியல் செய்தால் இரவுக்குள் ஊசி விடும் வாய்ப்புண்டு. எனவே, கடுகு, பருப்புப் போட்டு ஒரு வதக்கு வதக்கி விட்டு பின்னர் காயைப் போட்டுக் கிளறிச் சமைத்துப் பாருங்கள்... எந்நேரமானாலும் ஊசவே ஊசாது.

— ரமா.

விறுவிறுவென வந்து பெட்டியை சர்வ அலட்சியமாய் நகர்த்தி வைக்கிறாள்.

''ஊஞ்சலுக்குப் பாட்டு ரெடி பண்ணிட்டியா?''

''இன்னும் மனப்பாடம் ஆகலை மாமி... நீங்க இருக்கிற தைரியத்துலதான் பேசாம இருக்கேன்.''

''நல்லாத்தான் இருக்கு... சுக்கு கண்ட இடத்திலே பிள்ளை பெத்துக்கற கதையா — என்னைப் பார்த்தாடி பொண்ணுக்குக் கல்யாணத்தை நிச்சயம் பண்ணினே...? ஏன், உன் ஓர்ப்படிக்குப் பாட வருமோல்லியோ...?''

மைதிலிக்குத் தான் யார் என்பதைக் காட்டிக் கொள்ள வேண்டுமென்கிற விதறல்...

''எங்கே மாமி... பத்து வயசுல மாயவரத்துல ராஜா பாகவதர்கிட்ட கத்துண்டது... இப்ப எனக்கு முப்பத்து மூணு...''

பொட்டிலடித்தாற் போலத் திரும்பினாள் அபயம்.

''மாயவரமா...?''

''உம்... சந்நிதித் தெரு...''

மைதிலி அதற்கு மேல் பேசவில்லை. அங்கு நிற்கவுமில்லை... விடுவிடுவென மற்ற வேலைகளில் இறங்கி விட்டாள்...

அபயத்தின் முகத்தில்தான் பழைய களையே இல்லை. இருளடித்தது.

மைதிலியை அடிக்கடி உற்று உற்றுப் பார்க்கிறாள்... அவள் எதற்கோ சமையலறைப் பக்கம் வந்த போது தழைந்த குரலில் கேட்கிறாள்.

''சந்நிதித் தெருவுல யார் வீட்டுப் பொண்ணு நீ...?''

''பச்சை கேட் வீடு... பெரியநாயகிப் பொண்ணு மைதிலி... உங்களுக்கெல்லாம் பாப்பான்னு சொன்னாப் புரியும்னு நினைக்கிறேன்...

அபயம், கையிலிருந்ததை அப்படியே போட்டுவிட்டு, மைதிலியின் கரத்தை, கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

''பாப்பாவா... என்னை ஞாபகமிருக்காடி உனக்கு?''

''ஆகா... நல்லா நினைவிருக்கு...''

மைதிலி கொஞ்சம் அழுத்தம் கொடுத்தே சொல்கிறாள்.

## 3

**டி**ல்லி கல்யாணத்துக்குக் கூட மடிச் சமையல் சாப்பிட — மாப்பிள்ளை வீட்டில்

நாலைந்து முதிர்ந்த பெண்கள் வந்திருந்தனர்.

வந்த இடத்திலும் பம்பரமாய்ச் சுற்றிக் கொண்டிருந்தாலும் — அபயம் அடிக்கடி மலைத்து நிற்கிறாள்.

இது நாள் வரையில் இப்படியொரு இக்கட்டு வந்ததே இல்லை...

'சீ... உலகம் சின்னதுதான்... இல்லாவிட்டால், இருபத்து மூன்று வருஷங்களுக்குள் இப்படியொரு சந்திப்பு ஏற்பட்டிருக்குமா?'

'இந்தப் பெண்ணும்தானாகட்டும்.... என்னைத் தெரிந்து கொண்டே மூன்று நாட்களாய் வாயைத் திறக்காமல் இருந்திருக்கிறதே... என்னைப் பத்தி — இவ மனசுல எத்தனை மட்டமான அபிப்பிராயம் இருக்கும்?'

மைதிலியை அடையாளம் தெரிந்து கொண்ட அன்றிரவே — வீட்டுக்குப் போனதும் முதல் காரியமாய்த் தன் மகளை அழைத்து, கண் கலங்கக் கூறி விட்டாள் அபயம்...

''கல்யாணி... என்னோடத் தொழிலுக்கு மோசம் வந்துடுத்துடீ...''

''என்னம்மா சொல்றே?''

''மாயவரத்துல இருந்து என்னோட சரித்திரத்தைக் கட்டிச் சுமந்துண்டு ஒரு பொண்ணு — லட்சுமி மாமி வீட்டுக் கல்யாணத்துக்கு வந்திருக்கு...என்னைத் தெரிஞ்சு வச்சுண்டே மூணாம் மனுஷி மாதிரி பேசிப் பழகி... இன்னிக்கு இடிய இறக்கறது... நான் என்ன செய்வேன்...?''

கல்யாணியுமே கவலைப்படுகிறாள்.

''எல்லாத்தையும் சொல்லிட்டாளா...?''

''ஒண்ணுமே தெரியலைடி... சொல்லியிருந்தா — இத்தனை நாட்கள் லட்சுமி மாமி சும்மா இருப்பாளா...?''

''நீ கவலைப்படாதேம்மா... திருடினியா... இல்லே நம்பிக்கைத் துரோகம் பண்ணினியா?''

''ஒரு விதத்துலப் பார்த்தா — இது நம்பிக்கைத் துரோகம்தானேடி? என்னைச் சுமங்கலியான்னு நம்பித்தானே — இந்த மனுஷா, மங்களகரமான காரியங்களிலே எல்லாம் என்னைச் சேர்த்துண்டிருக்கா?''

''கரெக்ட்... இல்லைன்னு சொல்லலை... ஆரம்ப காலத்திலே மாத்தி உடுக்கக் கூடத் துணியில்லாமக் கஷ்டப்பட்டியே... அப்ப, இந்த ஜனங்க — ஊர் ஊராக் கூப்பிட்டுச் சுமங்கலிப் பிரார்த்தனை, சுவாஸினி பூஜைன்னு சோறு போட்டுப் புடைவை கொடுத்த ஜனங்க — மூட்டை மூட்டையா மஞ்சளை வாங்கி வச்சிண்டு லட்ச மஞ்சள் வாரி வழங்கின ஜனங்க — புருஷனில்லாத பொம்மனாட்டிகளுக்கும் ஒரு வேளை வயிறார சோறு போட்டு, மானம் மறைக்க ஒரு நூல் புடைவையைக் கொடுத்திருந்தா... அவ்வளவு கூட வேண்டாம்... எங்களுக்கு ஒண்ணும் தோஷமில்லேடி அபயம்... நீ வந்து எல்லாப் பண்டிகைகளுக்கும், கல்யாணம் கார்த்திகைக்கும் சமைச்சுப் போடுன்னு சொல்லியிருந்தாப் போதுமே... நீ எதுக்காக சுமங்கலி வேஷம் போட்டிருக்கப் போறே...''

அபயம் மௌனமாய்த் தன் கையிலிருந்த பட்சணத்தை மகள் கையில் வைக்கிறாள்.

மனசு — பழைய சம்பவங்களை எல்லாம் அசை போடுகிறது...

அம்மா போய், அதிக நாள் அப்பா இருக்கவில்லை... அபயத்துக்கு ஒரே அண்ணன். அவனால் இயன்றது — அப்பாவின் காரியத்தை முடித்தது மட்டும்தான்.

அப்பொழுதே மன்னி சொல்லி விட்டாள்.

''இங்கே பாருங்கோ... ஒரே தங்கைன்னு உருக வேண்டாம்...''

''நான் உருகலையே...!''

''நான்தான் பார்த்தேனே... தங்கை



பெத்த புத்திர 'ரத்தினத்தை வாரி எடுத்துக் கொஞ்சறதை... இது ஒண்ணும் தெருவுலப் போற நாய்க்குட்டியில்லே... கொஞ்சிட்டு விடறத்துக்கு... பின்னாடி நம்ம கழுத்துலேயே சுமை ஏறி உட்கார்ந்துக்கும்...

"அவளுக்கும் நம்மை விட்டால் வேற யாரிருக்கா?"

"நினைச்சிண்டிருங்கோ... சமையல் வேலையின்னுதான் பேரே ஒழிய... ஒவ்வொரு மாசமும் உங்களை விட நிறையச் சம்பாதிக்கறா... ஆனா ஒரு பைசா வெளியில விடறதில்லே... சோப்பிலேயிருந்து தலைக்குத் தடவிக்கற எண்ணெய் வரைக்கும் எல்லாமே இரவல்தான். நாமதான் அசடு... பாவம் பாவம்னு எல்லாத்தையும் தாரை வார்த்துட்டு, கட்டை விரலை வாயில வச்சிண்டு நிக்கறோம்..."

அண்ணன்காரன் மனைவியின் வார்த்தைகளால் மாறினானா... இல்லை, பெண்டாட்டியைப் பகைத்துக் கொள்ள விரும்பாமல் 'நமக்கென்ன' என்று ஒதுங்கிப் போக நினைத்தானோ தெரியவில்லை...



அப்பா இறந்த ஒரே மாதத்தில் அபயத்தை அழைத்துச் சொல்லிவிட்டான்.

"அபயம்... ஆயிரம் இருந்தாலும் நமக்குள்ள உறவு விட்டுப் போகப் போறதில்லே... உன்னை, என்னோட இருந்திடுன்னு நானும் சொல்லிடுவேன். ஆனா — அது உன்னைச் சோம்பேறியாக்கிடும். விட்டோட ஒரு நாத்தனார் உட்கார்ந்திருந்தா — மன்னிக்கும் ஒரு நாள் இல்லைன்னா ஒரு நாள் கோபம் வரும். இன்னிக்கு உன் மனசு கலங்கக் கூடாதுன்னு நான் எதையாவது சொல்லிடலாம்... ஆனா, எப்பவுமே நிரந்தரமா நம்ம சந்தோஷம் நிலைச்சிருக்கணும்..."

அபயம் அதற்குமேல் அண்ணனைச் சிரமப்படுத்த விரும்பவில்லை.

"புரியறது அண்ணா... நானே தனியா போயிடலாம்னுதான் இருக்கேன்..."

"ஒரே ஊர்லே இருந்துண்டு சமையல் வேலைக்கு இவ போனா — ஊர் என்ன சொல்லும்? அண்ணன் ஆடிட்டரா இருக்கான்... தங்கையைக் கவனிக்கவேயில்லைன்னு சொல்லாதா? அந்தப் பொல்லாப்பு வேற நமக்கு வேணுமா?"

அபயம் — அதற்குமேல் அங்கு நிற்கவில்லை. கிளம்பி விட்டாள்.

திருச்சியில் ஆறு மாதம் ஒரு வீட்டில் சமையல் உத்தியோகம். அங்கேயும் அவளை நிம்மதியாக இருக்க விடாமல் சம்பளம் கொடுத்த எஜமானரின் சுபாவம்...

ஒரு நாள் மிதமிஞ்சிப் போய்விட — எஜமானியே இவளை அழைத்து அந்த மாதச் சம்பளத்தைக் கையில் கொடுத்து, கையெடுத்துக் கும்பிடாத குறையாகச் சொல்லி விட்டாள்.

"அம்மாடி... என் புருஷனைக் கட்டுப்படுத்த முடியலை... சின்ன வயசுப் பொண்ணுங்களை வேலைக்கு வைச்சுண்டாலே இதுதான் கஷ்டம்... நீ தனியா இருக்கிறது உனக்கும் கஷ்டம்... எங்களுக்கும் கஷ்டம்...

அபயத்துக்கு இப்பொழுது நினைத்தாலும் சிரிப்பு வருகிறது...

ஏதோ காசிக்குப் போகிற கும்பலோடு கலந்து — கங்கையில் முழுகி, தனது நிலைமையை நினைத்துநினைத்து சுயபச்சாத்தாபத்தில் அழுது......

"இந்தாடியம்மா... மஞ்சள்... தேய்ச்சுக் குளி...

எவளோ ஒருத்தி நீட்டிய மஞ்சளை ஒரு கணம் விக்கித்துப் பார்த்து... பிறகு கை நீட்டி வாங்கி...

மஞ்சள் கயிறும், குங்குமமும் காசு கொடுத்து வாங்க வேண்டிய அவசியமே இல்லை...

கங்கைக் கரையில் சுமங்கலிகளுக்கு — வெற்றிலைப் பாக்குத் தட்டில் பூவும், மஞ்சளும், கருகு மணிச்சரமும் விழுந்து விழுந்து உபசரித்துக் கொடுத்தார்கள்.

அங்கே ஒரு வடக்கத்திக்காரரா — சுமங்கலிக்குப் புடைவை வச்சுத் தர்றா... போய் வாங்கிக்கோ..."

எவளோ ஒருத்தி கை காட்டி விட்டாள்.

கடைசியில்......

கடைசியில் இந்தக் கோலமே இவளுக்குத் துணையாகி விட்டது... பையனை ராமகிருஷ்ண மடத்துப் பள்ளியில் சேர்த்து...

இன்று பிள்ளை அமெரிக்காவில் இருக்கிறான்... படிக்கிற வயசில் எல்லாம், 'அம்மா, நான் பெரியவனா ஆனதுக்குப் பிறகு உன்னையும், கல்யாணியையும் வச்சுக் காப்பாத்தறேன். நீ கவலையே படாதே..." — இப்படிச் சொன்னவன் — அமெரிக்காவிலேயே நிரந்தரமாகத் தங்கி விட்டான்.

அபயத்துக்குக் கல்யாணியை ஒருவன் கையில் பிடித்துத் தரும் வரையில் இந்தக் கோலம் அவசியமாகி விட்டது... இப்பொழுதுதான் மைதிலி வந்திருக்கிறாள். இவளை நாலு பேர் எதிரில் அவமானப்படுத்த......

## 4

'நமக்கென்ன?' என்றுதான் மைதிலி முதலில் நினைத்தாள். இருந்தாலும் மாயவரத்துச் சம்பிரதாயங்களில் மூழ்கிய மனசு, அத்தனை சுலபமாய் இந்த விஷயத்தை விட்டுவிட அனுமதிக்கவில்லை.

'அது எப்படி...? எத்தனைப் பணம் செலவு பண்ணிச் சுமங்கலிப் பிரார்த்தனை நடந்தது...? கடைசியில இவளாலே...'

இவ என்னடி செஞ்சா? சுமங்கலிகள்லே ஒருத்தியா பந்தியிலே வந்து உட்கார்ந்தாளா... இல்லே — புடைவைய வாங்கிக் கட்டிண்டாளா...? வாய்க்கு ருசியாச் சமைச்சா... சம்பிரதாயங்களைச் சொல்லிக் கொடுத்தா... இங்கே ஒரு வாய் சோறு கூடத் திங்கலை... அவ எப்படியிருந்தா உனக்கென்ன...?'

'இருந்தாலும்... இருந்தாலும்... இது தப்பில்லையா?

மனசு கிடந்து அலைபாய்ந்தது...

சத்திரத்துக்குச் சாமான்களை எடுத்துப் போகும் போதே கஸ்தூரியிடம் சொல்லலாமோ என்று யோசித்தாள்.

மனசு வரவில்லை...

அபயத்தின் ஜாஜ்வல்யமான முகத்தை ஒளியிழக்கச் செய்ய மனசு வரவில்லை —

'அம்பிகே தாயே... தப்பு நடந்துடுத்து... மன்னிச்சுக்க...'

கல்யாணக் கூடத்தில் சாமான்களை இறக்கி — சமையல் கட்டில் வேலை நடக்கிறதா எனச் சரி பார்த்து...

அவள் சமையலறைக்குள் போகும்போதே ஹெட்குக் யாரையோ விரட்டிக் கொண்டிருந்தார்.

இனிப்புகளுக்கு ஏலக்காய்ப் பொடி செய்து போடுகிறோம். அவ்வாறு செய்யும் போது ஏலக்காயை ஒரு மேசைக் கரண்டி நெய்யில் நன்றாகப் பொரித்த பின் ஏலக்காயோடு ஒரு ஸ்பூன் சர்க்கரையைச் சேர்த்து மிக்ஸியில் பொடித்துப் போட்டால் ஏலக்காய் மணம் மிகவும் தூக்கலாக இருக்கும். மணம் மிகுந்த ஏலக்காய்த் தோலும் வீணாகாது.

— அலமேலு.

இப்பொழுது

# ஸெரிலாக்®

## நன்மைகள் அடங்கிய காய்கறிகளுடன்






## உங்கள் குழந்தைக்கு ஸெரிலாக் அனுகூலம் அளிக்க இன்னுமோர் வழி




இதோ புதிய ஸெரிலாக் வெஜிடெபிள்—கேரட் மற்றும் டொமேட்டோவின் நன்மைகள் நிறைந்தது. இப்பொழுது நீங்கள் குழந்தையின் வளரும் ருசிக்கேற்ப வெவ்வேறு விதத்தில் அளிக்கலாம்.

ஸெரிலாக் வெஜிடெபிளில் எல்லா ஸெரிலாக் அனுகூலங்களும் அடங்கியுள்ளது—ஒவ்வொரு ஊட்டத்திலும் முழுமையான போஷாக்கு, நற்சுவை மற்றும் உடனடி தயாரிக்கும் வசதி ஆகிய எல்லா அனுகூலங்களும் நிறைந்தது.

நான்கு மாதங்களிலிருந்து உங்கள் குழந்தைக்கு பாலுடன் கூட திட உணவும் தேவை. இதுவே அவனுக்கு ஸெரிலாக் அனுகூலங்களை புகட்ட உகந்த வேளை. நான்கு மாதங்களிலிருந்து ஸெரிலாக் வீட் கொடுக்க ஆரம்பியுங்கள். ஆறு மாதங்களிலிருந்து புதிய ஸெரிலாக் வெஜிடெபிள் அல்லது ஸெரிலாக் ஆப்பிள் அல்லது ஸெரிலாக் ஆரஞ்சு—உங்கள் விருப்பத்திற்கு ஏற்றபடி கொடுங்கள்.

*சுகாதாரமான முறையில் உணவு தயாரிக்கவும், உங்கள் குழந்தைக்கு சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும், டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தவறாது பின்பற்றுங்கள்.*

**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**




RK SWAMY/FSL/5463 TAM

# நியுபான்

## தாயின் அரவணைப்புக்கு ஈடான சிறந்த ஜீரண டானிக்




சிறந்த மூலிகைகளைக் கொண்டு குழந்தைகளுக்காகத் தயாரிக்கப்பட்ட ஜீரண டானிக். பாதுகாப்பானது.






குழந்தை பசியின்மை, வயிற்று வலி, விக்கல், வயிற்றுப் பொருமல், எதுக்களித்தல், மலபந்தம், பேதி முதலியவைகளால் பாதிக்கப்படலாம். இதனால் தேவையற்ற அழுகை, அமைதியற்ற தன்மை, தூக்கமின்மை ஆகியவையும் மற்றும் ஜலதோஷம், இருமல் ஆகியவையும் ஏற்படக்கூடும். அனுபவமிக்க தாய்மார்கள் பன்னெடுங்காலமாகத் தங்கள் குழந்தைகளின் ஜீரண சக்தியை வலுப்படுத்தவும், உடல் ஆரோக்கியத்தைப் பாதுகாக்கவும் உபயோகித்து நல்ல பலன் கண்ட சிறந்த மூலிகைகளான ஓமம், வசம்பு, சிற்றரத்தை, அதிமதுரம், திப்பிலி, கடுக்காய், ஏலக்காய் ஆகியவைகள் தேவையான அளவு நியுபானில் சேர்க்கப்பட்டுள்ளன. குழந்தை முழுமையான ஆரோக்கியத்துடனும், புஷ்டியாகவும் வளர விரும்பிச் சாப்பிடக்கூடிய ஜீரண டானிக்கான நியுபான் அவசியம் ஒவ்வொரு வீட்டிலும் இருக்க வேண்டியது.தொடர்ந்து கொடுத்து நல்ல பலன் காணவும்.

**ஆல்கஹால், போதைப் பொருட்கள், சோடியம்- பை-கார்பனேட் கலப்பு இல்லாதது.**




'விஜய்', மருத்துவக் கல்லூரி சாலை, தஞ்சாவூர் - 613 007, தமிழ்நாடு.
தொலைபேசி எண் : 22025/22225 டெலக்ஸ் : 0468-205 PPPL IN

மருந்துக் கடைகளிலும், ஜெனரல் ஸ்டோர்களிலும் கிடைக்கும்.

SOBHAGYA

''டேய் அம்பி... நாகராஜனை எங்கேடா காணோம்?''

''அவனுக்கு உடம்பு சரியில்லேண்ணா... இரண்டு நாட்களாக் குளிக்கக் கூட இல்லே... இன்னிக்குத்தான் சித்த பரவாயில்லே...''

''பரவாயில்லேன்னா வர வேண்டியது தானே... கூட்டம் நிறைய வரும் போல இருக்கு. நானே ஆள் போறாமத் திண்டாடிண்டிருக்கேன்...''

''குளிக்காம எப்படி வருவான்? குளிச்சா, எங்கே ஜுரம் திரும்பிடுமோன்னு பயமா இருக்காம்...''

''குளிக்க வேண்டாமே... முகத்தைத் துடைச்சு, 'பளிச்'சுன்னு சட்டையைப் போட்டுண்டு, விபூதியை இட்டுண்டு வரச் சொல்லு. இவன் குளிச்சானா இல்லையான்னுதான் இப்ப எல்லாரும் பார்க்கப் போறாளா...?''

''சரிண்ணா... வரச் சொல்றேன்.''

''வரச் சொல்லுடா... சமயத்துல எல்லாத்துக்கும் அட்ஜஸ்ட் பண்ணிக்க வேண்டியதுதான். மூந்தா நாள் சம்பாலால் சேட் வீட்டுக் கல்யாண ரிசப்ஷன்லே — பரிசாரகா எல்லாம் பேண்ட் ஷர்ட் போட்டு, டை கட்டிண்டுதான் வரணும்னு சொல்லிட்டா. ஃபைவ் ஸ்டார் பாணி... ஹோட்டல்லே வச்சு, அத்தனைப் பேரையும் கோட், ஸூட்டோடக் கொண்டு போய் நிறுத்திட்டேனே, அம்பி... இவா எல்லாரும் அசட்டுத்தனமாக ஒரு பழக்கத்தைப் பிடிச்சிண்டு தொங்குவா... நம்மாலே அதை மீற முடியாது... அதே சமயத்துல பிழைப்பும் நடக்கணும்... எப்படி...? இப்படித்தான்...''

மைதிலி உபதேசம் கேட்டாற் போல — பிரமித்து நிற்கிறாள்.

'ஆமா... பொட்டுலேயும் பூவிலேயும் என்ன இருக்கு?'

'நாகராஜன் குளிக்காம, விபூதியைப் பூசிண்டு வந்தா — நமக்கென்ன தெரியவாப் போறது? இன்னும் கொஞ்சம் பால் பாயசம் போடுங்கோ'ன்னு வெட்கம் விட்டு, நாக்கை தொட்டை விட்டுண்டு சாப்பிடப் போறதில்லையா...?'

'இதுல அபயம் மாமி பண்ணறது மட்டும் தப்பா? அப்படி என்ன தப்புப் பண்ணிட்டா... நாகராஜனுக்கு ஒரு வெள்ளைச் சட்டையும், விபூதியும் போல — இவளுக்குப் பூவும், மஞ்சளும். இதனால யாருக்கு என்ன துரோகம் நடந்து போச்சாம்? ஒண்ணுமில்லே...'

'ஒண்ணுமில்லே இல்லையா... அப்புறம் எதுக்காக இதைப் போய் கஸ்தூரி கிட்டேயும், மத்தவா கிட்டேயும் சொல்லணும்...''

அவள் ஒரு தீர்மானத்துடன் கல்யாணக் கூடத்துக்கு வர — அபயம் ஒட்டாத சிரிப்புடன் இவளைப் பார்த்து மெல்லிய குரலில் சொல்கிறாள்:

''உன்கிட்ட கொஞ்சம் பேசணுமேடியம்மா...''

''வாங்கோ...''

மைதிலி, அவள் கையைப் பிடித்து, ஸ்டோர் ரூமுக்குள் அழைத்துப் போகிறாள்.

''இங்கே பாரு... நாளைக்கு மடிச் சமையலுக்குக் கூட நான் வேறே ஓர் ஆளை ஏற்பாடு பண்ணிட்டேன். இத்தனை நாள் எனக்குச் சோறு போட்ட டில்லியை நான் மறக்கவே மாட்டேன்...''

மைதிலி திடுக்கிட்டாள்.

''இதெல்லாம் என்ன பேச்சு?''

''இல்லேடியம்மா... நான் இனிமேயும் இங்கே...!''

''இப்ப என்ன நடந்துடுத்துன்னு இப்படி மாய்ஞ்சு போறீங்க? உங்க தொழிலுக்கு இது தேவைதான். சின்ன வயசுல புருஷன் போயிட்டா — விபூதியை இட்டுண்டு, ருத்திராட்சத்தை மாட்டிண்டு மூலையிலே உட்கார்ந்துட முடியுமா? ஆம்பிளை மாதிரி உழைக்கவேண்டியிருக்கு. ஆம்பிளைமாதிரி — தொழிலுக்கேத்த வேஷம் போட்டா மட்டும் தப்பா...?''

''நீ என்ன சொல்றே...?''

அபயம் விழிக்கிறாள். மைதிலி சிரிக்கிறாள்...

''அதில்லே மாமி... வக்கீல்னா கறுப்புக் கோட்டு... டாக்டர்னா வெள்ளைக் கோட்டு... குருக்கள்னா உத்தரீயம்... இவையெல்லாம் விடுங்கோ... பெண்டாட்டி செத்த டாக்டரோ, வக்கீலோ — இந்த வேஷத்தை விடறானோ...? விடறதுங்கறது பைத்தியக்காரத்தனமில்லையோ...? அது மாதிரிதான் உங்களோடதும்... இதுல என்ன தப்பு...?''

மைதிலி, அப்பொழுதுதான் வந்திறங்கிய பூக்கூடையிலிருந்து மல்லிகைப் பூவைக் கிள்ளி அபயத்தின் கையில் கொடுக்கிறாள்.

''உங்க வேஷம்... நிரந்தரமா இருக்கும்... கவலைப்படாதீங்க...''

''என் கண்ணே...''

அபயம், மைதிலியை இழுத்து அணைத்துக் கொள்கிறாள்.

(முற்றும்)

டூத் பேஸ்ட் ஓரிரு நாட்களுக்கே வரும் என்ற நிலையில் இருக்கும் போது ட்யூபை எடுத்து உள்ளே போட்டு வையுங்கள். வெளியூர் போகும் போது முழு ட்யூபை எடுத்துக் கொண்டு போகாமல் அதை எடுத்துக் கொண்டு போனாலே போதும்.

— தங்கம்.

வெள்ளை அல்லது லைட் கலர் அட்டைகளில் தாமரைப்பூ, ஹ்ருதயகமலம் அல்லது அழகிய டிசைன்கள் வரைந்து, அதில், சிறிய சைஸ் கலர் ஸ்டிக்கர் பொட்டுகளை, கலர் காம்பினேஷனுடன் ஒட்டி, மேஜைமேல் வைத்துப் பூஜாடி வைக்கலாம். அல்லது டீ. வீக்கு மேலே சுவரில் அட்டையை ஒட்டி வைத்தால் அழகாக இருக்கும்.

— பார்வதி.



# ந்த மாதம் எப்படி?

## மேஷ ராசி:

அசுவினி, பரணி, கிருத்திகை 1 — ஆம் பாதம்

இந்த மாத ஆரம்பத்தில் வீட்டில் சற்றுக் குழப்பமான நிலை உருவாகலாம். சற்று மந்தமான மாதமே. முதல் வார இறுதியிலும் இரண்டாவது வார ஆரம்பத்திலும் உற்சாகமான சூழ்நிலை நிலவும். மாதத்தின் பிற்பகுதியில் எதிர்பார்த்த எந்த விஷயமும் இலாபத்துடனேயே முடிவடையும். கணவன் மனைவி உறவு நல்ல நிலையிலேயே உள்ளது. கவலை தந்து கொண்டிருந்த தாயாரின் உடல்நிலை சற்று முன்னேற்றமடையும். கணவருக்கு இடமாற்றமும், பதவி ஏற்றமும் ஏற்படலாம். மாதத்தின் பிற்பகுதியில் எதிர்பாராத தனலாபத்திற்கும், கடல் கடந்து செல்லும் பிரயாணத்திற்கும் வாய்ப்பு உண்டு. கலைஞர்களுக்கும், சினிமா, நாடக, தொலைக்காட்சியில் நடிப்பவர்களுக்கும் ஏற்றமிகு சூழ்நிலை ஆரம்பம். நகைச்சுவை நடிகர்களுக்கு யோக காலம். ஒரு சிலருக்கு வலது கண்ணில் அறுவை சிகிச்சை வெற்றியுடன் நடைபெறும்.

## ரிஷப ராசி:

கிருத்திகை 2, 3, 4, — ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீர்ஷம் 1, 2 — ஆம் பாதங்கள்.

இரண்டாவது வார ஆரம்பத்தில் மூன்று நாட்களில் திடீர் பண வரவு, நிச்சய தாம்பூலம், பதவி உயர்வு என ஏதோ ஒருவிதத்தில் மகிழ்ச்சி நிலவும். குரு மங்கள யோகம், சந்திர யோகம் எனப்படும் இரண்டு மங்கள யோகங்கள், இந்த நாட்களில் ஏற்படுவதால் இந்த இராசிக்காரர்களில், திருமணமாகாதவர்களுக்கு, அல்லது இதுவரை பெண் பார்த்து அலுத்துப் போனவர்களுக்கு அனுகூல நிலை உருவாகும். சனி பகவான் தருமகருமாதிபதியானாலும் அவ்வளவாக நல்லது செய்ய மாட்டார். தீமையும் அதிகம் தர மாட்டார். காரணமில்லாமல் கோபமும், சண்டையும் ஏற்படும். மாதத்தின் முற்பகுதியில் எல்லா நிலையிலும் மனமகிழ்வும் பணவரவும் இருக்கும். ஆனால் பிற்பகுதி மந்த நிலைதான் தெரிகிறது. சுப விரயங்களும் ஏற்படும். உஷ்ண சம்பந்தமான, குறிப்பாக கண் சம்பந்தமான எரிச்சல், கட்டிகள் ஏற்பட்டு குணமடையும்.

## மிதுன ராசி:

மிருகசீர்ஷம் 3, 4 — ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 — ஆம் பாதங்கள்.

முதல் பதினைந்து தினங்களில் சுக்கிரன் ஒருவனே அனுகூலமாக இருப்பதால் சுப பலன்களை எதிர்பார்க்கலாம். வெளிநாட்டுப் பிரயாணமோ, சேது சமுத்திர ஸ்நானமோ ஏற்படலாம். பிற்பகுதியில் கலைஞர்களுக்கு ஏற்ற காலம், குறிப்பாக ஓவியக் கலைஞர்கள், வீடியோக்காரர்கள் நல்ல இலாபத்தை எதிர்பார்க்கலாம். எரிபொருள் துறையினர் கணிசமான நன்மையைப் பெறுவார்கள். சிலருக்குத் தீக்காயங்கள் ஏற்படக் காரணமுள்ளது. அங்காரக தோஷத்தையுடைய பெண்களுக்குத் திருமணம் கைகூடி வரலாம். பலருக்குப் பொழுது போக்கு, வெளியூர்ப் பிரயாணம் என மன் மகிழ்வுக்கேற்ற வகையில் சூழ்நிலை அமையும். இராசிநாதன் புதன் முதல் இரண்டு வாரங்களுக்கு அனுகூலம் செய்யும் நிலையில் இல்லை.

## கடக ராசி:

புனர்பூசம் 4 — ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.

முதல் வார இறுதியில் ஒரு சிலருக்குப் பதவி உயர்வும், பணவரவும் கிடைக்கும். மக்கட் செல்வம் தோன்றி மடியில் தவழும் பாக்கியமும் சிலருக்கு உண்டு. இதுவரை இத்தகைய பாக்கியம் பெறாத பெண்களுக்குப் புத்திர உற்பத்தி ஏற்படுவதற்கான நிலை, ஏற்பட்டு மகிழ்ச்சியைத் தரும். மகோதய புண்ணிய காலத்தில் வேதாரண்யம் போன்ற புனித ஸ்தலத்தில் நீராடி வந்தவர்களுக்குக் குருவும், செவ்வாயும், சந்திரனும் சேர்ந்தே நன்மையைத் தருகின்ற காலகட்டம் உருவாகியும் உள்ளது. இந்த மாதம் பூராவும் இந்த ராசிக்காரர்களுக்கு நன்மையே அதிகம் தரும் நாட்களாக அமையும். ஆனால் ஆயில்ய நட்சத்திரக்காரர்களுக்கு மாமியார் மருமகள் உறவு முறியச் சில நிகழ்ச்சிகள் நடக்கலாம். சிலருக்கு ஸ்ரீ சந்திர மௌலீஸ்வர சுவாமிகளைத் தரிசிக்கும் பாக்கியம் அபூர்வமாக ஏற்பட உள்ளது.

## சிம்ம ராசி:

மகம், பூரம், உத்திரம் 1 — ஆம் பாதம்.

மாதத்தின் முற்பகுதியைவிடப் பிற்பகுதி அனுகூலமாக உள்ளது. அலுவலகங்களில் பணிபுரியும் பெண்களுக்குப் பதவி உயர்வு

அல்லது விரும்பின இடமாற்றம் ஏற்படும். மக நட்சத்திரக்காரர்கள் நல்லதொரு முக ராசியுடையவர்களாக, பலவிதத்திலும் நன்மை பெறுவார்கள். சிலர் தீர்த்த யாத்திரை அல்லது உல்லாசப் பிரயாணமென வெளியூர் சென்று வருவார்கள். கலைஞர்கள், பாடகர்கள், நன்மை பெறுவார்கள். தரும கருமாதிபதிகளான குருவும் அங்காரகனும் இந்த ராசியைச் சேர்ந்தவர்களுக்கு மாதம் பூராவும் மகிழ்ச்சிகரமான மன நிலையை உண்டாக்கித் தருவார்கள். அம் மகிழ்ச்சியைத் தருகின்ற நிகழ்ச்சிகளில் சில திருமண விழாவில் பங்கேற்பு, அல்லது பக்திச் சொற்பொழிவினைக் கேட்கின்ற வாய்ப்பு என ஏதாவது ஒன்றாக அமையலாம். விருந்தினர்களை வரவேற்கவோ, அல்லது விருந்தினர்களாகச் செல்லவோ வாய்ப்பு ஏற்படலாம்.

**கன்னி ராசி:**

உத்திரம் 2, 3, 4 — ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 — ஆம் பாதங்கள்.

இன்பமும்துன்பமும்மாறிமாறிவருகின்ற காலகட்டம், பொன்னாபரணங்கள் அடகுக் கடையை நோக்கிச் செல்ல வேண்டி வரும். ஆனால் எதிர்பாராத தனலாபத்தால் அல்லது திடீர் உதவியால் மீண்டும் அவை வீடு திரும்பும். விளையாட்டில் வெற்றியும் கிடைக்கும். ஆனால் அவ்வெற்றி வெகு சிரமப்பட்டே அடைய வேண்டியிருக்கும். யதார்த்தமாகப் பேசுகின்ற சகோதரிகள் சற்றே அந்தக் குணத்தை முப்பது நாட்கள் மூட்டை கட்டி வையுங்கள். இல்லையேல் வள்ளுவர் வாக்குப்படி "சோகாப்பர்" ஆயினும் குருவின் பார்வையால் அத்தகைய நிலை ஏற்படாது தடுக்கப்படும். ஹஸ்த நட்சத்திரக்காரர்கள் ஓரளவுக்கு நன்மை பெறுவர்.

**துலா ராசி:**

சித்திரை 3, 4 — ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 — ஆம் பாதங்கள்.

இராசிநாதன் உச்சம் பெற்றிருப்பதால் குடும்பத்தில் இல்லத்தரசிகளின் கை ஓங்கி நிற்கும். அலுவலகங்களில் பணிபுரியும் பெண்களுக்கும், கலைத்துறையில் உள்ளவர்களுக்கும் புது வருஷம் நன்கு அமைவதற்கான சூழ்நிலை உருவாகும். இதுவரை பார்த்திராத புனிதத் தலங்களுக்கோ, அல்லது நவநாகரிக நகரங்களுக்கோ விஜயம் செய்யும் பாக்கியம் சிலருக்குக் கிடைக்கும். ஒரு சிலர் ஆன்மீகச் சொற்பொழிவுகளைக் கேட்டு பரவசத்தில் ஆழ்ந்திருக்க மற்றும் சிலர் கோயில் திருவிழாக்களைக் கோலாகலமாகக் கொண்டாடுவதில் பங்கேற்பதில் முனைந்திருப்பர். வருஷ ஆரம்பத்தில் ஒரு சிலருக்கு மன அமைதி குறையலாம். தோல், கண் சம்பந்தமான நோய் உண்டாகலாம்.

**விருச்சிக ராசி:**

விசாகம் 4 — ஆம் பாதம், அனுஷம், கேட்டை

இராசிநாதனும், குருவும் சேர்ந்தே பார்ப்பதால் இந்த ராசிக்காரர்கள் இம்மாதம் பூராவும் நல்ல பலனையே அடையலாம். தசா புக்தி நன்கு அமைந்திருந்தால் கூடுதலான பலன் ஏற்படும். அயல்நாட்டுப் பிரயாணம், நிலம் விற்பது, வாங்குவது, மற்றும் பொன் ஆபரணங்கள் செய்வதுபோன்றசுபவிஷயங்கள் ஏற்படும். வாக்கு ஸ்தானத்தில் உள்ள சனி பகவான் கோர்ட்டில் உள்ள வழக்கினை வெற்றிகரமாக முடித்துத் தருவார். பங்கு மார்க்கெட்தாரர்கள் பல லட்சங்களைச் சம்பாதிக்கும் யோகம் ஏற்படும். குறிப்பாக 9, 10, 11 தேதிகளில் எதிர்பாராத பெருந்தொகையோ, அல்லது நிலமோ, நகையோ, பிதுரார்ஜித சொத்தில் பங்கோ கட்டாயம் கிடைக்கும் வாய்ப்பு உண்டு.

**தனுசு ராசி:**

மூலம், பூராடம், உத்திராடம் 1 — ஆம் பாதம்.

மாத ஆரம்பத்தில் சுக்கிரனும், சூரியனும், புதனும் கூட்டுச் சேர்க்கையால் கூடுதலான நன்மையைத் தருவார்கள். எனவே வீட்டில் திருமணமோ, நிலம் வீடு என ஏதாவது ஒன்றை வாங்குவதோ அல்லது நல்ல இலாபத்திற்கு விற்பதோ போன்ற சுபவிஷயங்கள் ஏற்படலாம். சினிமாக் கலைஞர்களும், தொலைக்காட்சியில் பங்கு பெறும் நாடகக் கலைஞர்களும் நற்கீர்த்தியையும், நிதியையும் பெறுவர். மனை சம்பந்தமான வழக்கில் வெற்றி கிடைக்கும் வாய்ப்பு உண்டு. இந்த ராசி பெண்களின் மாமன் வகையறாவுக்கு அலைச்சலும், மன உளைச்சலும் ஏற்படலாம் வைத்தீசுவரன் கோவில் போன்ற சிவஸ்தலங்களுக்குப் புனித யாத்திரை செல்லும் வாய்ப்பும் வரலாம். இசைச் சொற்பொழிவாளர்களும் இலக்கியச் செல்வர்களும் பாராட்டும், பரிசும் பெறுவர். அல்லது அத்தகைய நிகழ்ச்சிகளில் பங்கு பெறலாம்.

**மகர ராசி:**

உத்திராடம் 2, 3, 4 — ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 — ஆம் பாதங்கள்.

சுக்கிர சூர்ய சேர்க்கையால் இதுவரை இருந்த வக்கிரங்கள் குறைந்து, நன்மைகள் அதிகமாகும் நிலை ஏற்படும், புது வருட



**NAVAJEEVAN SOCIAL WELFARE CENTRE**
**(A unit of NBRC)**

1 — 57, North Mada St., Near Shankar Mutt,
P.O. — Tirumala — Via — Tirupati (A.P.) Pin — 517 504.

**நவஜீவன் நற்பணி மன்றம் திருமலை — திருப்பதி**

## ஸ்ரீ வெங்கடேச கோடி நாம எழுத்து வேள்வி — பகுதி-II

கலியுகத்தில் கண்கண்ட தெய்வமான ஸ்ரீ வெங்கடாசலபதி திருக்கோயில் கொண்டிருக்கும் இந்தத் திருமலை—திருப்பதி புண்ய க்ஷேத்திரத்திலிருந்து, "நவஜீவன் நற்பணி மன்றம்" பார்வையற்றவர்களுக்குக் கடந்த 10 ஆண்டுகளாக பலவித உதவிகள் புரிந்து வருவது குறித்து வாசகர்கள் அறிந்ததே. தவிரவும் இந்த நற்பணி மன்றம் மக்களிடையே நாட்டுப்பற்று மற்றும் கடவுள் பக்தி குறித்தும் விசேஷமாகப் பிரசாரம் செய்து வருகிறது.

ஸ்ரீ காஞ்சி ஆசார்ய ஸ்வாமிகளின் விசேஷ அனுக்ரஹத்துடன் கடந்த ஆகஸ்ட் முதல் நவம்பர் 8—ஆம் தேதி வரை 108 நாட்களில் ஸ்ரீ வெங்கடேச திவ்யநாமத்தை எழுதி அனுப்பும்படி நாங்கள் விடுத்த வேண்டுகோளின் படி, பல்லாயிரக்கணக்கான ஆஸ்திகர்கள் பக்தி சிரத்தையுடன் எழுதி அனுப்பியிருந்தார்கள். இப்படி எழுதி அனுப்பிய எல்லா ஆஸ்திக அன்பர்களின் சார்பாகவும் விசேஷ பூஜை, பிரார்த்தனை செய்வித்து, உண்டியில் காணிக்கையும் சமர்ப்பித்துப் பிரசாதம் அனுப்பி வைக்கப்பட்டது. தவிரவும் தேர்ந்தெடுக்கப்பட்ட 108 ஆஸ்திகர்களுக்கும் அவர்களின் இருப்பிடத்திலிருந்து இலவசப் புனிதப் பயணமாக திருப்பதி வந்து செல்ல, ரயில் — பஸ் சார்ஜ் மணியார்டர் மூலம் அனுப்பி வைக்கப்பட்டது.

## கோடி நாம எழுத்து வேள்வி SVK-II உங்களிடம் சில வேண்டுகோள்

இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும், அயல்நாடுகளில் இருந்தும் தொடர்ந்து மீண்டும் மீண்டும் பல ஆஸ்திக அன்பர்கள் கேட்டுக் கொண்டபடி, ஸ்ரீ காஞ்சி ஆசார்ய ஸ்வாமிகளின் விசேஷ அனுக்ரஹத்துடன், கோடி நாம யக்ஞத்தின் இரண்டாம் பகுதியை மார்ச் 1 முதல் ஜூன் 9 — ஆம் தேதி வரை 101 நாட்களில், திருமலை — திருப்பதியில் நடத்தத் திட்டமிட்டுள்ளோம். இந்த பக்தி வேள்வியில் கலந்து கொள்ள விரும்பும் ஆஸ்திகர்கள், குறிப்பாக மாணவர்கள், திருமணமாகாத பெண்கள் திருவோணம் மற்றும் சனிக்கிழமை போன்ற முக்கிய தினங்களில் "ஓம் நமோ வெங்கடேசாய," என்கிற திவ்ய நாமத்தை நல்லதொரு வெள்ளைத்தாளில் 1008 முறை எழுதி, அதனுடன் உங்களுடைய சுயவிலாசத்தையும் தெளிவாக எழுதி சாதாரண தபாலில் மேற்காணும் எமது விலாசத்திற்கு அனுப்ப வேண்டுகிறோம். மேலும் பூஜை செலவுகள், உங்கள் சார்பாக உண்டியில் செலுத்தும் காணிக்கை, விழியற்றோர்க்கு நித்ய அன்னதானம், கூட்டுத் திருமணத்திற்குத் திருமாங்கல்யம், பக்தர்களின் முன்னிலையில் தேர்ந்தெடுக்கப்படும் ஆஸ்திகர்களுக்கு வெள்ளிக்காக போன்றவை செய்ய ஆகும் செலவு, இலவச புனிதப் பயண ஏற்பாடு மற்றும் விசேஷ தபால் செலவிற்காக தயது செய்து ரூ. 50/—க்குக் குறையாமல் தனியாக மணியார்டர் (அ) டிமாண்ட் டிராஃப்ட் மூலமாக மட்டும் அனுப்பி வைக்க வேண்டுகிறோம். மணியார்டர் கூப்பனில் உங்களது முகவரியையும் தெளிவாக எழுதும்படி வேண்டுகிறோம். (பின்கோடுடன்)

### உங்களுக்காகச் சில தொண்டுகள்:

1. இலவச திருப்பதி புனிதப் பயணம்!
2. தங்கத்தில் திருமாங்கல்யம்!
3. வெள்ளிக்காக டாலர்!
4. இலவச கூட்டுத் திருமணம்!

இந்தப் புனித எழுத்து வேள்வியில் கலந்து கொண்டு 1008 முறை திவ்யநாமத்தையும் எழுதி ரூ. 50/—க்குக் குறையாமல் காணிக்கை அனுப்பும் ஆஸ்திக அன்பர்களின் சார்பாக விசேஷப் பிரார்த்தனை, பூஜை செய்வித்து உண்டியில் காணிக்கையும் சமர்ப்பித்து, ஸ்ரீவாரி மஹாபிரசாதமும் உடன் அனுப்பி வைக்கப்படும். மேலும் எழுத்து வேள்வியின் நிறைவுநாளான ஜூன் 9—ஆம் தேதியன்று, உயர்மட்ட அதிகாரிகள் மற்றும் பக்தர்கள் முன்னிலையில் 101 அன்பர்களைக் குலுக்குச் சீட்டு முறையில் தேர்ந்தெடுத்து, அவர்களுக்குப் பூஜைக்குரிய ஒரு வெள்ளிக்காக டாலர் அனுப்பி வைப்பதுடன், இலவசமாகத் திருப்பதி யாத்திரை வந்து செல்லத் தேவையான ரயில் — பஸ் சார்ஜை உடன் கணக்கிட்டு மணியார்டரும் அனுப்பி வைக்கிறோம். மேலும் இந்த எழுத்து வேள்வியில் கலந்து கொண்ட திருமணமாகாத பெண்களிலிருந்து 9 பெண்களைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு, தங்கத்தில் திருமாங்கல்யம் செய்து ஸ்ரீ பத்மாவதி தாயார் பிரசாதமாக வழங்கப்படும். தவிரவும் இந்த பக்தி யக்ஞத்தில் கலந்து கொண்ட 11 ஏழை; கன்னிப் பெண்களுக்கும் தங்கத்தில் திருமாங்கல்யம் அளித்து இதர செலவுகளையும் மேற்படி மன்றமே ஏற்றுச் சிக்கனமாகத் திருமலையில் கூட்டுத்திருமணத்திற்கும் ஏற்பாடு செய்விக்கிறோம். (இதுகுறித்து விளம்பரம் பிறகு தனியாக வெளியிடப்படும்).

இலவசப் புனிதப் பயணத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்படும் 101 அன்பர்கள் மற்றும் தங்கத் திருமாங்கல்யத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்படும் 9 பெண்களின் பெயர், விலாசத்துடன் ஜூன் — ஜூலை மாத தமிழ்ப் பத்திரிகைகளில் விவரம் காணலாம். இந்த எழுத்து வேள்வி நடைபெறும் நாட்களில் தினசரி விசேஷ பூஜை, பார்வையற்றவர்களுக்கு நித்ய அன்னதானம் வழங்கவும் ஏற்பாடு செய்யப்படும்.

"ஓம் நமோ வெங்கடேசாய"

ஸ்ரீ K. R. ACHARYA,
(Organiser).

ஆரம்பம் நன்கமையும். மொத்தத்தில் மாதம் பூராவும் ஓரளவுக்கு நன்மை தருகின்ற நிலையே தெரிகின்றன. எனினும் ஒரு சிலருக்கு இரத்தக் கொதிப்பு, எலும்பு, முட்டி வலிகள் ஏற்பட்டுக் குணமாகலாம். பலருக்கு வெளிநாட்டுப் பிரயாணம் ஏற்படும். தசாபுக்தியைப் பொறுத்துப் பலன்களில் ஏற்றத்தாழ்வு ஏற்படலாம். இரும்பு வியாபாரிகளும், உப்பு சம்பந்தப்பட்ட இரசாயனத் தொழில் துறையினரும், ஏற்றம் பெறுவர். திருவோண நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் வேட்டையாடுதல் படகு ஓட்டுதல் போன்ற உல்லாச கேளிக்கைகளில் ஈடுபடுகின்ற வாய்ப்பு உள்ளது.

### கும்ப ராசி:

அவிட்டம் 3, 4 — ஆம் பாதங்கள். சதயம், பூரட்டாதி 1, 2, 3 — ஆம் பாதங்கள்.

எதிர்பார்க்கும் இனங்களில் இலாபம் உண்டு. எத்தனித்த காரியங்கள் எல்லாம் கைகூடி வரும். சதய நட்சத்திரக்காரர்களுக்குக் கூடுதலான பலன் உண்டு, எதிர்பாராத தன லாபம், வீடு, மனை வாங்கும் யோகம் காணப்படுகிறது. சுக்கில ஆண்டில் அப்பலன்கள் அதிகம் நடைபெறும். பெண்களுக்குச் சிறந்த யோக காலம். இம்மாதத்தில் மங்கைகளின் மனத்திற்கு ஏற்ற மகிழ்ச்சிகரமான சூழ்நிலை உருவாகும். ஒரு சிலருக்கு உத்தியோகம் பெறும் வாய்ப்பும், ஏற்கெனவே பணியில் உள்ள பெண்களுக்குப் பதவி உயர்வும் ஏற்படும். பட்டங்களும் பதவிகளும் தேடி வரும். இசைக் கலைஞர்களுக்கு இதுவரை கிடைத்திராத புகழும் பெருமையும் பெறும் வாய்ப்புள்ளது. பட்டப் படிப்பு படிக்கும் இந்த ராசிப் பெண்கள் மாநிலத்தில் சிறப்பான முறையில் தேர்ச்சி பெற்றுப் பெருமை அடைவார்கள்.

### மீன ராசி:

பூரட்டாதி 4 — ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.

எதிலும் எப்போதும் நிதானம் தேவை. வம்புகளும், வழக்குகளும் உங்களைத் தேடி வரும். எனினும் சுக்கிர பலத்தாலும் சூரியனின் அருளாலும் விபரீதம் ஒன்றும் ஏற்படாமல் தடுக்கப்படும். சுப நிகழ்ச்சிகளுக்கு வாய்ப்பு உள்ளது. வீடு, மனை வாங்க அல்லது தொழில் முதலீடு செய்ய நகைகளை அடகு வைக்க வேண்டி வரும். ஆனால் நஷ்டமேற்படாது. வாசனைப் பொருட்களையும், மலர்களையும் விற்கும் வியாபாரிகளுக்கு விபரீதமான லாபம் உண்டு. தீர்த்தயாத்திரைக்கும், வெளிநாட்டுப் பிரயாணத்திற்கும், எதிர்பாராத தனலாபத்திற்கும் வாய்ப்பு உள்ளது. சில பெண்களுக்கு இடமாற்றம் ஏற்படும். சிலர் வீட்டில் புது ஜீவன் ஒன்று பிறந்து மகிழ்ச்சியைத் தரும் சூழ்நிலை தருகிறது.

### ஆயுள் காரகனை ஆராதியுங்கள்

'**பா**பத்தின் கூலி மரணம்,' என இயேசுவின் பக்தர்கள் கூறுவதைக் கேட்டிருப்பீர்கள். அத்தகைய மரணத்தை அளிக்கும் ஆற்றல் சனீஸ்வர பகவானுக்கே உண்டு. அதனால்தான் அவரை ஆயுள்காரகன் என்று அழைப்பார்கள். உருவத்தில் குள்ளமாகவும், நிறத்தில் கறுப்பாகவும் உள்ள சனீஸ்வரன், நம் உடலில் தொடை முதல் பாதம் வரை வியாபித்துள்ளார். எனவே தான் பெரியவர்களை வணங்கும் போது அவர்களது பாதங்களில் விழுந்து வணங்குகிறோம். அப்போது அந்தப் பாதத்தில் வியாபித்துள்ள சனீஸ்வர பகவான் நமக்கு அருள் பாலிக்கும் முகத்தான், அந்தப் பெரியவர்கள் வாயினால் தீர்க்காயுளுடன் இருக்க வேண்டுமென வாழ்த்திச் சொல்லுகிறார். ஆன்றமைந்த பெரியோர்களை பெண்கள் வணங்கும் போது தீர்க்கசுமங்கலியாக இருக்க வேண்டுமென அவர்களை வாழ்த்துவதன் மூலம் அப்பெண்களின் கணவர்களுக்கு நீண்ட ஆயுள் உண்டாக ஆசி கூறுகிறார்கள். அத்தகைய சனீஸ்வரன் பாதத்தில் மட்டுமல்ல, நமது கைகளில் நடுவிரலுக்குக் கீழே சனி மேடாகக் காட்சி அளிக்கிறார். மனிதனுக்கு ஆயுள் ஒன்றுதான் பிரதானம் என்பதால்தான் சனீஸ்வர மேட்டிலிருந்து ஆரம்பமாகும் நடுவிரல் மற்ற விரல்களைவிட உயரமாகவும், நடுநாயகமாகவும் திகழ்கிறது எனலாம். இந்த நடுவிரலுக்கு சனி விரல் என்னும் பெயர் உண்டு.

அத்தகைய ஆயுட்காரகனாகிய சனீஸ்வரனின் மேடு (எஸ்) அகன்றும் ரேகை ஏதுமின்

---

நாம் மாவு மில்லில் குறைந்த அளவு மிளகாய் அரைக்கும் போது, மிஷினில் தங்கிவிடும் என்ற சந்தேகம் இருந்தால், ஓர் ஆழாக்கு அரிசியைப் போட்டு அதில் அரைத்துஎடுத்துவரலாம். பஜ்ஜி, பக்கோடாவுக்கு அந்த மாவை உபயோகிக்கலாம்.

— பார்வதி.

அடைக்குத்தேவையான அரிசி, துவரம் பருப்பு, உளுத்தம் பருப்பு, கடலைப் பருப்பு, மிளகாய் இவற்றுடன் நிலக் கடலையையும், பச்சைப் பட்டாணியையும் சேர்த்து அரைத்தால் அடை சுவையாகவும் கரகரப்பாகவும் இருக்கும்.

— விஜயலட்சுமி சுவாமிநாதன்.




ரியும் ரோஜா நிறத்தில் இருந்தால் திடகாத்திரமும் நீண்ட ஆயுளும் உண்டு என கைரேகை சாஸ்திரம் கூறுகிறது. அத்துடன் அந்த மேட்டில் கிரக சந்தி (ஜே) மிக நன்கு அமைந்திருக்க வேண்டும். கிரக சந்தி என்றால் ஒரு மேட்டின் மேல் உள்ள வரிகள் படத்தில் உள்ளது போல் அமைந்திருக்க வேண்டும். அவ்வாறு அமைந்தால் அத்தகையவர்கள் எந்தவித அங்கக் குறைவும் இல்லாமல் வாழ்வார்கள். அத்துடன் உள்ளங்கையில் அடிப்பாகத்திலிருந்து சனிமேட்டை நோக்கி நேராக ஒரு ரேகை (எக்ஸ் – ஒய்) வந்திருக்க வேண்டும். இந்த ரேகையின் அமைப்பைக் கொண்டுதான் ஒருவரது தொழில், வருமானம், ஆயுள், ஆரோக்கியம் அனைத்தையும் அறிய முடியும். ஆங்கிலம் போன்ற பிற மொழிகள் நன்கு கற்றுத் தேர்ச்சி அடைய சனிமேடும் விதிரேகை (எக்ஸ்-ஒய்) எனும் சனிரேகையும் நன்கு அமைந்திருக்க வேண்டும்.

சிறந்த நீதிபதிகளாகவும், தொழில் நுட்பக் கலைஞர்களாகவும், பொறியியல் துறை வல்லுனர்களாகவும் உள்ளவர்களுக்கு இத்தகைய சிறந்த சனிமேடும், விதிரேகையும் நன்கு அமைந்திருக்கும். எனவே நமது ஆயுள் தீர்க்கமாகவும், கை கால்கள் திடமாகவும் இருக்க ஆயுட்காரகனாகிய சனீஸ்வர பகவானை அனுதினமும் இரும்பு அகலில் விளக்கேற்றி ஆராதிக்க வேண்டும். எவர் சில்வர் கறுக்காத இரும்பு என்பதை அனைவரும் அறிவர். எனவே தெரிந்தோ, தெரியாமலோ, விளக்கிக் கழுவ சுலபமாக இருக்கிறது என்ற காரணத்தாலோ, எவர்சில்வர் விளக்கை ஏற்றும் பழக்கம் பல குடும்பங்களில் உள்ளது. ஒரு விதத்தில் அது நல்லது என்பதால் இரும்பு அகல் விளக்குக் கிடைக்காதவர்கள் எவர்சில்வர் அகலை அல்லது விளக்கைப் பயன்படுத்தலாம்.

— ஜெயலட்சுமி கிருஷ்ணன்.

# மனசாட்சிக்கு சரியென்று பட்டதைச் செய்தேன்...



பொருளாதாரத்தில் பின்தங்கிய எளிய மக்கள் வாழும் குடிசைப் பகுதி அது. அந்த இடத்திற்குப் பொருந்தாத ஓர் இளம் பெண் நல்ல தோற்றத்துடன், இரண்டு குழந்தைகளுடன் அங்கு சுற்றியலைவதைப் பார்த்திருக்கிறார், அடுத்த தெருவில் வாழும் ஒரு மாடிவீட்டுப் பெண்மணி. (அந்த மாடியிலிருந்து பார்த்தால் இங்குள்ள குடிசைப் பகுதிகள் முழுவதும் தெரியும்.)

சாதாரணமாக இருந்தால், 'யாரோ எவரோ நமக்கென்ன' என்று இருந்து விட்டிருப்பார்கள். இவர் அப்படி விடவில்லை. அந்தப் பெண்மணியை அழைத்து வரச் செய்து விசாரித்திருக்கிறார். ஓரளவு வசதி படைத்த குடும்பத்தைச் சேர்ந்த அந்தப் பெண், ஒரு கயவனால் ஏமாற்றப்பட்டு, வாழ்க்கைக் கருகிப் போனதையும், இரண்டு குழந்தைகளுடன் வாழ வழி தெரியாமல் இங்கே அடைக்கலம் புகுந்திருப்பதையும் சொல்லிக் கதறியிருக்கிறாள்.

இவர் அந்தப் பெண்மணிக்கு அருகிலேயே ஒரு நல்ல வேலை வாங்கிக் கொடுத்திருக்கிறார். குழந்தைகளை ஹாஸ்டலில் தங்கிப் படிக்க வசதி செய்து கொடுத்திருக்கிறார். இன்றைக்கு அந்தக் குழந்தைகள் மிக நல்ல நிலைக்கு வந்து விட்டார்கள்!

இப்படி ஒரு கதை மட்டுமேயல்ல, ஆஸ்பத்திரியில் நடக்க வராமல் தவித்த நோயாளி, தன்னுடைய கார் டிரைவர், பால்காரர் எனப் பலராக இருந்தாலும் அவர்களின் வாழ்விலே எல்லாம் அக்கறை கொண்டு, அவர்களுக்கு வேண்டிய உதவிகள் செய்து, நல்ல நிலைக்குக் கொண்டு வர அரும்பாடுபட்டவர் —

— ஜெயம்மா!

எண்பது வயதான இந்த முதிய பெண்மணி எல்லோரையும் போலச் சமூகசேவை என ஆரம்பிப்பதோடு நிற்பதில்லை. தான் உதவி செய்தவர்களுக்கு எல்லாம் முழுமையான பலன் கிடைத்ததா என்பதையும் தொடர்ந்து கவனித்துக் கொண்டே போனார். குடத்திலிட்ட விளக்காக இந்தப் பெண்மணி அடக்கத்துடன், உதவி செய்தவர்கள் ஆயிரக்கணக்கில் இருக்கிறார்கள்.

இவருடைய வாழ்க்கையைப் பார்த்தால் பின்னணி வியப்பாக இருக்கிறது. மிகப் பழைமையான ஆசாரத்தில் பிறந்து, கட்டுப்பாடான கணவனிடம் முப்பத்திரண்டு வயது வரை வாழ்ந்தவர். அந்த இளம் வயதிலேயே கணவனை இழந்ததும், அவருள் ஒரு புது ஜெயம்மா உருவாகி இருக்கிறார். குழந்தைகளும் இல்லாத காரணத்தால் மூலையில் முடங்கிப் போய் விடவில்லை இந்தப் பெண்மணி. இனிமேல் நமக்கு என்ன, கிருஷ்ணா, ராமா என இருக்கலாம் எனச் சுருண்டு கொள்ளவில்லை. இவருள் எப்படி அந்த உத்வேகம் தோன்றியதோ, இனி சமுதாயத்திற்குப் பயனுள்ள வாழ்க்கை வாழ வேண்டும் எனத் தீர்மானித்திருக்கிறார்.

கில்ட் ஆஃப் சர்வீஸில் உறுப்பினராகி மருத்துவ மனை நோயாளிகளுக்கு உதவுவது, ஏழைப் பெண்களுக்கு வழிகாட்டுவது, தேவையானவர்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்வது என முழுமையாகத் தன்னையே மறந்து இருக்கிறார்.

இவரிடம் இன்னோர் ஆச்சரியமான விஷயம் —

இன்றைக்கும், பெண்கள் புடைவை, நகை, வீடு எனச் சேர்க்கும் ஆசை உள்ள நாளில், நிறைய புதுப்புது மனிதர்களைப் பார்க்க வேண்டும், உலகம் முழுவதும் சுற்றிவர வேண்டும் என விரும்பியிருக்கிறார்.

பவுன் ஐம்பது ரூபாய், வீதம் இருநூற்றியம்பது பவுன் நகையை விற்று அயல்நாட்டுப் பயணம் மேற்கொண்டு இருக்கிறார்!

இவருடைய இந்த வித்தியாசமான வாழ்க்கைக்கு அந்தக் காலத்தில் எதிர்ப்பு கிளம்பவில்லையோ?

''நிறைய இருந்தது. என் மாமியார் என்னைத் திட்டினாராம். நான் மடிசார் கட்டுவதை விட்டுவிட்டு ஆறு கெஜம் கட்ட ஆரம்பித்தவுடன் அதற்கும் உறவினர்கள் எல்லாம் பேசினார்களாம். ஆனால் நான் என் மனச்சாட்சிக்குச் சரியென்று பட்டதைச் செய்கிறேன். நான் பயனுடைய வாழ்க்கையையே வாழ்கிறேன். என்று தைரியமாகவே இருந்தேன்...'' என்கிறார் ஜெயம்மா.

இந்த முதிய வயதிலும், வந்து உதவி கேட்பவர்கள் கேட்பது நியாயமாக இருக்கும் நிலையில் அவர்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்கிறார்.

தன்னுடைய இல்லற வாழ்க்கை முடிந்து விட்டாலும், அதனால் சோர்ந்து போகாது, நம்மை ஆண்டவன் படைத்தது ஏதோ ஒரு நல்ல காரணத்துக்காகத்தான் என்று பயனுள்ள வாழ்வு வாழ்ந்து வரும் இந்தப் பெண்மணியின் வாழ்க்கை நிச்சயம் பலருக்கும் வழிகாட்டியாகத்தான் இருக்கும்.

— மஞ்சுளா ரமேஷ்

# இப்பொழுது! நறுமணமிக்க ஓர் புதிய வேவ்

ஒவ்வொரு குளியலிலும் அலையலையாய் பூவின் நறுமணம். நாள் முழுவதும் புதுப் பொலிவுடன் இருக்க-புதிய 'வேவ்' உங்களுக்கும் உங்கள் குடும்பத்தினருக்கும் சகாய விலையில் கிட்டும் ஒரு குளியல் சோப்.

**புதிய வேவ்**

குடும்பத்தினரின் குளியல் சோப்

**உபயோகித்து பாருங்கள்!**
**நீங்கள் அதையே**
**விரும்பி நாடுவீர்கள்.**







MSIL A product of
Mysore Sales International Limited, Bangalore-560 052.

MCA/Wave/5 Tam



# ஆதரவு அற்றவர்கள்!

**எல்லோருக்கும் தாய், தந்தை, உடன்பிறந்தவர் என அமைவதில்லை.**

**ஆதரவு இல்லாத குழந்தைகள், பெண்கள் — ஒவ்வொருவரின் வாழ்க்கையின் இடையேயும் வரத்தான் செய்கிறார்கள். அவர்களை அனுதாபத்தோடு புரிந்து கொள்வோம்.**

"அழகான ராகத்தோட பேரை எனக்கு வெச்சிட்டு எங்கப்பாவும், அம்மாவும் என்னோட இரண்டாவது வயசிலேயே இறந்துட்டாங்க. என்னோட வாழ்க்கையே அபஸ்வரமாயிடுச்சு" என்று ரஞ்சனி சொன்னபோது பரிதாபத்தைவிட ஆச்சரியமே மேலோங்கியது.

தொடர்ந்து நெருங்கிய உறவுக்காரர்களுக்கு யாருமே இல்லாமல் ஒரு பெண் வாழுறதும் ஒண்ணுதான்; சாகறதும் ஒண்ணுதான். இன்னும் கேட்டா. அவ செத்துப் போவதே நல்லது" என்று அடுத்த குண்டை வீசினார்.

ரஞ்சனிக்குக் கூடப் பிறந்தவர்கள் யாரும் கிடையாது. அவளின் பெற்றோர் ஒரு ஸ்கூட்டர் விபத்தில் காலமானபின் ஐந்து வயது வரை அவளை அவளுடைய மாமாவும், மாமியும் வளர்த்தனர். பிறகு அவள் மாமி தடுத்தும் கேட்காமல், அவள் மாமா அவளை ஓர் அனாதை விடுதியில் சேர்த்து விட்டார். காரணம் என்ன தெரியுமா? மாமாவின் குழந்தைகளுக்கும் ரஞ்சனிக்கும் அடிக்கடிச் சண்டை நடக்குமாம்! அனாதை விடுதியில் ரஞ்சனி வேறு யாருடனும் கலந்து பேச மாட்டாளாம்.

"எங்களுக்கு வயிற்றுக்குக் கூடச் சரியாகச் சாப்பாடு போட மாட்டார்கள். நிறுவனத்தினர் தேவையான மளிகை சாமான்களை சமையலுக்காகக் கொடுப்பார்கள்தான். ஆனால் சமையல் வேலை செய்பவர்களே அதில் கணிசமான பகுதியை எடுத்துக் கொண்டு விடுவார்கள்.

முதலில் அவ்வப்போது வந்து பார்த்துக் கொண்டிருந்த மாமாவும், மாமியும் கொஞ்சம் கொஞ்சமாக வருவதைக் குறைத்துக் கொண்டனர்.

எனக்குக் கடவுள் நம்பிக்கை உண்டு. அதனால்தானோ என்னவோ எனக்கு அனாதை வாழ்க்கையை விதித்த கடவுளை அடிக்கடி திட்டுவேன்.

தினமும் இரண்டு மணி நேரமாவது புத்தகங்களை வைத்துக் கொண்டு உட்கார்ந்தாலும் படிப்பது மனத்தில் ஏறாது. எப்படியோ எட்டாம் வகுப்பிலிருந்து படிப்பில் சுவாரசியம் ஏற்பட்டது. நன்கு படித்தேன். பிறகு ஆசிரியர் பயிற்சியையும் முடித்து ஓர் ஆரம்பப் பள்ளியில் வேலைக்குச் சேர்ந்தேன்.

நான் பாட்டுக்கு உப்புச் சப்பு இல்லாவிட்டாலும், ஏதோ அமைதியான வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தேன். அப்போதுதான் நான் வளர்ந்த அனாதை விடுதியின் மியூசிக் டீச்சர் இவரைப் பற்றிக் குறிப்பிட்டார்."

'இவர்' என்றது கருணாகரனை. தந்தையை இழந்த கருணாகரன் சற்றுக்குறைந்த சம்பளத்தில் ஒரு கம்பெனியில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். மியூசிக் டீச்சர் தலையீட்டால் கருணாகரனுக்கும், ரஞ்சனிக்கும் திருமணம் நடந்தது.

"நான் எவ்வளவோ அன்பாகத்தான் என் கணவரிடம இருந்தேன். ஆனால் அவருக்கோ என் மேல் ஆசையிருப்பதாகவே தெரியவில்லை. என் மாமியார் அதிகாரம் செலுத்துகிற டைப். அவரை ஒரு முறைகூட எதிர்த்துப் பேசியதில்லை. அந்த அளவுக்கு நான் அட்ஜஸ்ட் பண்ணிக் கொண்டு இருப்பவள். ஆனாலும் என் அருமையை என் கணவர் புரிந்து கொள்ளவில்லை. தன்கூட தன் கம்பெனியில் வேலை செய்யும் ஒரு பெண்ணை வேறு இரண்டு முறை வீட்டுக்கு அழைத்து வந்து விட்டார். அந்தப் பெண்ணுடன் இவருக்குத் தகாத உறவு உண்டோ என்று எனக்குள் எழும் சந்தேகத்தை மனத்திலேயே வைத்து மறுகிக் கொண்டு, பிறந்த வீட்டு மனிதர்களில்லாத நிலையில் சாய்ந்து அழ எந்தத் தோளுமில்லாமல் நான் படுகிற கஷ்டத்தை என்னவென்று சொல்வது? யாரிடம் சொல்வது?"

ரஞ்சனி அனுபவிக்கும் அவலங்களைப் புன்னகையுடன், ஆனால் அக்கறையுடன் கேட்டுக் கொண்டார் மனவியல் நிபுணர் திருமதி சாந்தி கருணாகரன் — பின்பு விளக்கமளித்தார்.

"ரஞ்சனியைப் பொறுத்தவரை அவளுடைய பிரச்னைகளுக்கு அவளேதான் முக்கிய காரணம். இப்படி அவள் தனக்குத் தானே பிரச்னையாகிப் போனதற்கு அவளது பின்புலம் — அதாவது சிறு வயதிலேயே அவள் தன் தாய், தந்தையை இழந்தது — முக்கியப் பங்கு வகிக்கிறது.

பொதுவாகச் சிறு வயதிலேயே தாய், தந்தையரை இழந்த பெண் பாதுகாப்புணர்வு இல்லாமல் இருக்கிறாள். புரிந்து கொண்டு, ஆதரவளிக்க நெருங்கிய உறவினர்களும் இல்லாவிட்டால் அனாதையாக வளரும் அப்பெண் வாழ்வின் உயிர்ப்புகள் அனைத்தையும் இழந்து விட்டதாகவே நினைக்கிறாள். தன்னைப் பற்றியும் உறுதியான நிலையில்லாமல், மற்றவர்களைப் பற்றியும் சரியாகத் தீர்மானிக்க முடியாமல் அவள் ஆழ்ந்த தாழ்வு மனப்பான்மையை வளர்த்துக் கொள்கிறாள். மற்றவர்களிடம் போதிய நம்பிக்கையில்லாததால் சகஜமாகத் தன் உணர்ச்சிகளை வெளிக்காட்டிக் கொள்ளாமல், நத்தையாய்த் தனக்குள் ஒடுங்கிக் கொள்கிறாள். ஆதரவற்ற பெண்கள் உற்சாகமிழந்து, மந்தமாக இருப்பதும் சகஜம்.

அதுவும் அனாதை விடுதிகளில் வளரும் பெண்கள் அன்புக்கு ஏங்குபவர்களே. ஓரளவு அவர்கள் உடல் வளர்ச்சியும் அதிக அளவு அவர்கள் மன வளர்ச்சியும் இதனால் பாதிக்கப்படும்வாய்ப்புஉண்டு.(நான்எல்லாவற்றையுமே பொதுப்படையாகத்தான் சொல்கிறேன். இப்படிச் சொல்வதால் அனாதையாய் வளரும் பெண்கள் அனைவருக்குமே மேற்கூறிய குறைகள் இருக்குமென்று அர்த்தமில்லை) சில ஆதரவற்ற பெண்கள் 'திருடுவதும், மாட்டிக் கொள்வதும் உண்டு. திருட வேண்டுமென்பது இவர்கள் நோக்கமல்ல. எப்படியாவது மற்றவர்கள் கவனத்தைத் தன் புறம் ஈர்க்க (ஏனெனில் 'தாங்கள் கவனிக்கப்படாதவர்கள்' என்ற எண்ணம் இவர்களுக்கு எப்போதும் உண்டு) திருடுதல் போன்ற தவறான வழிகளில் ஈடுபடுகின்றனர்.

இதுபோன்ற பெண்கள் வளர்ந்த பிறகு வேலைக்குப் போகும் போதோ, திருமணம் செய்த பின்போ கூட இந்த குண நலன்கள் வெளிப்படும்.

ஓர் பெண்ணை என்னிடம் சிகிச்சைக்கு அழைத்து வந்திருந்தனர். அவள் அனாதை. செவிலி வேலை பார்த்துக் கொண்டிருந்தாள். அதிகமாய்ப் பொய் சொல்ல ஆரம்பித்தாளாம். தனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதாகவும், குழந்தைகள் இருப்பதாகவும் பொய் கூறினாள். தன் 'கணவனை'ப் பற்றி மற்ற செவிலியரிடம் விதம் விதமாகக் கதை கூறிய அவள் மெதுவாக மற்றவர்கள் பற்றியும் பொய் சொல்லத் தொடங்கினாள். நிலைமை மோசமானது.

இதைப் பற்றியெல்லாம் அவளிடம் கேட்ட போது "நான் அப்படியெல்லாம் சொல்லவில்லையே" என்று சாதித்தாள். மற்றபடி சாதாரணமாகத்தான் என்னிடம் பேசினாள். அவளுடன் பேசப் பேச எனக்கு சில விஷயங்கள் புரிந்தது. தான் அனாதை; எனவே தனக்குக் கல்யாணம் நடக்காது என்ற நினைப்பில் இருந்த அவள் கல்யாணக் கனவாவது காண்போமே என்று கற்பனையைப் படர விட்டாள். கூடப் பணிபுரிந்த மற்ற செவிலியர் திருமணமானவர் என்பதைத் தெரிந்து கொண்டதும், தான் அவர்களுக்கு எந்தவிதத்திலும் குறைந்தவளில்லை(!) என்று நிரூபித்துக் கொள்வதாகக்

**மாணவிகள், வேலைக்குப் போகும் பெண்களுக்கு:**

உபயோகித்த பழைய இரயில் சீசன் டிக்கெட்டுகளை அப்படியே எறியாதீர்கள். (கிழித்து எறியவும்). அவைகளில் தேதிகளைச் சாமர்த்தியமாகத் திருத்தித் தவறாக உபயோகிப்பவர்களைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். (உங்கள் விலாசம் அவற்றில் இருப்பதால், தொல்லைகள் ஏற்பட வாய்ப்பு உண்டு.)

—சுகிராஜினி



JAN | FEB | MAR | APR | MAY | JUNE | JULY | AUG | SEP | OC

SOUTHERN RAILWAY (CN. 17913)
MONTHLY ADULT
SEASON TICKET
Second Class 31
Cost Rs. 21-00
No 50894
Pass Shri R. Sajjath
Address 17 [illegible] ROAD
[illegible] Male/Female Age 21
Between MADRAS EGMORE
and PALAVANTHANGAL
From 16 MAR 1989 To 15 APR 198
Signature of Booking Clerk
SUBRAMANIAN
of Commercial Supdt
1 2 3 4 5 6 7 8 9 10 11 12
13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24



கருதி, தனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதாகக் கதை அளந்தாள். சிறு வயதிலிருந்தே அவ்வளவாகக் கருணை காட்டாத ஓர் அனாதை அந்தப் பெண். ஆசிரமத்தில் வளர்ந்ததால், தன்னிடம் யாரும் போதிய கவனம் செலுத்தியதில்லை என்று அவளுக்கு நெஞ்சு நிறையக் குறை. மற்றவர்கள் கவனத்தை ஈர்க்கத் தன் 'கணவன்' தனக்குச் செய்த கொடுமைகளை விவரிக்க ஆரம்பித்தாள். அவர்கள் பரிதாபப்படப் பட, 'அவள் கணவன் அவளுக்கு இழைத்த கொடுமைகள்' கூடிக் கொண்டே போயின. ஒரு நிலையில் தான் மிகவும் அதிகமாகச் சொன்னால், கேட்பவர்கள் அவநம்பிக்கை கொள்ள ஆரம்பித்து விடுவார்களோ என்ற பயம் தோன்றியிருக்கிறது. அதேசமயம் மற்றவர்களை அவளருகே உட்கார்ந்து, அவள் கூறுவதை ரசிக்கும் 'அந்தஸ்தான நிலை'யையும் இழக்க அவளுக்கு மனமில்லை. விளைவு? மற்றவர்களைப் பற்றிக் கதைக்க ஆரம்பித்து விட்டாள். அவள் மனத்தைப் புரிந்து கொண்டு தகுந்த சிகிச்சையளித்தேன்.

இதுபோன்ற பெண்களுக்குத் திருமணம் செய்து கொண்ட பிறகும் பிரச்னைகள் தொடரும். சில குடும்பத்தினர் தன் வீட்டுக்கு ஓர் அனாதைப் பெண் மருமகளாக வருவதை விரும்புகின்றனர். இதற்கு 'நம்ம கூடவே எப்போதும் இருப்பா. சொன்ன பேச்சைக் கேட்டு, அடங்கி நடப்பாள். முணுக்கென்றால் பிறந்த வீட்டுக்குப் போய்விட மாட்டாள். துர்போதனை செய்ய அவளுக்குப் பிறந்த வீட்டினர் இருக்க மாட்டார்கள்' என்று பல காரணங்கள். எப்போதும் யாருக்காவது கீழ்ப்படிந்தே நடந்து வந்திருப்பதால் அத்தகைய மருமகள்களும் அவர்கள் எதிர்பார்ப்புக்கு ஈடுகொடுக்கின்றனர். உண்மையாகவே அந்தப் பெண் அக்குடும்பத்தில் ஒன்றிப் போய் இரு சாராரும் பாசத்துடன் இருப்பது உண்டு.

ஆனால் அத்தகைய சூழ்நிலையில் சில பெண்கள் பிரச்னைகளை வளர்த்துக் கொள்கிறார்கள். அடிப்படைப் பாதுகாப்பில்லாத உணர்வு கொண்டிருப்பதால் தன் புகுந்த வீட்டினரிடம் அதிகமான அன்புக்கு ஏங்குகிறார்கள். தன் கணவன் தனக்குத் தினமும் பூ வாங்கிக் கொடுக்க வேண்டும், அடிக்கடி புடைவை வாங்கித் தர வேண்டும், 'நான் உன்னை மிகவும் நேசிக்கிறேன்' என்று வார்த்தைகளால் அன்பை வெளிப்படுத்த வேண்டும் என்றெல்லாம் எதிர்பார்க்கிறார்கள். இப்படியெல்லாம் இல்லையென்றால் தன் கணவன் தன்னிடம் அன்பு பாராட்டவில்லை என்று கருதுகிறார்கள். அப்படித் தன் கணவன் அவளை ஒதுக்கி விட்டால், தன்னை ஆதரிக்க பிறந்த வீட்டு மனிதர்கள் என்று யாருமில்லையே என்ற எண்ணம் அவள் கவலையை விஸ்வரூபமெடுக்கச் செய்கிறது.

ஓர் ஆரோக்கியமான குடும்பச் சூழ்நிலையிலுள்ள விட்டுக் கொடுக்கும் (**give and take**) தன்மை அவளுக்குப் பிடிபடாததால், சந்தேகக் குணத்தை வளர்த்துக் கொள்கிறாள். கணவன் தனக்காக சிறிது பணத்தைத் தனியாகச் சேர்த்து வைத்துக் கொண்டால், அதைத் தவறாக எண்ணுகிறாள். வேறு எந்தப் பெண்ணாவது பேசினால், பொறாமைப்படுகிறாள். தாம்பத்திய உறவிலும் இன்பம் குறைய ஆரம்பிக்கிறது.

அதேசமயம் மேற்கூறிய சூழ்நிலையில் குற்றவாளி மருமகளாக மட்டுந்தான் இருக்க வேண்டுமென்பதில்லை. சிறு தவறுகளுக்குக் கூட மாமியார் 'யாராவது பிறந்த வீட்டிலே சரியா சொல்லிக் கொடுத்திருந்தால்தானே தெரிஞ்சிருக்கும்' என்று கூறி மருமகளைப் புண்படுத்தலாம். 'உனக்கு எல்லாமே இனி நான்தான்' என்ற நினைப்பில் கணவன் அவள் மீது அதிக ஆதிக்கம் செலுத்த ஆரம்பிக்கலாம்.

ஒரு கணவன், மனைவி இருவரும் பெற்றோரை இழந்தவர்கள். வெவ்வேறு அனாதை ஆசிரமங்களில் வளர்ந்தவர்கள். தன் மனைவியிடம் தேவையில்லாத சந்தேகங்களெல்லாம் வளர்த்துக் கொண்ட அக்கணவன் அவளிடம் கைச்செலவுக்குக் கூடக் காசு கொடுக்க மறுத்தான். மனைவியும் தன் உணர்வுகளை வெளிப்படுத்தாமல் மௌனமாக இருந்ததின் மூலம் அவன் சந்தேகங்களுக்கு உரமிட்டாள். முடிவில் விவாகரத்து செய்து கொண்டனர். பிறகு இருவரும் மனம் மாறி என்னிடம் வந்தனர். நான் எடுத்துக் கூறியபின் மீண்டும் இணைந்தனர். ஆனால் சிறிது காலத்துக்குப் பிறகு, என் யோசனைகளைப் பின்பற்றாது, அவர்கள் மீண்டும் பிரிந்தது வேறு ஒரு கதை.

அதுவும் கர்ப்ப காலத்தில் பெற்றோரில்லாததை ஒரு பெண் அதிகம் உணர்கிறாள். தான் அலட்சியப் படுத்தப்படும் உணர்வு அவளுக்கு அதிகம் உண்டாகிறது. குழந்தை பிறந்த பிறகும் 'எப்படி ஒரு நல்ல அன்னையாய் இருந்து குழந்தையை வளர்ப்பது?' என்று தவித்துப் போகிறாள். ஏனெனில் தன்னை ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ள (**Identity**) அவளுக்கு அன்னையில்லையே. இத்தகைய பெண்களில் சிலர் மிக அதிகமான செல்லம் கொடுத்து (நமக்குக் கிடைக்காத தாயன்பு நம் குழந்தைக்காவது கிடைக்கட்டும் என்ற எண்ணம்!) அக்குழந்தையைக் கட்டிச்சுவராக்குவதும் உண்டு.





பஸ்களில் நெரிசல் நேரங்களில், முன் பக்கத்திலிருந்து சில்லறையைக் கொடுத்தனுப்பி, (கண்மறைவில் அது பல கைகள் மாறி), டிக்கெட் பெறுவதைக் கூடியவரை தவிர்க்கவும். சாமர்த்தியமாக, இடையில் பணத்தை எடுத்துக் கொண்டு, முன்பே உபயோகித்த டிக்கெட்டுகளைக் கொடுத்தனுப்பி, ஏமாற்றுகிறவர்கள் சமீபத்தில் பிடிபட்டிருக்கிறார்கள்.

— சரோஜினி.

வேலைக்குப் போகும் அனாதைப் பெண்களும் அலுவலகத்தில் மற்றவர்களோடு அவ்வளவாகக் கலந்து பழகுவதில்லை. எனவே மனித உறவுகளில் சிக்கல் ஏற்படலாம். மற்றவரை அவ்வளவாக இவர்கள் நம்புவதில்லை. 'பாஸ் என்னிடம் மட்டும் சக்கையாய் வேலை வாங்குகிறார்' 'நான் அனாதை என்பதால்தான் இந்த சுரேஷ் என்னிடம் வாலாட்டுகிறான்' போன்று எண்ணிச் சுய பச்சாதாபத்தில் மூழ்குகின்றனர். இப்படியெல்லாம் நினைத்து அது மிக மிகப் பெரிதாக வளர்ந்து தற்கொலையில் இறங்கும் முயற்சியில் கூட முடிவதுண்டு. அத்தகைய மன நோயாளிகளின் மன உளைச்சலை (**depression**) மருந்து, மனம் விட்டுப் பேச வைத்தல் ஆகிய முறைகளில் குணப்படுத்த முயலும் போதே, அவளின் மனஉளைச்சலுக்குக் காரணமாக — அல்லது காரணமாக இருந்ததாக அவள் நினைத்துக் கொண்டிருக்கும் — நபரையும் கூப்பிட்டு, அப்பெண்ணின் மனநிலையை எடுத்துக் கூறி, அதற்கு ஒத்த மாதிரி ஒத்துழைக்கச் சொல்வோம்.

நீங்கள் முதலில் குறிப்பிட்ட ரஞ்சனிக்கும் சரி, அனாதையாகி விட்டோம் என்ற எண்ணத்தில் பல்வேறு மனக் குறைகளை வளர்த்துக் கொண்டு வாழ்வின் இனிமையைக் குறைத்துக் கொள்ளும் மற்ற பெண்களுக்கும் சரி, என் யோசனை இதுதான்.

'உங்கள் மீதே நம்பிக்கையை வளர்த்துக் கொள்ளுங்கள். ஒவ்வொரு நபருக்குள்ளும் பலமும் உண்டு; பலவீனமும் உண்டு. பலமான பகுதியை ஆக்கபூர்வமான வழியில் அதிகம் பயன்படுத்துங்கள். தாய், தந்தையரை இழந்து விட்டதால் அனைவரையும் இழந்து விட்டதாக அர்த்தமில்லை. உங்களையே மதிக்கக் கற்றுக் கொள்ளுங்கள். மற்றவரோடு கலந்து பழகுங்கள். சந்தேகக் குணத்தை விலக்குங்கள். விட்டுக் கொடுங்கள். மற்றவர்களிடம் அன்பு செலுத்துங்கள். நீங்களும் அன்புக்குரியவர்கள்.

— அருண் சரண்யா.

# கல்யாணத்தில் நடந்தது...



**பெ**ங்களூரில் என் தம்பிப் பெண் கல்யாணம். பிள்ளை வீட்டுச் சம்மந்திகள் சென்னையைச் சேர்ந்தவர்கள். அதனால் நாங்கள் "தமிழ் நாட்டுச் சமையல்களை நீங்கள் இதுவரை பல தடவை சாப்பிட்டிருப்பீர்கள். எங்கள் கர்னாடக மாநில சமையலை சுவைத்து பார்க்க வேண்டாமா?" என்று கூறி உடுப்பி சமையல்காரர்களை ஏற்படுத்தினோம். சமையல்காரர்களின் தலைவர் எங்கள் கதையைக் கேட்டு விட்டு "நீங்கள் பயப்பட வேண்டாம். சம்மந்திகளுக்குச் சாப்பாட்டு விஷயத்தில் பூர்ண திருப்தி அளிக்க நான் பொறுப்பு" என்று எங்களுக்கு தைரியம் சொன்னார்.

திருமணத்தன்று மூன்று வேளையும் பருப்பு ரசம், சாம்பார் என்றிருந்ததால் இரவு உணவுக்கு அவியல், கருவடாம் போட்டு வற்றல் குழம்பு இனிப்பு, உப்பு, பச்சடி செய்யச் சொன்னேன். மங்களூர் சமையல்காரர் வற்றல் குழம்பு எப்படிச் செய்வது என்று கேட்டார்.

நான், 'வாணலியில் நாலு கரண்டி எண்ணெயை விட்டு வடாத்தைப் போட்டு பதமாக சிவக்க வறுத்து எடுத்துக் கொண்டு மீதி எண்ணெயில் கடுகு, பெருங்காயம், வெந்தியம், சிகப்பு மிளகாயை கிள்ளிப் போட்டுக் கடுகு வெடித்தவுடன் புளியைக் கரைத்து விட்டு உப்புப் போட்டு நன்றாகக் கொதித்தவுடன் சிறிது அரிசி மாவைக் கரைத்து விட்டு ஒரு கொதி வந்தவுடன் இறக்கி விட்டு வறுத்த வடாத்தை குழம்பில் போட்டு விடுங்கள். ருசிக்கு சிறிது வெல்லம் போட்டால் நன்றாக இருக்கும்' என்று சொல்லி வடாம் இருக்கும் டின், வெல்ல டப்பா இவைகளைக் கொடுத்து விட்டு ரயிலுக்குக் கல்யாணப் பெண் சாமான்களை பேக் செய்யப் போய் விட்டேன்.

இரவு பரிமாறும் ஆள் கன்னடத்தில் "சண்டிகா" (வண்டிகை என்றால் வடாம்) கேட்டு வந்தான். இலையில் உட்கார்ந்திருந்தவர்கள் அதை மிகவும் விரும்பிக் கேட்டுக் கேட்டுச் சாப்பிட்டார்கள். சரியான வெளிச்சமில்லாததினால் எனக்கு அது என்னவென்றே தெரியவில்லை. ஏதோ திரட்டுப் பால் மாதிரி இருந்தது. சரி ஏதோ ஒன்று சம்பந்திகள் ரசித்துச் சாப்பிட்டால் போதும் என்ற திருப்தி. 'சமையல் பிரமாதம். 'சண்டிகா' வெகு ருசி' என்றார்கள்.

அவர்கள் சென்றவுடன் நாங்கள் சாப்பிட உட்கார்ந்த இலையில் வடாக் குழம்பு விடவில்லை. ஏன் என்று கேட்டால், "நீங்கள் கொடுத்த வடாம் போதவில்லை. சம்பந்திகளுக்கு மட்டும் போட்டுச் சமாளித்தோம்" என்றார்.

எனக்கு ஒன்றுமே புரியவில்லை. ஒரே அதிர்ச்சி! 'என்ன நாலு படி வடாமா போதவில்லை?' என்றேன்.

சமையல்காரர், "அம்மா, நீங்கள் சொன்னபடி தான் செய்தேன். புளி அதிகமாகி விட்டதால், இருக்கிற வடாத்தை நெய்யில் பதமாக வறுத்து, குழம்பில் போட்டுக் கொதிவிட்டேன். வெல்லம் இரண்டு கட்டிகளைப் போட்டு இரண்டு தேங்காயைத் துருவிப் போட்டு நாலு கரண்டி நெய்யை விட்டு அவசரத்தில் நீங்கள் சொல்ல மறந்துவிட்ட முந்திரிப் பருப்பைவறுத்துப்போட்டு,ஏலக்காயைப்பொடித்துப் போட்டுச் சரி செய்துவிட்டேன்" என்றார் பெருமையுடன். நாங்கள் பிரமித்து உட்கார்ந்து விட்டோம்.

— பாக்யலட்சுமி



# புக் ஷெல்ஃப்

**விக்கிரமன் கதைகள்**

சமூக நிலைகளைச் சுட்டிக்காட்டும் எழுத்தாளர் விக்கிரமனின் சிறுகதைகள்.

விலை ரூ. 36.00

**சிற்பம், சித்திரம், கோபுரம், கோவில்**

தமிழகத்தின் சிறப்பு வாய்ந்த பல ஊர்களுக்கும் சென்ற அனுபவங்களைப் பற்றிய எழுத்தாளர் விக்கிரமனின் கட்டுரைகள்.

விலை ரூ. 16.00

(இரண்டும் — விக்கிரமன் பதிப்பகம், 2, ஜெயசங்கர் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை — 33.)

**அம்மா, எப்ப நீ பாட்டியாவ?**

இன்றைய வேலை பார்க்கும் பெண், அவள் குழந்தையைப்பற்றிய நாடகம், மற்றும் சில நாடகங்கள். ஆசிரியர்: சேயோன்.

விலை ரூ. 9.00

**காவியமும் ஓவியமும்**

தமிழ் இலக்கிய மாணவர்களுக்கு, தமிழில் ஆர்வமுள்ளவர்களுக்கு அருமையான ஆய்வுக் கட்டுரைகள். ஆசிரியர்: சேயோன்.

விலை ரூ. 15.00

**புலமைப் புறா**

சேயோனின் இலக்கியக் கட்டுரைகள்.

விலை ரூ. 13.00

(மூன்றும்—முரளிப்பதிப்பகம், 6, வசந்தா பிரஸ் சாலை, அடையாறு, சென்னை—20)

**இராமாயணக் கதைகள்**

இராமாயணத்தை ஒட்டிய, உப கதைகள் தொகுப்பு: ஸ்வாமி.

விலை ரூ. 2.50

**மகாபாரதக் கதைகள்**

மகாபாரதத்தில் வரும் உப கதைகள். தொகுப்பு: ஸ்வாமி.

விலை ரூ. 2.50

**பாகவதக் கதைகள்**

பாகவதத்தில் வருகின்ற கதைகள். தொகுப்பு: ஸ்வாமி.

விலை ரூ. 2.50

(மூன்று புத்தகங்களும் — அநுராகம், 10, கண்ணதாசன் சாலை, தி. நகர்., சென்னை — 17.)

**இளைஞர்களே... உங்களுக்கு வரதட்சணை வேண்டுமா...?**

இளைஞர்கள் அவசியம் படிக்க வேண்டிய நூல். ஆசிரியர்: எஸ். குலசேகரன்.

விலை ரூ. 9.75

(அமிழ்தம் பதிப்பகம், 15, முத்துப் பிள்ளைத் தெரு, வ. உ. சி. நகர், வேலூர் — 1.)

**துர்க்கையின் துதிப்பாடல்கள், (இரண்டாம் பாகம்)**

மக்களிடையே பிரபலமான அம்மனின் துதிகள். தொகுப்பு: தெ. சி. தெய்வ சிகாமணி.

விலை ரூ. 4.50

**பத்ரி — கேதார் யாத்திரை**

சுவையான, விவரங்களடங்கிய பயணக்

கட்டுரை நூல். ஆசிரியர்: நெ. சி. தெய்வ சிகாமணி.

விலை ரூ. 9.00

(இரண்டும் — பைலட் பப்ளிகேஷன்ஸ், 309, லிங்கி செட்டித் தெரு, சென்னை — 1.)

**வாடாமலர்கள்**

பரமாச்சார்யாளின் அறிவுரைகள், மற்றும் ஸ்ரீ ஆதிசங்கரர் ஜயந்தி நினைவுக் கட்டுரைகள். தொகுப்பு: புத்தகப்பித்தன்.

விலை ரூ. 11.00

**மனச் சாந்திக்கு தியானம்**

கே. வெங்கட்ராவ் கூறும் தியானத்தின் சிறப்புக்கள்.

விலை ரூ. 10.00

**ஐந்தெழுத்து**

திருமுருக கிருபானந்த வாரியாரின் சுவையான கட்டுரைத் தொகுப்பு.

விலை ரூ. 14.00

(மூன்றும் — குமரிப் பதிப்பகம், 15, நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம் — 1.)

**நல்ல நண்பர்களைப் பெறுவது எப்படி?**

பி. சி. கணேசன் நல்ல நண்பனின் சிறப்பையும், யோசனைகளையும் கூறுகிறார்.

விலை ரூ. 10.00

**புதையல் வேட்டை**

வாண்டு மாமாவின் சிறுவர்களுக்கான சுவையான கதைகள்.

விலை ரூ. 10.00

**மருத்துவ அறிவியல்**

பல நோய்களின் அறிகுறிகள், சிகிச்சை பற்றி கே. என். ராமச்சந்திரன் கூறுகிறார்.

(மூன்றும் — வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை — 17.)

**விளையாட்டுக் கணக்குகள்**

சிறுவர்களுக்கும், பெரியவர்களுக்கும் சுவையான நூல்.

விலை ரூ. 8.50

**பெண்களுக்கான உடைகள்**

சோளி, பாவாடை, மேக்ஸி போன்றவைகளை வெட்டித் தைக்கும் முறைகள்.

விலை ரூ. 10.00

**ஆண்களுக்கான உடைகள்**

காலர், ஷர்ட், சஃபாரி போன்றவை தைக்கும் முறைகள்.

விலை ரூ. 11.00

**ஹிந்தி பிராத்மிக் பர்ட்சை எழுதுபவர்களுக்கான கெய்டு**

விலை ரூ. 20.00

(நான்கும் தொகுப்பு — மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு. பதிப்பு — மணிமேகலைப் பிரசுரம், த. பெ. எண். 1447, 4, தணிகாசலம் சாலை, தி. நகர், சென்னை — 17.)

என் பையன் பம்பாயில் படிக்கும் பள்ளியில், கிராப்ட், டிராயிங், சுத்தமான யூனிஃபார்ம், படிப்பில் திறமை, ஸ்கூலுக்கு மட்டம் போடாமல் வருவது போன்றவற்றில் முதன்மையாக இருப்பவர்களுக்கு மெரிட் கார்டு மாதா மாதம் கொடுப்பார்கள். கார்டு ஒருவருக்கு மேற்பட்டும் கிடைக்கும்.

அடுத்த மாதத்தின் முதல் வாரத்தில் அந்தக் கார்டுகளை ஸ்கூல் ஆபீசில் கொண்டு போய்க் கொடுத்தால் உடனே அவர்கள் ஒவ்வொரு கார்டுக்கும் ஒரு 100 பக்க நோட்டு தருவார்கள். குழந்தைகளுக்கு அவ்வப்போதே பரிசு கிடைத்து விடுவதால்





மிகவும் சந்தோஷம். பெற்றோர்களும் சந்தோஷமடைகிறார்கள் பரிசு உடனுக்குடன், உபயோகமானதாக கிடைப்பதால். அவர்களும் தங்களுடைய உதவியை எரிச்சல் படாமல் குழந்தைகளுக்குச் செய்கிறார்கள்.

இது ரொம்ப வரவேற்கப்பட வேண்டிய ஒரு முறை. எல்லா பள்ளிகளிலும் இதை முயன்று பார்க்கலாம். சந்தோஷத்தை அனுபவித்த தாயார் என்ற முறையில் எழுதுகின்றேன்.

— வசந்தா சேகர், ஜுஹு.

# உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

உங்கள் குழந்தைக்கு நான்காம் மாதத்திலிருந்தே பாலோடு திட உணவும் தேவை. அப்போது ஸெரிலாக் அனுகூலம் அளியுங்கள்.

**போஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு முறை ஸெரிலாக் ஊட்டும் போதும், புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின், மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்குச் சத்துக்களும் சரியான விகிதத்தில் உங்கள் குழந்தைக்குக் கிடைக்கிறது.

**சுவை அனுகூலம்:** ஸெரிலாக் சுவையில் குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம்:** ஸெரிலாக் ஏற்கனவே பதமாக்கப்பட்டது; பாலும் சர்க்கரையும் கலந்தது. காய்ச்சி ஆறிய நீரில் கலந்தாலே போதும்.

**தேர்ந்தெடுக்க அனுகூலம்:** இப்போது ஸெரிலாக், மூன்று வெவ்வேறு வகைகளில்!

*சுகாதாரமான முறையில் தயாரிக்கவும், சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*




6 மாதங்களிலிருந்து




4 மாதங்களிலிருந்து




6 மாதங்களிலிருந்து

இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

# மெழுகுப் பூக்கள்

**நா**ம் நமது வீட்டிலிருக்கும் தேவையற்ற பொருட்களைக் கொண்டே நமது கலைத்திறனால் அழகிய பூக்களைச் செய்யலாம். வீட்டில் தைக்கும் ஆடைகளில் தேவையற்றது எனத் தூக்கி எறியும் துண்டுத் துணிகளிலும், அளவில் சிறியதாகிவிட்ட குழந்தைகளின் ஆடைகளிலும், ரிப்பன் போன்ற பாலியெஸ்டர் துணிகளிலும் இவ்வழகிய பூக்களைச் செய்து வீட்டை அலங்கரிக்கலாம்.

தேவையான பொருட்கள்:

அழகிய வண்ணங்களில் கிடைக்கும் பாலியெஸ்டர் துண்டுத் துணிகள், பச்சைக் கலரில் Tube wire அல்லது மின் wire (insulating wire) பூக்கள் செய்ய இரும்புக் கம்பி மெல்லியது.



படம்-1.



படம்-2



படம்-3



படம்-4.

சில வண்ணக் கலவைகள்:
பச்சைக் கலர் நூல்கண்டு.
மெழுகுவர்த்தி — 2.

செய்முறை:

முதலில் 1½" அகலமும் 1½" நீளமும் இருக்கும்படியான சதுரம்வரைந்துகொண்டு படம் 1 — இல் காண்பித்துள்ளபடி ஐந்து இதழ்களை வெட்டிக் கொள்ளவும். பச்சைக் கலர் துணியில் படம் 2, படம் 3 — இல் காண்பித்துள்ளபடி அரும்புகளையும், 2 இலைகளையும் வெட்டிக் கொள்ளவும். 5" நீளமுள்ள கம்பி வெட்டிக் கொள்ளவும். 5" பச்சைக் கலர் **Tube wire** வெட்டிக் கொள்ளவும். (அல்லது) **Insulating wire** எனப்படும் மின் ஒயரில் உள்ள பிளாஸ்டிக் மேலுறையை மட்டும் இலேசாக பிளேடினால் சுற்றிலும் கீறிவிட்டு உள்ளிருக்கும் தாமிரக் கம்பியை இழுத்து விட்டு இரும்புக் கம்பியை நுழைக்கவும். படம் 4 — இல் உள்ளபடி நுனியில் வளைத்து விடவும்.

1" சதுரத்தில் வேறு ஒரு கலரில் ஒரு துணியை வெட்டிக் கொண்டு அதன் நடுவில் வளைத்த கம்பியை வைத்து துணியால் வளை வைச் சுற்றி மூடி அடிப் பாகத்தில் கம்பியுடன் சேர்த்து நூலால் இறுகக் கட்டவும். பின் இதைச் சுற்றிலும் ஒவ்வோர் இதழாக வைத்துக் கட்டவும். அதன் அடிபாகத்தில் அரும்புகளையும் பின் இலைகளையும் வைத்துக் கட்டவும். இதே போல்ப் பலவிதமான வண்ணங்களில் பல பூக்களையும் இலைகளையும் செய்து வைத்துக் கொள்ளவும்.

சிறிய பூக்களைக் கூட செய்து இடை இடையே வைக்கலாம். இதே பூக்களை இரட்டைக் கலரில் இருக்கும்படியாகவும் செய்யலாம். வாட்டர் கலர் ஃபேப்ரிக் பெயின்ட்ஸ், போஸ்டர் கலர் போன்ற கலர்களை உபயோகித்து, நாம் விரும்பிய வண்ணமும் கொண்டு வரலாம்.

பிறகு அகலமான பாத்திரத்தில் சிறிது நீர் ஊற்றிச் சூடாக்கவும். சிறிய வாயகன்ற எவர்சில்வர் கிண்ணத்தில் மெழுகைத் தூள் செய்து போடவும். இக்கிண்ணத்தை நீர் உள்ள பாத்திரத்தின் நடுவில் வைக்கவும். மெழுகு கரைந்து திரவ நிலையை அடைந்த பின் செய்து வைத்திருக்கும் பூவை ஒவ்வொன்றாக மெழுகுக் கரைசலில் நனைத்து எடுக்கவும். காற்றுப் பட்டதும் மெழுகு இறுகி விடும். எனவே விரைவில் பூக்களையும் இலைகளையும் நம் விருப்பத்திற்கேற்ப வடிவமைத்துக் கொள்ளலாம். அதிகமான மெழுகு இருந்தால் உடனே எடுத்து விடவும். இதே முறையில் பலவிதமான பூக்களையும் இலைகளையும் செய்து பூ ஜாடிகளில் வைத்து அலங்கரிக்கலாம்.

— பத்மினி ராகவேந்திரன்.

---

# பாலிதீன் மகாத்மியம்

**பா**லிதீன் கவர்கள் இந்த விஞ்ஞானக் கழகத்தின் வரப்பிரசாதம் என்று சொல்லலாம். இவை அண்டா அளவிலிருந்து சுண்டு விரல் அளவு வரை, அனைத்து அளவுகளிலும் கிடைக்கின்றன.

1. ஊறுகாய் ஜாடியை, வாயை மூடியால் மூடிய பின், அதன் மேல் ஒரு பாலிதீன் கவர் அல்லது தாளை வைத்துக் கழுத்துப் பகுதியை ரப்பர் பாண்டால் இறுக்கிக் கட்டி விடலாம். ஊறுகாய்க்கு அருமையான பாதுகாப்புக் கிடைக்கும். மேலும் மூடிக்கு வெளியே கரண்டி முட்டை அல்லது ஸ்பூனின் காம்பு நீட்டிக் கொண்டிருந்தாலும் ஏற்படும் இடுக்கைப் பற்றிக் கவலை இல்லாமல் இருக்கலாம். ரப்பர் பேண்டை அவிழ்ப்பதும் சுலபம்.

2. கடையிலிருந்து பாலிதீன் கவர்களில் வரும் மளிகைச் சாமான்களைக் கொட்டி வைக்க உலர்ந்த சுத்தமான டப்பாக்களோ அல்லது சம்புடங்களோ இல்லையா? கவலை வேண்டாம். மளிகைச் சாமான்களைச் சிறிது எடுத்த பிறகு கவரின் மேல் பகுதியை அப்படியே மடக்கி, துணி உலர்த்தப் பயன்படும் கிளிப்பைப் போட்டு விடலாம். ஒரு பூச்சி, பொட்டு உள்ளே நுழையாது. கிளிப்பை அழுத்தி, கவரைத் திறப்பதும் சுலபம்.

3. பள்ளி செல்லும் குழந்தைகளுக்கு டிபன் பாத்திரத்தில் தயிர் சாதத்துடன் பாலிதீன் கவர்களில் வைத்து ரப்பர் பாண்டால் கட்டப்பட்ட கூட்டு, குழம்பு, கறி இவைகளையும் வைக்கலாம். தயிர் சாதத்துடன் இடித்து ஊசிப் போகாமல் இருக்கும். ஆனால் இப்படிச் செய்யு முன்பு நமது புத்திர சிகாமணிகளிடம் அனுமதியைப் பெற்று விடுவது நல்லது. சில குழந்தைகளுக்கு இது பிடிக்காது.

4. அழகிய படங்களுக்குக் கண்ணாடிச் சட்டம்தான் போட வேண்டும்என்பதில்லை. படத்தை அட்டையில் ஒட்டி அதைத் தகுந்த அளவுள்ள பாலிதீன் கவருக்குள் நுழைத்து, மேலே மிகுந்திருக்கும் பகுதியை அளவாகக் கத்திரித்து, உஷ்ணப்படுத்தி ஒட்டிவிடலாம். அல்லது கவர்ச்சியான கிளிப் ஒன்றைப் போட்டு விடலாம்.

5. காலில் சேற்றுப் புண் உள்ளவர்கள், தண்ணீரில் நடமாட வேண்டியிருந்தால், சாக்ஸ் போல் பாலிதீன் கவர்களைக் காலில் நுழைத்துக் கட்டிக் கொள்ளலாம். செருப்பு அணிவதைவிட இது அதிகம் பாதுகாப்பானது.

இன்னும் யோசித்து எவ்வளவோ செய்யலாம்!

— உமா தேவி.

# மாதர் சங்கங்கள்



**தஞ்சாவூர்:**

கடந்த மூன்று வருடங்களாக நடந்து கொண்டிருக்கும் அன்னை தெரசா மகளிர், சிறுவர் நலக் கழகம் நவம்பர் 1988—ல் பதிவு செய்யப்பட்டது. தஞ்சை டி. ஆர். ஓ. அவர்களின் மனைவி திருமதி. குப்பாபாய் அவர்கள் எங்களது கௌரவ ஆலோசகராக விளங்குகிறார். சுதந்திர, குடியரசு தினத்தன்று குழந்தைகளுக்கு விளையாட்டுப் போட்டி, பேச்சுப் போட்டிகள் வைத்து பரிசுகள் வழங்குகிறோம். மகளிர்க்குப் பேச்சுப் போட்டிகள், கோலப் போட்டிகள் நடத்துகிறோம். மாதர்களுக்குத் தையல் பள்ளி, குழந்தைகளுக்கு ஹிந்தி வகுப்புகள், இசை வகுப்புகள் சிறப்புற நடைபெற்று



வருகின்றன. சுமார் 100 மகளிர் சிறப்புறத் தையல் பயின்று, சர்டிபிகேட் பெற்றிருக்கிறார்கள். மாணவ, மாணவிகள் பிப்ரவரி மாதத்தில் பிராத்மிக் ஹிந்தி பரீட்சை எழுதியிருக்கிறார்கள். சமையல் வகுப்புகள் நடத்தப்படுகிறது. எல்.பி.ஜி. இண்டேன் ஏஜென்ஸியோடு இணைந்து, சிலிண்டர்களை எவ்வாறு பாதுகாப்பாக உபயோகிப்பது என வகுப்புகள் நடத்தப்பட்டன.

தலைவி: திருமதி. எலிஸபெத் ஜோசப்,

செயலர்: திருமதி. சுசீலா.

**மதுரை:**

சமீபத்தில் ஐந்தாவது ஆண்டு விழாவை கொண்டாடி இருக்கும் மதுரை திருநகர் மகளிர் மன்றம் பல அரிய சாதனைகளைச் செய்து வருகிறது. திருநகர் கூட்டுறவு பண்டக சாலையில் ரேஷன் மற்றும் இதர சாமான்கள் சரியாக வழங்கப்படாத நிலையில் இந்த மன்றத்தின் பெண்மணிகள் போராடி சரியாக விநியோகம் செய்ய வைத்து விட்டார்கள். கண் பார்வை இல்லாத மாணவர்களுக்குப் பாடங்களைப் படித்தும், காஸெட்டுகளில் பதிவு செய்து கொடுத்தும் பரீட்சை எழுத உதவுகிறார்கள். கிராமங்களுக்குச் சென்று குடும்பக் கட்டுப்பாடு பிரச்சாரத்தைத் தீவிரமாக செய்கிறார்கள். இலவச தையல், சமையற் கலை வகுப்பு நடத்துகிறார்கள். இலவச மருத்துவ முகாம் நடத்தி ஏழை, எளியோர் பிணிகள் தீர உதவுகிறார்கள். ஆவின் பால் பூத், டெலிபோன் பூத், திருநகரில் அமைத்தது இவர்கள்தான். இன்னும் திகைக்க வைக்கும் பல சாதனைகளை செய்து வருகிறார்கள்.

தகவல்: விஜயா கண்ணன்.

**திருச்சி:**

திருச்சிராப்பள்ளி அரிமா மகளிர் சங்கமும், ஸ்ரீரங்கம் அபிராமி மண்டலியும்










இணைந்து சமூக சேவைத் திட்டங்களின் நிதிக்காக திருமதி. ரேவதி முத்துஸ்வாமியின் ஸ்ரீரங்கம் பரத நாட்டியாலயா மாணவிகள் பங்கேற்ற "மலைமகள் திருமணம்" என்னும் புதிய நாட்டிய நாடகத்தைத் திருச்சி தேவர் மன்றத்தில் அரங்கேற்றினர். இவ் விழாவுக்குத் திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. உஜாகர் சிங் தலைமை வகித்து நாட்டியத்தைப் பெரிதும் பாராட்டினார்.

கீதா நந்தகோபால், செயலர்.
ரேவதி முத்துஸ்வாமி, தலைவி.

**ஆடுதுறை:**

**எ**ங்களது மாதர் சங்கம் 1987 — இல் ஆரம்பிக்கப்பட்டு நல்ல முறையில் நடந்து வருகிறது. நெல் ஆராய்ச்சி நிலையத்தில் வேலை செய்யும் விஞ்ஞானிகளின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் மட்டுமே உறுப்பினர்களாகக் கொண்ட நாங்கள் வெளியில் சென்று சமூக சேவை செய்வதைவிட நாங்கள் குடியிருக்கும் பகுதியில் உள்ளவர்களுக்கு நேரத்தை வீணாக்காமல், கைவேலை செய்தல், ஒயர் கூடை போடுதல், எம்ப்ராய்டரி, பல வகைக் கோலங்கள், தையல், பழரச பானங்கள் தயாரித்தல், ஹிந்தி போன்றவற்றைச் சொல்லிக் கொடுக்கிறோம். எங்களுக்குள் ஒற்றுமையை நிலைநாட்டவும், குறைகளை நிவர்த்திக்கவும் முதலில் முனைந்துள்ளோம்.

ஒவ்வொரு மாதமும் இரண்டாவது புதன் கிழமை அன்று இச்சங்கம் கூடுகிறது.

மாதத்தின் முதல் தேதி அன்று ரூ. 50/— குலுக்கல் சீட்டு ஒன்று நடத்துகிறோம். முதலில் யாருக்குச் சீட்டு விழுகிறதோ, அவர்கள் வீட்டில் அடுத்த மாதம் குலுக்கல் நடைபெறும். (சிறு சிற்றுண்டியுடன்) அங்கத்தினர்கள் அடிக்கடி சந்திக்க, இது ஒரு நல்ல வாய்ப்பு. இந்தச் சீட்டுப் பணம் சமையலறை சாமான்கள் வாங்க வசதியாக இருக்கும்.

தலைவி மணிமேகலை செல்லையா,
செயலாளர், பத்மினி தங்கராஜ்.

## முற்கால சகுந்தலை முதல் அதே ஒய்யார முடியழகு,



பல தலைமுறைகளாக பாரதநாட்டு முடியழகிகளின் பற்றுதலுக்குப் பாத்திரமானது பரிசுத்தமான தேங்காயெண்ணெய். இன்றும் முடியழகுக்கு அதே இயற்கை சுத்தம், அதே எழில்வளம் -- வழங்குகிறது பரிசுத்தமான பாரசூட் தேங்காயெண்ணெய்.

P A R A C

இக்கால சுப்ரியா பாட்டக் வரை...
அதே உயரிய சுத்தம்.




பாரசூட்
பரிசுத்த தேங்காயெண்ணெய்

களைபொலியும் முடியழகுக்கு பாரசூட் பராமரிப்பு.

H U T E

LINTAS PCO G 6 2432 TM

**ம**ல்லிகாவின் மனது சத்தமில்லாமல் பரபரத்துக் கொண்டிருந்தது. கை இயந்திர கதியில் எலக்ட்ரானிக்ஸ் உதிரி உறுப்பு களை வேகமாக இணைத்துக் கொண்டிருந் தது.

அந்தப் பெரிய தொழிற் சாலையில் வேலை செய்து கொண்டிருந்த நூற்றுக் கணக்கான பெண்களும் கிட்டத்தட்ட இயந் திரம் மாதிரியே சுறுசுறுப்பாக இருந்தார் கள்.

மதியக் காற்று வெப்பமாக வெளியே வீசிக் கொண்டிருந்தது. 'நாம காலையில ஃபாக்டரிக்கு வர்றப்ப இருந்த மனசு என்ன, இப்ப இருக்கிற தைரியம் என்ன... சுத்தமா மனசை மாத்தி விட்டுட்டாங்களே இந்த மீரா மேடம்!'... மல்லிகா ஆச்சரிய மாய் நினைத்துக் கொண்டாள்.

மல்லிகா அங்கே வேலையில் சேர்ந்து இரண்டு மாதமே ஆகிறது. பெண்கள் நிறைய பேர் இருக்கிறார்கள் என்பதால் தான் அவளுடைய அம்மா அந்த வேலைக்கே ஒப்புக் கொண்டாள்.



# சூலம்

மாசம் நானூறு ரூபாய் என்பது மல்லிகா வின் குடும்பத்திற்குப் பெரிய விஷயம். அப்பா இல்லாத குடும்பத்தில் அண்ணன் மட்டும் எத்தனை நாளைக்கு அவஸ்தைப் படுவான். அதிலேயும் மிச்சம் பிடித்து மல்லிகா போஸ்டலில் பி.காம்., படித்துக் கொண்டிருந்தாள்.

கஷ்ட காலம் அவளுக்கு ஆறுமுகத்தின் ரூபத்தில்தான் வந்து சேர்ந்தது. ஆறுமுகம் அங்கே சீஃப் சூபர்வைஸர். வேலையில் சேர்ந்த முதல் நாளே விகாரமாய் அவளை வெறிக்க வெறிக்கப் பார்த்த ஆறுமுகத் தைக் கண்டு கூசினாள்.

வேலை கற்றுக் கொடுக்கும் சாக்கிலும், மேற்பார்வை பார்க்கும் தோரணையிலும் அடிக்கடி வந்து எதிரில் நின்று விடுவார். வயது ஐம்பதை நெருங்கிக் கொண்டிருந்தா லும் அவருடைய ஆபாசப் பேச்சும், பெண் களைக் கண்டாலே பல்லை இளிக்கும் சுபாவமும் அவரைக் கண்டாலே ஓடி ஒளிய வைத்தது.

மல்லிகா கண்ணாடியில் தன்னைப் பார்க்கும் போது இப்போதெல்லாம் சபித் துக் கொள்கிறாள். இந்தச் சுருட்டைத் தலை முடியும், பளிச்சென்ற முகமுமே அவளுக்கு எதிரியாய் இருக்கிறது. இத்தனைக்கும் அவளுடைய அலங்காரம் வெறும் சாந்துப் பொட்டு, அவ்வளவுதான்.

''நீ பி.காம். படிக்கிறியாமே... கேள்விப் பட்டேன்.'' வேலை நேரத்தில் மெனக் கெட்டு வந்து நின்று விட்டார் ஒருநாள். மல்லிகா மிகவும் தயங்கி... ''ம்'' என்றாள்.

''பிரமோஷனுக்கா...? ரொம்பக் கஷ்டப் பட்டுத்தான் படிக்கறே?'' இந்த இடத்தை விட்டுப் போய்த் தொலை என்று சொல்ல நாக்கு துடிக்கும்.

''ஹி...ஹி... கணக்குப் பாடம் ரொம்பக் கஷ்டமா இருக்குமே... எப்படிப் படிக்கறே?''

மல்லிகா ஏதாவது சொல்லி விட்டு வேலையில் மும்முரமாய் விடுவாள்.

ஆனால் ஆறுமுகத்தின் தொந்தரவு ஜாஸ்தியாகி விட்டது.

''என் வீட்டுக்கு வந்திடு சாயந்திரம்... நான் சொல்லித் தரேன்.'' நச்சரிக்க ஆரம் பித்தார்.

''வேணாம் சார்... நானே படிச்சுக்க றேன்.''

வேலையில் அவளுக்கு சூபர்வைஸர் ஆயிற்றே. அதற்காகப் பொறுத்துக் கொண் டாள்.

அந்தப் பொறுமையை என்னவென்று நினைத்துக் கொண்டாரோ...

''என் வீடு பாத்ததில்லையே... திருவான் மியூர்ல இரண்டு மாடி. இரண்டாவது மாடில படிக்கறதுக்கே நாலு ரூம். நீ வந்தா சௌகரியமாப் படிக்கலாம்.'' மறுபடியும் விகாரச் சிரிப்பு.

''உனக்குச் சீக்கிரமே பிரமோஷன் வேணுமா இல்லையா. நான் சொன்னா முதலாளி இன்க்ரிமெண்டு கூடப் போட்டுத் தருவாரு. என்ன வர்றியா?'' மல்லிகாவுக் குத் தணலில் விழுந்ததைப் போல இருந் தது.

''யோசிச்சுச் சொல்லு நல்ல முடிவா. நாளைக்கு வரேன். சொல்லு. புரியுதா?'' நேற்று சொல்லி விட்டுப் போனதிலிருந்து மல்லிகாவைக் கவலை பற்றிக் கொண்டது.



ஆர்.கே. பத்மா

இனிமேல் இங்கே தாக்குப்பிடிக்க முடியாது. விட்டுத் தள்ளிவிட வேண்டியது தான். வேறு வேலை எங்கே கிடைக்கும்? அரக்க பரக்க அதிகாலையில் எழுந்து அவளுக்குச் சாப்பாடு கட்டிக் கொடுத்த அம்மாவை நினைத்த போது வருத்தமாக இருந்தது. இந்த வருமானத்தை அம்மா எவ்வளவோ நம்பியிருக்கிறாள்.

கூட வேலை பார்க்கும் பெண்கள் யாரிடமும் கூட மல்லிகாவால் இதைப் பகிர்ந்து கொள்ள முடியவில்லை.

எல்லாம் சின்ன விஷயத்துக்குக் கூட கண், காது வைத்துப் பெரிதாக்கி விடும் வம்புக் கூட்டமாய் இருந்தது.

''தெரியுமா... நம்ம சீஃப் சூபர்வைஸரு இல்ல, அவருக்கு நம்ம மல்லிகா மேல ஒரு கண்ணாம். ஒரு நாள் என்ன நடந்திச்சாம் தெரியுமா...?'' என்ற ரீதியில் ஏதாவது பேசுவார்கள்.

மல்லிகா முன்தினம் நன்றாய் யோசித்து ஒரு முடிவுக்கு வந்திருந்தாள். விடுதலைக்கு ஒரே வழிதான் தெரிந்தது. இன்று பத்து மணியானதும் ஒரு வெள்ளைத் தாளை எடுத்துக் கொண்டு மீராவிடம் போனாள்.

மீரா அந்தத் தொழிற் சாலையில் பர்ஸனல் ஆபீசராக ஆறு மாதம் முன்புதான் சேர்ந்திருந்தாள். ஏதோ கோப்பில் மூழ்கியிருந்தவள் மல்லிகா ராஜினாமாக் கடிதம் எழுதிக் கொண்டு வந்து சரிபார்க்கச் சொன்னதும் அசந்து போய் விட்டாள்.

''என்ன மல்லிகா, வேற வேலை கிடைச்சிருச்சா.. இல்லே மேரேஜ் ஏதாச்சும் நிச்சயமாயிருக்கா?''

மல்லிகா 'இல்லை' என்று தலையசைத்ததும்... மிருதுவாக,

''பின்னே.. உன் சம்பளம் வீட்டுக்குத் தேவையில்லையா?'' என்று கேட்டதும், அந்த நிமிஷம் மல்லிகா உடைந்து போனாள். ஆறுமுகத்தின் தொல்லையை விவரிப்பதற்குள் மல்லிகாவின் அழுகை அதிகரித்தது.

''ஸ்ஸ்... முதல்ல அழுறதை நிறுத்து.. இப்ப என்ன ஆயிருச்சு... இப்படி உக்காரு.'' மீராவின் கண்டிப்பான குரல் அவளை அமர்த்தியது.

''அவனைக் கண்டு பயப்படறே... சரி, வேலையை விடறே. வேற கம்பெனில போய் சேரு. அங்கேயும் ஆறுமுகத்தை மாதிரி இன்னொருத்தன் வரான்னு வை. என்ன பண்ணுவே? அந்த வேலையையும் விட்டிருவியா?''

மல்லிகாவுக்கு ஒன்றும் சொல்லத் தெரியவில்லை.

''கம்பளிப் பூச்சி வந்திருச்சுன்னு வீட்டைக் கொளுத்துவியா?''

மீரா கேட்டதற்கெல்லாம் மல்லிகா விழித்துக் கொண்டிருந்தாள்.

''சொல்லு... என்ன பண்ணப் போறே?''

''தெரியலீங்க மேடம். எனக்கு பயமா இருக்கு.''

''ஆயுதத்தை உன்கிட்டேயே வச்சிக்கிட்டு நீ எதுக்கு பயப்படறே?'' மீரா பேசி விட்டு

## புதிய அறிமுகம்

எல். பி. ஸி. என்னும் புதிய எரிபொருள் 'கேஸ்' எல். பி. ஜிக்கு இணையாக வந்துள்ளது.

இந்த எல். பி. ஸி. தாவரக் கழிவிலிருந்து உற்பத்தி செய்யப்படுகிறது, எரிபொருள் சமையலுக்கு மிகவும் உபயோகமாகக் கூடியது என்கிறார்கள். ஏனெனில் இந்தச் சமையல் சாதனத்தைத் திறந்து வைத்திருந்தாலும் 100% பாதுகாப்பானது, காற்றழுத்தம் இல்லாதது என்கிறார்கள். இது ஒரு ஹில்டல் பிரஸிஷனின் தயாரிப்பு. விரைவில் மார்க்கெட்டிற்கு வரவிருக்கிறது.





## இம்மாத இல்லத்தரசி போட்டி

பொருள்: வெயிலுக்கேற்ற உணவு. கடைசித் தேதி: 15.4.89.

**சமையல் கூப்பன்**

................ என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

---

அவளை உற்று நோக்கினாள்.

''புரியலையா? உன்னை நீயே காப்பாத்திக்க முடியும்கறேன். அந்த ராஜினாமாவைக் கிழிச்சுப் போடு. பிரச்னைகளைக் கண்டு பயந்து ஓடறது கோழைத்தனம். எதிர்நோக்கி ஜெயிச்சுக் காட்டணும். அந்தச் சக்தி நமக்குள்ளேயே இருக்கு... அதை உபயோகப்படுத்துவியா, மாட்டியா?''

''சொல்லுங்க மேடம்.. என்னை நானே காப்பாத்திக்கறேன்'' என்ற மல்லிகாவை நோக்கி, நெருங்கி வந்து,

''தட்ஸ் குட்... இப்பத்தான் நீ கெட்டிக்காரி'' என்று தோளைத் தட்டிக் கொடுத்து மீரா பேசிக் கொண்டே போனாள். அப்புறம்தான் மல்லிகாவின் மனத்தில் ஒரு தைரியம் பிறந்தது. அவளுக்கு இப்போது நிறைய ஆயுதங்கள் தென்பட்டன. எதிரி மீண்டும் குறுக்கிடுவானேயானால் குத்திக் கிழித்து விட வேண்டும் என்ற சினம் அவளுக்குள் மூண்டிருந்தது. அந்த எதிரியைத்தான் எதிர்நோக்கியிருக்கிறாள் இப்போது.

''என்ன மல்லி... நேத்து நான் சொன்னதையோசிச்சியா...?என்னசேதிசொல்லப் போறே?''

ஆறுமுகம் பல்லைக் காட்டிக் கொண்டு வந்து நின்றார்.

''நேத்து மீரா மேடம் அவங்க வீட்டுக்குப் போனேன். அவங்க புருஷன் கூட சிட்டியில காலேஜ் புரொபஸரா இருக்காரே.. அவரும் நல்லா பேசிட்டிருந்தாரு. உங்க பொண்ணுங்க கூட அவர்கிட்டதான் படிக்கறாங்களாமே?'' சம்பந்தமில்லாமல் எதையோ பேசி அவருடைய விஷயத்தில் நிறுத்தியதும் 'டக்'கென்று அவர் முகம் விகாரமடைந்ததைக் கவனித்தாள் மல்லிகா. சந்தோஷமாக இருந்தது.

''உங்க பொண்ணுங்க இரண்டு பேரும் கணக்கில ரொம்ப வீக். பாஸ் மார்க்கே வாங்க முடியாம திண்டாடறாங்கன்னு சொன்னாரு புரொபஸரு. ஆனா, நீங்க இருக்கும் போது அவங்களுக்கென்ன கவலைஇருந்தாலும்நீங்கஉங்கபொண்ணுங்களோட படிப்பை முதல்ல கவனிங்க சார். என்னைப் பார்த்துக்க என் அண்ணன் இருக்காரு.''

பட்டென்று மேஜையில் இருந்த வேலையை எடுத்து கவனிக்க ஆரம்பித்தாள் மல்லிகா.

முகத்தில் சயாடாமல் தலையைக் குனிந்து கொண்டு ஆறுமுகம் நகர்ந்ததும் அவளுக்குள் சந்தோஷம் தளும்பியது. மனசுக்குள் மீரா சொன்னது அலைமோதியது.

''முதல் ஆயுதம் உன் நாக்கு... மனசுக்கு இதமா வருடிக் கொடுக்கிற மாதிரி அதைக் கொண்டு பேசு. ஆனா ஆறுமுகம் மாதிரி சுயவங்களை மட்டும் ஸ்பேர் பண்ணாதே. முதல்ல சாட்டையால பளிச்சுன்னு அறையற மாதிரி இரண்டு வார்த்தை சொல்லு. சொரணை உள்ளவன்னா இரண்டாவது தடவை உங்கிட்ட வர மாட்டான். அப்படியும் வந்தா சுருக்குன்னு ஆழமாக் குத்திடு. அம்பாள் அசுரனை வதம் பண்ண மாதிரி. ஆயுதம் உன் பல்லுக்கு நடுவிலேயே படுத்திண்டிருக்கு...''ச்சே!''எவ்வளவு சர்தாரணமா சொன்னாங்க!

மல்லிகாவை இதுவரை வாட்டிய பயமும், கவலையும் மறைந்து போய் ஓர் உற்சாகம் தொற்றிக் கொண்டது.



# வேலைக்கு வந்தவர் இல்லத்தரசி ஆனார்!

**வீட்டு வேலைகளுக்கு உதவ ஆட்கள் கிடைப்பதே பெரிய பிரச்னையாகி விட்ட நேரமிது. ஆனால் இதற்காகவே ஒரு பயிற்சி வகுப்பை நடத்தித் தேவையான விதத்தில் ஆட்களை அனுப்பிவைக்கிறது ஒரு தொண்டு நிறுவனம். இதன் நிறுவனர் சமூக சேவையில் ஈடுபட்டுள்ள திரு. ரகுபதி என்பவர் —**

கே: இந்த வீட்டுப் பணிப் பெண்கள் தொண்டு இல்லத்தின் பின்னணியைச் சொல்கிறீர்களா?

ப: இங்கு 'திக்கற்றோர் இல்லம்' என்று நடத்தி வருகிறோம். இதில் ஜாதி மதம் இல்லாமல் பெற்றோர் இல்லாத, இன்னும் பல வகைகளில் கைவிடப்பட்ட 6 வயது முதல் 18 வயது வரை உள்ள குழந்தைகளைச் சேர்த்து வருகிறோம். இந்தக் குழந்தைகள் இங்கேயே தங்கிப் படித்து வருகிறார்கள்.

இப்படிப் படிக்கும் சில பிள்ளைகளின் பெற்றோர்கள் எங்களிடம் இங்கேயே வேலை எதுவும் கிடைத்தால் தேவலை என்று கேட்க ஆரம்பித்தார்கள். ஏனென்றால் அவர்களும் அனாதைகள்.

எல்லோருக்கும் இங்கேயே வேலை கொடுப்பதும் கஷ்டம். தமிழ் நாட்டில் வேலைக்கு ஆள் கிடைக்காமல் பல குடும்பப் பெண்கள் கஷ்டப்படுவதும், வேலையாட்களை கசக்கிப் பிழியும் குடும்பத் தலைவிகள் இருப்பதும் நினைவுக்கு வந்தது. இதற்கு ஒரு வழிகாணும் வகையிலும், வேலை கேட்டு வரும் திக்கற்றோர் இல்ல குழந்தைகளின் தாய்மார்களுக்கு வேலை வாய்ப்பு கிடைக்கும் வகையிலும் 1985 ஆம் ஆண்டு இந்த 'வீட்டுப் பணிப் பெண்கள் தொண்டு இல்லம்' என்ற அமைப்பை ஆரம்பித்தோம்.

கே: வேலை செய்ய வருபவர்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?

ப: வந்ததும் ஒரு ஃபாரத்தில் இவர்களுடைய அங்க அடையாளம், கை ரேகை, பெயர், ஊர், குடும்ப விவரம், தெரிந்த மொழி, படிப்பு, வயது, அனுபவம், எதிர்பார்க்கும் சம்பளம் போன்றவற்றைப் பதிவு செய்து ஒரு ஃபோட்டோவும் வாங்கி ஒட்டி வைக்கிறோம். அவர்கள் வேலைக்குப் போக விரும்பும் மதத்தவர், இனத்தவரையும் கேட்கிறோம்.

கூடியவரை, இவர்கள் ஏதாவது சிறப்பான சங்கங்கள் (அ) இல்லங்கள் மூலம் ரெகமண்ட் செய்யப்பட்டவர்களாக இருக்க வேண்டும். அல்லது இவர்கள் குழந்தைகள் எங்கள் இல்லத்தில் தங்கிப் படிக்க வேண்டும்.

இவர்களைப் பற்றிய விவரங்களை இவர்கள் ஊரிலுள்ள அரசு அதிகாரிகளுக்கு எழுதி விசாரிக்கிறோம். இவர்களுக்குப் பயிற்சி கொடுக்கும் போது இவர்களது பழக்க வழக்கங்கள், குணம், பழகும் விதம், ஒழுக்கம் ஆகியவை கண்காணிக்கப்படுகிறது. இதெல்லாம் சரியாக இருந்தால் அவர்களைத் தேர்ந்தெடுத்து தேவையானால் அவர்களுக்கு வேலை கிடைக்கும் வரை எங்கள் இல்லத்திலேயே தங்கும் வசதியும், சாப்பாடும் போடுகிறோம். இதன் மூலம் வேலை செய்ய வருபவர்களுக்கு நல்ல சம்பளம், பாதுகாப்பான இடம், வேலை வாய்ப்பு, மாதம் குறைந்தது ரூ. 150/— சம்பளம் கிடைக்க வழி கிடைக்கிறது.

இதன் மூலம் 'வேலைக்காரி' என்று ஏதாவது ஒரு வீட்டில் சேர்ந்து இருபது ரூபாய்க்கும் முப்பது ரூபாய்க்கும் மாடாய் உழைப்பை வாங்கும் அநியாயம் தடுக்கப்படுகிறது.

கே: வீட்டு வேலைக்கு என்ன பயிற்சி?

ப: கிராமத்தில் செங்கல், சாம்பலைப் போட்டு பாத்திரம் துலக்குபவர்களுக்கு க்ளீனிங் பவுடர் பற்றிச் சொல்கிறோம். வீட்டுக்காரர்கள் வெளியே சென்றிருக்கும் போது ஜாக்கிரதையாக நடந்து கொள்ளும் விதம், வெளியாட்கள் வரும் போது கதவைத் திறக்கும் விதம், அவர்களிடம் விவரம் தெரிந்து கொள்ளும் விதம், ஃபோனில் பேசும் விதம், காஸ் ஸ்டவ், க்ரைண்டர், மிக்ஸி, டீவி, ஃப்ரிட்ஜ், வாஷிங் மெஷின், அயர்ன் பாக்ஸ் போன்றவற்றை உபயோகிக்கும் விதம், குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளவும் அவர்களுக்குத் திடீரென்று ஏற்படும் சுகவீனத்தைப் பற்றியும், முதலுதவி பற்றியும் பயிற்சி அளிக்கிறோம். கிராமத்திலிருந்து வரும் பெண்களுக்கு நாகரிகமாக இருப்பது பற்றியும் சொல்லித் தருகிறோம். இதன் பின் இவர்கள் மேல் வேலை, சமையல் வேலை, குழந்தை பார்த்துக் கொள்ள, தோட்ட வேலை, ஆஸ்பத்திரியில் தங்கியிருப்பவர்களுக்கு உதவி என்று பிரித்து வைக்கிறோம்.

கே: வேலைக்கு ஆள் வேண்டுபவர்கள் என்ன செய்ய வேண்டும்?

ப: அவர்களுக்கும் ஒரு படிவம் உள்ளது. அதில் அவர்களைப் பற்றிய முழு விவரமும், அவர்கள் எதிர்பார்க்கும் வேலையாளும், கொடுக்க விரும்பும் சம்பளம், குடும்ப விவரம் ஆகியவற்றைத் தெரிவிக்க வேண்டும். எந்த மதத்தினரை, எந்த ஜாதியினரை விரும்புகிறார்கள் என்றும் தெரிவிப்பார்கள் சிலர். இவர்களையும் இண்டர்வ்யூ செய்த பின் நாங்கள் இந்த இல்லத்தில் மெம்பராக ஏற்றுக் கொள்வோம். இவர்கள் கேட்பதற்கு ஏற்ப ஆள் கிடைக்கும் போது இவர்களுக்கு ஆள் அனுப்புவோம்.

கே: ஆள் அனுப்பியதுடன் உங்கள் வேலை முடிந்து விடுகிறதா?

ப: இல்லை. தொடர்ந்து இரு தரப்பினரையும் கண்காணிப்போம். இதற்காக ஒரு சமூக சேவகரையும் போட்டிருக்கிறோம். வேலைக்குப் போகிறவர்கள் சில சமயம் இடம் பிடிக்காமல் திரும்பி வந்து விடுவார்கள். அப்போது வேலைக்குப் போனவர், வேலைக்கு வைத்துக் கொண்டவர் இருவரையும் விசாரிப்போம்.

இந்த மாதிரி மூன்று இடங்களை, மூன்று வேலை செய்பவர்களை மாற்றி ரிப்போர்ட் எடுப்போம். நான்காவது தடவை தவறு இருப்பவர்களை எச்சரிக்கை செய்வோம். அநேகமாக நான்காவது தடவை செட்டில் ஆகி விடும். அப்படி இல்லாத போது யார் மீது தவறு இருக்கிறதோ அவர்களின் உறுப்பினர் தகுதியை ரத்து செய்து விடுவோம்.





கே: இதற்கெல்லாம் உங்களுக்கு நிறைய செலவாகுமே?

ப: அதற்காகத்தான் வேலைக்கு ஆள் கேட்பவர்களுக்கு பதிவுக் கட்டணமாக ரூ. 25/— வைத்துள்ளோம். நெதர்லாண்ட்டி லிருந்து ஒரு நிறுவனம் ஆரம்பத்தில் உதவி செய்தார்கள். இப்போது இல்லை. 'சிறந்த வேலையாள்' 'சிறந்த எஜமானர்' என்று ஒவ்வொரு ஆண்டும் பரிசுகள் தருகிறோம்.

கே: இந்த இல்லம் எப்படி இப்போது செயல்படுகிறது?

ப: இதுவரை சுமார் 500 பெண்கள் வேலை வாய்ப்பு பெற்றிருக்கிறார்கள். ரூ. 150/—லிருந்து ரூ. 500/— வரை மாதம் சம் பாதிக்கிறார்கள்.

இவர்கள் நன்னடத்தை மூலம் சிலர் வெளிநாட்டுக்கும் அழைத்துச் செல்லப் பட்டிருக்கிறார்கள். சிலரின் குழந்தை களுக்கு எஜமானர்களால் படிப்புச் செலவு ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. சிலர் அந்தக் குடும்பத்துடனே ஒன்றிப் போயிருக் கிறார்கள். இவர்கள் திருமணங்களைக் கூட அவர்களே நடத்தி வைத்திருக்கிறார்கள்.

**ஒரு சுவையான அனுபவம்:**

ஒரு வீட்டுக்கு வேலைக்கு ஆள் அனுப்பி யிருந்தோம். அவர் 62 வயது மனைவியை இழந்தவர். சில வருடங்கள் கழித்து, தயங் கித் தயங்கி என்னிடம் வந்தார்.

அய்யா, நான் என் மனைவியை இழந்து 18 வருஷங்களாகி விட்டது. என் பிள்ளை களையும் கஷ்டப்பட்டு வளர்த்து விட்டேன். என் வீட்டு வேலைக்கு அனுப்பியுள்ள ஆளை எனக்கும் என் பிள்ளைகளுக்கும் பிடித்து விட்டது. எங்களைப் பார்த்துக் கொள்ள நான் அவளைத் திருமணம் செய்து கொள்ள விரும்புகிறேன் என்றார். அவர் வீட்டுக்கு அனுப்பிய ஆள் கணவனை இழந்த 50 வயது அம்மாள். அந்த அம்மாளைக் கூப்பிட்டு நாசூக்காகக் கேட்டேன். பதினெட்டு வயது பெண் மாதிரி நாணிக் கோணினாள். இருவருக்கும் திருமணம் நடத்தி வைக்கப்பட்டது. அவ்வப் போது என்னை விருந்துக்குக் கூப்பிடுகிறார் கள்.

இன்னொரு இடத்தில் ஒரு பணக்கார விதவை. மனநிலை சரியில்லாதவர். அவ ரைப் பார்த்துக் கொள்ள ஒரு ஆள் அனுப் பினோம். அவர் குடும்பத்துடன் ஒன்றி விட்டார். இந்த அம்மாள் சாப்பாடு கொடுத்தால்தான் அவர் சாப்பிடுவார். குளிப்பாட்டி விட்டால்தான் குளிப்பார். இந்த மாதிரி நிறைய.

இப்போது எங்களிடம் 10 பேர் பாஸ் போர்ட்டுடன் இருக்கிறார்கள். இந்தியா முழுவதிலும் எங்கள் உறுப்பினர்கள் வேலை செய்கிறார்கள். ஆனாலும் இன்னும் பலர் வீட்டு வேலை செய்வது என்பதை மட்டமாகவே நினைத்து இந்த வேலைக்கு வர வெட்கப்படுகிறார்கள். இப்போது அந்த நிலை கொஞ்சம் கொஞ் சமாக வருகிறது. அனாதை, வசதியில்லாத பெண்கள், விதவைகளுக்கு ஒரு தன்னம்பிக் கையை அளிக்கிறது இந்த இல்லம்.

கே: இதில் வேறு எதுவும் கட்டுப்பாடு வைத்திருக்கிறீர்களா?

ப: முதல் மாதச் சம்பளத்தில் இரு தரப் பினரும் சேர்ந்து ரூ. 100/— செலுத்த வேண் டும். அப்போதுதான் இங்கு உள்ள ஃபோன், அலுவலர்கள், பயிற்சி செலவை ஈடுகட்ட முடியும். சம்பளத்தை எங்களிடம் தான் செலுத்த வேண்டும். ஒவ்வொருவர் பெயருக்கும் ஒரு பாங்க் அக்கௌண்ட் ஆரம்பித்து அதில் போட்டு விடுவோம்.

வேலை செய்பவர்களின் உறவினர்கள் வேலை செய்யும் இடத்தில் அவர்களைச் சந்திக்கக் கூடாது. கடிதப் போக்குவரத்து, சந்திப்பு போன்றவை எங்கள் மூலம்தான் நடக்க வேண்டும். வேலை செய்பவர்கள் வீட்டோடு தங்கிதான் வேலை செய்ய வேண்டும். இதற்கெல்லாம் வேலை செய் பவர், வேலை கொடுப்பவர் இரண்டு பேரும் ஒத்துக் கொள்ள வேண்டும்.

கே: உங்களை எப்படித் தொடர்பு கொள்வது?

ப: இதோ எங்கள் விலாசம்.

எண்: 369, அண்ணா சாலை, சைதாப் பேட்டை, சென்னை — 15. போன் நெம்பர்: 459521.

பேட்டி: ஈ. வெ. ரா. மோகன்.

கேட்கும் ஸின்த்தால்
எதுவோ, கிடைக்கும்
ஸின்த்தால் அதுவே




விருப்பமானதை தேர்ந்தெடுப்பீர்

கோத்ரெஜ்






அதைப் போல் கர்ப்பப் பையில் ஏற்படும் நோய்களை கால் விரல்களில் ஓடும் நாளங்களில் அக்குபங்சர் ஊசி மூலமாக குணப்படுத்தி விட முடியும்.

12 முக்கிய சக்தி நாளங்களில் முதலாவதாக கருதப்படுவது இரைப்பை (Stomach Meridian) நாளம் ஆகும். ஏனெனில் நாம் உண்ணும் உணவு முதலில் சென்றடைவது வயிறு அல்லது இரைப்பையில் ஆகும். இது ஒழுங்காக செயல்பட்டால்தான் இதிலிருந்து உணவு ஜீரணிக்கப்பட்டு சக்தியானது இரத்தத்தில் கலப்பதற்கு ஏதுவாக இருக்கும். இந்த வயிற்றுப் பகுதியை ஒழுங்காகச் செயல்பட வைக்கும் Stomach Meridian (படம்) காட்டப்பட்டுள்ளது. இது கண்களிலிருந்து ஆரம்பித்து முகம், கழுத்து, நெஞ்சு, வயிறு, தொடை, கால் ஆகிய பகுதிகளில் இறங்கி இரண்டாவது விரலில் வந்து முடிகிறது. இந்த நாளத்தில் மொத்தம் 45 அக்குபங்சர் புள்ளிகள் உள்ளன. இவற்றிலுள்ள முக்கிய புள்ளிகளாவன: St1, — அது கண்ணுக்கு அருகாமையில் இருப்பதால் கண்களில் ஏற்படும் எல்லா குறைகளும் தீர்த்து வைக்கக் கூடியதாக உள்ளது. உதாரணமாக கண் பார்வை மங்குதல், மாலைக்கண், கண்களில் நீர் வடிதல், கண்வலி, தலைவலியுடன் கூடிய கண்வலி ஆகியவற்றைச் சரி செய்ய முடியும்.

St 5,7 — பல்வலி, தாடைவலி, தாடைமூட்டு விலகுதல், முகப் பருக்கள், வாய் துர்நாற்றம், அதிக உமிழ்நீர்.

St 12 — தொண்டையில் சளி கட்டுதல், ஆஸ்துமா, தோள்பட்டை வலி.

St 18 — மார்பக வளர்ச்சியின்மை, பால் சுரக்காமல் இருத்தல்.

St 21 — எல்லாவிதமான அல்சர்களுக்கும், அஜீரணத்திற்கும், 'வயிற்றுக் கோளாறுகளுக்கும்.

St 25 — தீராத மலச்சிக்கல், வயிறு உப்புசம், ஜீரணமின்மை.

St 28 — கர்ப்பப்பை நோய்கள், மாதவிடாய் நோய்கள், ஜீவ உறுப்புக் கோளாறுகள்.

St 36 — இதை தினமும் மசாஜ் செய்வதன் மூலம் உடல் முழுவதும் புத்துணர்வு பெறுகிறது. பொலிவுடன் திகழ வைக்கிறது.

St 44 — கால்களில் ஏற்படும் எல்லாவித வலிகளையும் நீக்கக்கூடிய திறன் வாய்ந்தது. அதுமட்டுமில்லாமல் தலைவலி, பல்வலி, ஆஸ்துமா, தொண்டையில் சளி கட்டுதல், அப்பண்டிசைடிஸ் போன்றவை.

எப்படி இந்த நாளம்தான் இதற்குக் காரணம் என்று திட்டவட்டமாகக் கூற முடியும் என்றால் அவர்களுக்குக் கால் வலியுடன் சேர்ந்து மற்ற நோய்கள் அதாவது கண் பார்வை குறைதலோ (அ) மலச்சிக்கலோ (அ) கர்ப்பப்பை கோளாறுகளோ (அ) பல் வலியோ (அ) அஜீரணக் கோளாறு இப்படி வயிறு நாளங்கள் சரி செய்யக்கூடிய மற்றைய நோய்களும் சேர்ந்து இருக்கும். இதை வைத்துக் கொண்டு இந்த நாளத்தைச் சரி செய்தால் இந்த நோய்களையும் குணப்படுத்த முடியும் என யூகித்து முடிவுக்கு வரலாம்.

கண்களுக்குச் செல்லக்கூடிய முக்கியமான ஓட்டங்கள் இந்த நாளத்தில் இருப்பதால் கண்கள் முதல் முதலாக மங்கத் தொடங்கியவுடன் அக்குபங்சர் வைத்தியம் மேற்கொண்டால் கண்களுக்குக் கண்ணாடி போடாமலேயே தடுத்து விட முடியும்.

நமது உடலில் 'சீரான சக்தி ஓட்டம்' நிலைப்பெற்றிருக்கும் வரை எந்த நோயும் நம்மை அணுகுவதில்லை. உடல் நலத்துடன் திகழ்கிறோம். இந்த ஓட்டத்தில் எங்கேனும் தடை ஏற்படுமானால், பல்வேறு உறுப்புக்களின் சக்தி நிலையில் ஏற்றத்தாழ்வு ஏற்படுகிறது. இந்த இரண்டு நிலையுமே நோயினை ஏற்படுத்துகிறது. அதாவது தேவைக்கு அதிக அளவு சக்தி உள்ள உறுப்பும், தேவைக்குக் குறைவாக சக்தி உள்ள






அதைப் போல் கர்ப்பப் பையில் ஏற்படும் நோய்களை கால் விரல்களில் ஓடும் நாளங்களில் அக்குபங்சர் ஊசி மூலமாக குணப்படுத்தி விட முடியும்.

12 முக்கிய சக்தி நாளங்களில் முதலாவதாக கருதப்படுவது இரைப்பை (Stomach Meridian) நாளம் ஆகும். ஏனெனில் நாம் உண்ணும் உணவு முதலில் சென்றடைவது வயிறு அல்லது இரைப்பையில் ஆகும். இது ஒழுங்காக செயல்பட்டால்தான் இதிலிருந்து உணவு ஜீரணிக்கப்பட்டு சக்தியானது இரத்தத்தில் கலப்பதற்கு ஏதுவாக இருக்கும். இந்த வயிற்றுப் பகுதியை ஒழுங்காகச் செயல்பட வைக்கும் Stomach Meridian (படம்) காட்டப்பட்டுள்ளது. இது கண்களிலிருந்து ஆரம்பித்து முகம், கழுத்து, நெஞ்சு, வயிறு, தொடை, கால் ஆகிய பகுதிகளில் இறங்கி இரண்டாவது விரலில் வந்து முடிகிறது. இந்த நாளத்தில் மொத்தம் 45 அக்குபங்சர் புள்ளிகள் உள்ளன. இவற்றிலுள்ள முக்கிய புள்ளிகளாவன: St1, — அது கண்ணுக்கு அருகாமையில் இருப்பதால் கண்களில் ஏற்படும் எல்லா குறைகளும் தீர்த்து வைக்கக் கூடியதாக உள்ளது. உதாரணமாக கண் பார்வை மங்குதல், மாலைக்கண், கண்களில் நீர் வடிதல், கண்வலி, தலைவலியுடன் கூடிய கண்வலி ஆகியவற்றைச் சரி செய்ய முடியும்.

St 5,7 — பல்வலி, தாடைவலி, தாடைமூட்டு விலகுதல், முகப் பருக்கள், வாய் துர்நாற்றம், அதிக உமிழ்நீர்.

St 12 — தொண்டையில் சளி கட்டுதல், ஆஸ்துமா, தோள்பட்டை வலி.

St 18 — மார்பக வளர்ச்சியின்மை, பால் சுரக்காமல் இருத்தல்.

St 21 — எல்லாவிதமான அல்சர்களுக்கும், அஜீரணத்திற்கும், 'வயிற்றுக் கோளாறுகளுக்கும்.

St 25 — தீராத மலச்சிக்கல், வயிறு உப்புசம், ஜீரணமின்மை.

St 28 — கர்ப்பப்பை நோய்கள், மாதவிடாய் நோய்கள், ஜீவ உறுப்புக் கோளாறுகள்.

St 36 — இதை தினமும் மசாஜ் செய்வதன் மூலம் உடல் முழுவதும் புத்துணர்வு பெறுகிறது. பொலிவுடன் திகழ வைக்கிறது.

St 44 — கால்களில் ஏற்படும் எல்லாவித வலிகளையும் நீக்கக்கூடிய திறன் வாய்ந்தது. அதுமட்டுமில்லாமல் தலைவலி, பல்வலி, ஆஸ்துமா, தொண்டையில் சளி கட்டுதல், அப்பண்டிசைடிஸ் போன்றவை.

எப்படி இந்த நாளம்தான் இதற்குக் காரணம் என்று திட்டவட்டமாகக் கூற முடியும் என்றால் அவர்களுக்குக் கால் வலியுடன் சேர்ந்து மற்ற நோய்கள் அதாவது கண் பார்வை குறைதலோ (அ) மலச்சிக்கலோ (அ) கர்ப்பப்பை கோளாறுகளோ (அ) பல் வலியோ (அ) அஜீரணக் கோளாறு இப்படி வயிறு நாளங்கள் சரி செய்யக்கூடிய மற்றைய நோய்களும் சேர்ந்து இருக்கும். இதை வைத்துக் கொண்டு இந்த நாளத்தைச் சரி செய்தால் இந்த நோய்களையும் குணப்படுத்த முடியும் என யூகித்து முடிவுக்கு வரலாம்.

கண்களுக்குச் செல்லக்கூடிய முக்கியமான ஓட்டங்கள் இந்த நாளத்தில் இருப்பதால் கண்கள் முதல் முதலாக மங்கத் தொடங்கியவுடன் அக்குபங்சர் வைத்தியம் மேற்கொண்டால் கண்களுக்குக் கண்ணாடி போடாமலேயே தடுத்து விட முடியும்.

நமது உடலில் 'சீரான சக்தி ஓட்டம்' நிலைப்பெற்றிருக்கும் வரை எந்த நோயும் நம்மை அணுகுவதில்லை. உடல் நலத்துடன் திகழ்கிறோம். இந்த ஓட்டத்தில் எங்கேனும் தடை ஏற்படுமானால், பல்வேறு உறுப்புக்களின் சக்தி நிலையில் ஏற்றத்தாழ்வு ஏற்படுகிறது. இந்த இரண்டு நிலையுமே நோயினை ஏற்படுத்துகிறது. அதாவது தேவைக்கு அதிக அளவு சக்தி உள்ள உறுப்பும், தேவைக்குக் குறைவாக சக்தி உள்ள

Godrej®

# செலவிடும் பணத்திற்கு சிறந்த மதிப்பு!



பரந்த இடவசதிதரும்
சிறந்த வடிவமைப்பு

எல்லாம் புதிய
கட்டுறுதியான
கம்ப்ரெஸர், கூடவே
பாலியூரேத்தன்
இன்சுலேஷன்

அணிவகுக்கும்
நிறவரிசை

புதிய கோத்ரெஜ் 165 லிட்டர் ரெ∴ப்ரிஜெரேட்டர்.
செலவிடும் பணத்திற்கு சிறந்த மதிப்பு

Godrej 165 லிட்டர் ரெ∴ப்ரிஜெரேட்டர்.

இதற்கு இணையேது !

HTA 2364 R

உறுப்பும் அதனதன் தனித் தன்மையை இழந்து விடுகிறது. இந்த உறுப்புக்களை நோய் பாதிப்பதற்கு வழிவகுக்கிறது. ஓர் உறுப்பு தேவைக்கு அதிக அளவு சக்தி தேக்கத்தினால் பாதிக்கப்படும் போது, அந்த உறுப்பின் பாதிப்பின் ஆரம்பத்தை நாம் எப்படி உணர்கிறோம் என்பதைச் சற்று தெரிந்து கொள்வோம்.

உதாரணம்: 1. வயிறு: (அதிக அளவு 'சக்தி' இயக்கம்)

அதிக அளவு பசி; கொஞ்சம் சாப்பிட்டதும் பசி அடங்கி விடுதல். 10—15 நிமிடங்களுக்குப் பிறகு மறுபடியும் பசி; (நொறுக்குத் தீனி தின்று கொண்டேயிருப்பார்கள்!) சாப்பிட்டதும் நெஞ்சு கரித்தல்; வயிற்றில் எப்போதுமே சூடும், எரிச்சலும் கலந்த உணர்வு; குளிர்ந்த பானங்களில் அதிக நாட்டம்; அதிக ஏப்பம்; வாயில் புண்கள் ஏற்படுதல்; நாக்கில் அதிகப் புண் ஏற்பட்டு எரிச்சல் உண்டாகுதல்; அதிக உமிழ்நீர் சுரத்தல்; வாயில் துர்நாற்றம்; அதிகமாக நெஞ்சில் சளி கட்டுதல்; இப்படி ஏராளமாகப் பெருகும்.

## வயிற்றில் மிகக் குறைந்த அளவு 'சக்தி'யின் போது ஏற்படும் கஷ்டங்கள் :

பசியின்மை: சில குழந்தைகள், வாயில் சாதத்தை வைத்து மென்று கொண்டேயிருக்கும். சீக்கிரமாக விழுங்குவதற்குப் போதுமான உமிழ்நீர் சுரக்காமல் இருத்தலே இதன் காரணமாகும். சாப்பிட்டதும் வயிற்றில் உப்புசம்; நிறைய வாயு அடைத்துக் கொண்டிருக்கும். ஏப்பம் விட்டால் சிறிது நிவாரணம் கிடைக்கும்; ஆனால் ஏப்பம் விடுவதற்குப் பெருங்கஷ்டமாக இருக்கும். சாப்பிட்டதும் வயிற்றில் கல்லைப் போட்டது போன்ற உணர்வு. வயிற்றில் எப்போதுமே இரைச்சல்; ஒரு நாளைக்கு இரண்டு, மூன்று முறை மலம் கழித்தல்; முன் நெற்றியில் தலைவலியும், சில சமயங்களில் கண்களுக்கு உள்ளேயும் இந்தத் தலைவலி பரவுவதுண்டு. பல சமயங்களில் வாந்தி வருவது போன்ற உணர்வு; உடலில் சோர்வு; அதிக தூக்கம்; எவ்வளவு நேரம் தூங்கினாலும் சோம்பேறித்தனமாக இருத்தல்; கண் பார்வை மங்குதல்; பள்ளிப் பாடத்தில் கவனமின்மை போன்றவை.

நான்காம் வகுப்பில் படிக்கும் பையனைப் பற்றி, அந்த வகுப்பின் ஆசிரியை அவன் தாயாரிடத்தில், "பையன் எப்போதும் சோர்வாகவே இருக்கிறான். படிப்பில் நாட்டம் செலுத்துவதில்லை. கேட்டால் தலைவலி என்று தினமும் பொய் சொல்லுகிறான். மேலும் போர்டில் எழுதுவது சரிவரத் தெரியவில்லை என்கிறான். இத்தனைக்கும் கண்ணாடி வேறு போட்டிருக்கிறான். ஒழுங்காகக் கண்டித்து அனுப்புங்கள்" என்று கூறிச் சென்று விட்டார்.

பையனின் தாயாருக்கு பெரும் வருத்தம். காரணம் இது அந்தத் தாயார் ஏற்கெனவே அறிந்ததுதான். கண் டாக்டரும் பார்வை சற்று குறைந்துதான் உள்ளது என்று கண்ணைச் சரி பார்த்து, கண்ணாடி போட்டு ஒரு மாதம்தான் ஆகிறது. கண்ணாடி அணிந்ததிலிருந்து இன்று வரை தாயிடம் பையன் தலைவலி, பார்வை தெரியவில்லை என்று சொல்லவில்லை. இந்த ஒரு மாதத்தில் இன்றுதான் ஆசிரியையிடம் தலைவலி, பார்வை மீண்டும் சரியாகத் தெரியவில்லை என்று சொல்லியிருக்கிறான். அவன் தாய் அன்றே மீண்டும் கண் டாக்டரிடம் பரிசோதித்ததில், கண் பார்வை மேலும் குறைந்திருக்கிறது என்பதைத் தெரியப்படுத்தி, குறையும் போது அவ்வப்போது கண்ணாடியை மாற்றி அணிந்து கொள்ள வேண்டியதுதான் வேறு வழியில்லை என்று கூறி விட்டார்!

இந்தப் பையனிடம் காணப்பட்ட குறை ஒன்றே ஒன்றுதான். நாடிப் பரிசோதனையில் அவனுடைய வயிற்றில் குறைந்த அளவு சக்தி ஓட்டம் காணப்பட்டது. அதனைச் சரி செய்த ஓரிரு நாளில் கண் பார்வை தெளிவு பெற்றது. தலைவலி அடியோடு மறைந்து விட்டது. புதிதாக மாற்றப்பட்ட



# பழமை வாய்ந்த ஆயுர்வேதத்தின் அரிய அன்பளிப்பு.

# பல வகையில் பலன் தரும் ஹிம்ஃபுல் தைலம்

தலைவலி, உடம்புவலி, காதுவலி, பல்வலி, மூட்டு வலி, மூலம், வெட்டுக்காயம், தீப்புண் — அனைத்துக்கும் சிறந்த நிவாரணி. கூந்தல் செழிக்கவும், உடலுக்குக் குளிர்ச்சி அளிக்கவும் இணையற்றது. இதை ஹேர் ஆயிலாகவும் தினமும் உபயோகிக்கலாம்.




ஹிம்ஃபுல் ...



உடல் குளுமைக்கு



தலைவலிக்கு



ஜலதோஷத்துக்கு



கேச வளர்ச்சிக்கு

## ஹிம்ஃபுல் தைலம்

தயாரிப்பாளர்கள்:
ஹிமாலயா
ஆயுர்வேதிக் ஒர்க்ஸ்
கல்கத்தா.

Marketed by :

**வி.ஸி. ராமலிங்கம் & ஸன்ஸ்**
41, தியாகப்ப செட்டி தெரு, கொருக்குப்பேட்டை,
சென்னை-600 021. தொலைபேசி: 555465
கிளை: முதல் மாடி, 38/751-G, கோபால பிரபு ரோடு
எர்ணாகுளம், கொச்சி 682 011

Stockists : * **Ganesh Agencies,** 36, Karpagam Avenue, Madras-28. Tel : 837991.
* **Kumaraguru Mercantiles,** 205, Mint Street, Madras-3. Tel : 561089.
* **N.S.P. Agencies,** 960, Poonamallee High Road, Madras-84.
* **Sha Vajingjee Babulal,** 19, Kasi Chetty Street, Madras-79. Tel : 569858.

Shruti(M)VCR897

# கணவரிடம் அசடு வழிந்த அனுபவம்!



கல்யாணமாகிச் சில நாட்கள் கழிந்து விட்டால், கணவரது விருப்பு வெறுப்புகள் நமக்குப் புரிந்துவிடும். ஆனால் மணமான புதிதில் அவர் நமக்குப் புதிர்! நாம் அவருக்குப் புதிர்! அந்த வகையில் மணமானவுடன் ஏராளமாக அசடு வழிந்த ஓர் அனுபவம் எனக்கு உண்டு.

எனக்குத் திருமணம் ஆகு முன்பே சமையலிலும், எல்லாவித ஸ்வீட்கள் செய்வதிலும் தேர்ச்சி பெற்றிருந்தேன். மணமாகிய இரண்டாவது நாள்! என் கணவரிடம் சென்று, ''உங்களுக்கு என்ன ஸ்வீட் பிடிக்கும்?'' என்று கேட்டேன். என் மனத்தில் அவர் எந்த ஸ்வீட்டைக் கேட்டாலும் செய்து விடலாம் என்ற நம்பிக்கை. 'எனக்குத் தெரியாத எந்த ஸ்வீட்டைக் கேட்டுவிடப் போகிறார்?' என்கிற இறுமாப்பு!

என் கணவர் திருவாய் மலர்ந்து, ''எனக்கு உளுந்தங்களிதான் மிகவும் பிடிக்கும்'' என்றாரே பார்க்கலாம்! அல்வாவும், லட்டும், பாதுஷாவும் சொல்லப் போகிறார் என எதிர்பார்த்து நின்ற எனக்குப் பேரிடி! நான் திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்தவன் என்பதால் அந்த மாவட்டத்துக்கே உரியதான உளுந்தங்களியை ஆவலோடு கேட்டிருக்கிறார். நான் அசடு வழிய நின்றேன். பிறகு பின்னாளில் அதையும் கற்றுக் கொண்டு செய்து கொடுத்தேன் என்று வையுங்கள்! அதை நினைத்து நினைத்து இப்போதும் இருவரும் சிரிப்பது உண்டு!

— குமாரி சோமசுந்தரம்.

கண்ணாடியைக் கழற்றி விட்டு பழைய கண்ணாடியைக் கொண்டே நன்றாகப் பார்க்க முடிந்தது. படிப்பில் கவனக்குறைவு நீங்கி உற்சாகத்துடன் படிக்க ஆரம்பித்தான். இன்னும் ஓரிரு மாதங்களில் கண்ணாடியை அறவே நீக்கி விடவும் வாய்ப்பு இருக்கிறது என்று சொன்ன மாத்திரத்தில் அந்தத் தாய்க்கு அழுகையே வந்து விட்டது!

ஒரு பெண்ணுக்குத் தீராத தலைவலி. பசி எடுக்கும் போது சாப்பிட்டு விட வேண்டும். ஒரு ஐந்து நிமிடம் தாமதித்தால் போதும் லேசான தலைவலியுடன் வயிற்று எரிச்சலும் ஆரம்பமாகி விடும். பிறகு எவ்வளவு சாப்பிட்டாலும் வயிற்று எரிச்சல் சற்று குறைந்தாலும் தலைவலி மட்டும் சிறிதளவும் குறையாது. ஆரம்ப காலத்தில் மாத்திரைகளுக்குக் கட்டுப்பட்ட தலைவலி, சமீப காலமாக அதற்கும் கட்டுப்படுவதில்லை. பல சமயங்களில் வாந்தியும் ஏற்படும். அதன் பிறகு தலைவலி குறைய ஆரம்பிக்கும். மற்றபடி இரவு நன்றாகத் தூங்கி எழுந்தால் காலையில் குறைந்திருக்கும். மூளை மருத்துவ நிபுணர், இந்தத் தலைவலியை மைக்ரைன் (தலைவலி) என டயக்னோஸ் செய்து கடந்த 5 வருடங்களாக மாத்திரை மருந்துகளைக் கொடுத்து வருகிறார். குடல் சம்பந்தப்பட்ட நிபுணர் அந்தப் பெண்ணுடைய வயிற்று எரிச்சலை 'கேஸ்ட்ரிக் அல்சர்' நோயின் அடிப்படையில் ஏறக்குறைய ஏழு வருடங்களுக்கு மேல் வைத்தியம் அளித்து வருகிறார். இந்த நிலையில் அக்குபங்சர் வைத்தியம் அந்தப் பெண்ணுடைய வயிற்றெரிச்சலையும், தலைவலியையும் 11 நாட்களில் முழுமையாகக் குணப்படுத்தியது.

அக்குபங்சர் நாடிப் பரிசோதனையில் அந்தப் பெண்ணின் வயிற்றில் அளவுக்கு அதிகமான 'சக்தி' தேங்கியிருப்பது தெரிய வந்தது. வயிற்றெரிச்சலுக்கும், தலைவலிக்கும், வாந்திக்கும் இது ஒன்றுதான் காரணம். வயிற்றுப் பகுதியில் அதிகமாகத் தேங்கியிருந்த சக்தியை நீக்கி, சக்தி ஓட்டத்தைச் சீராக்கும் சிகிச்சை முறை மேற்கொண்ட அன்றிலிருந்தே சிறிது சிறிதாகச் சீராகக் குணம் பெற்று 11–வது நாளில் பூரணமாகக் குணமடைந்தார். கடந்த ஒரு வருடமாகத் தலைவலி, வயிற்று வலி, வாந்தி போன்ற கஷ்டங்களிலிருந்து நீங்கி சுகமாக இருக்கிறார். ஆக அக்குபங்சர் வைத்திய முறையில் அந்தப் பெண்ணைப் பொறுத்த வரையில் தலைவலி, வயிற்று வலி, வாந்தி ஆகியவை வெவ்வேறு நோய்களல்ல. அடிப்படைக் காரணம் ஒன்றுதான். அதைச் சரி செய்வதே நோய்களிலிருந்து குணமாவதற்குச் சிறந்த வழி என்பதை உறுதிப்படுத்துகிறது.

— டாக்டர் சித்திக் ஜமால்,
டாக்டர் பஸ்லுர் ரஹ்மான்.

# சாலிடெர் தரம்




## சர்வதேசப் புகழ் பெறுகிறது

சாலிடெர் CAT 1000DX... இப்போது யூகோஸ்லாவியாவுக்கு (கிழக்கு ஐரோப்பா) ஏற்றுமதி செய்வதற்கான மதிப்புமிக்க ஆர்டரைப் பெற்றுள்ளது. ஏற்றுமதிக்கு இது ஓர் ஆரம்பமே... இன்னும் பலப்பல ஏற்றுமதி ஆர்டர்கள் வர இருக்கின்றன.

சாலிடெர் CAT 1000 DX — இந்தியாவில் பெரிதும் விரும்பி வாங்கப்படும் டீலக்ஸ் கலர் டிவி... விரைவில் வெளி நாடுகளிலும் இதன் புகழ் கொடிகட்டிப் பறக்கப்போகிறது.

# சாலிடெர்

Insight-S-180

* மலம்புழா அணை

# விதம் விதமாய் விடுமுறைகள்!

## சுற்றுலா :

தலைப்பைப் பார்த்தவுடனேயே 'ஹூம்! விடுமுறையா? அதெல்லாம் கையில் பசை உள்ளவர்களுக்குத்தான் சரிப்பட்டு வரும். விலைவாசி போற போக்கில் ரயில்காரனுக்கும் ஹோட்டல்காரனுக்குக் கொட்டி அழ யாரிடம் பணமிருக்கு?'' என்று பெருமூச்சு விட்டுக் கொண்டே பக்கத்தைப் புரட்ட நினைக்கிறீர்களா? ஒரு நிமிடம். மனநல மருத்துவர் தாரா ஸ்ரீநிவாசன் சொல்வதைக் கேட்கிறீர்களா?

''படபடப்பு, எரிச்சல், சதா தலைவலி, 'முணுக், முணுக்' கென்று முதுகில் வலி இப்படிப் பல கோளாறுகளுக்காகப் பல மருத்துவர்களிடம் முட்டி மோதியும் காரணம் கண்டுபிடிக்கப்படாமல் எங்களிடம் வரும் பலருக்கு நாங்கள் கொடுக்கும் 'பிரிஸ்கிருப்ஷன்' — ஒரு வாரம் விடுமுறை எடுத்துக் கொண்டு எங்காவது ஊருக்குச் சென்று வாருங்கள், என்பதுதான். அலுவலக அயர்வுகள், சம்சாரச் சங்கடங்கள், என்னதான் ஒற்றுமையான குடும்பமாயிருந்தாலும் பார்த்தவர்களையே திரும்பத் திரும்பப் பார்த்து, கேட்டவற்றையே திரும்பத் திரும்பக் கேட்பதால் வரும் சலிப்பு, உறவினர், நண்பர்கள் வட்டங்கள் தவிர்க்க இயலாத சிக்கல்களால் வரும் மனக் களைப்பு இவை அனைத்துக்கும் கண்டிப்பாக ஒரு வடிகால் தேவை. இதைத்தான் நாங்கள் 'social relief என்கிறோம்.

குழந்தைகளுக்குண்டான கடமையை முடித்து விட்டு அவர்கள் தத்தம் பாதையில் சென்று விட்ட பிறகு இனி தன்னால் யாருக்கும் எப்பயனுமில்லையே என்று தளர்வுறும் முதியோர், 'workaholics' என்கிறோமே,



* ஜெய்பூரில் ஜந்தர் மந்திர்



* புதுதில்லி...



* கொடைக்கானல்



* கோவளம்

அது போல ஒரு நிமிடம் ஓய்வைக் கூடப் பெரிய பாவமாக எண்ணும் மனப்பாங்குடையவர்கள், குடும்பம், குழந்தைகள் என்றே செக்குமாடாகச் சுற்றி வரும் இல்லத் தலைவிகள் — இப்படி எல்லோருமே ஆண்டுக்கொரு முறையாவது விடுமுறை எடுத்துக் கொள்ள வேண்டுமென்பது என் கருத்து'' என்று உறுதியாகக் கூறுகிறார் டாக்டர் தாரா.

விடுமுறைகளின் அவசியத்தைப் புரிந்து கொண்டுதான் எல்லா நிறுவனங்களுமே தங்கள் அலுவலர்களுக்குப் பலவிதமான விடுமுறைச் சலுகைகளை அளித்திருக்கின்றன. தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளின் மேல்மட்ட அலுவலர்கள் வருடமொரு முறை தாங்கள் பிறந்த ஊருக்கோ, அல்லது இந்தியாவின் வேறெந்த இடத்துக்கோ சென்று வரலாம். தன்னைச் சார்ந்திருக்கும் பெற்றோர், மனைவி, மக்கள் யாவருக்கும் முதல் வகுப்புப் பயணச் சீட்டுகளுக்கான ஈட்டுத் தொகையைப் பெற்றுக் கொள்ளலாம். பயணம் செல்லும் தூரத்திற்கு வரம்பில்லை. ஆனால் பயணச் சீட்டுகளை மட்டும் மேலதிகாரிகளின் பார்வைக்கு வைக்க வேண்டும்.

கீழ்மட்ட அலுவலர்களுக்கு இதே சலுகை இரண்டு ஆண்டுகளுக்கொருமுறை 2000 கி.மீ. பயணம் செய்வதற்கோ அல்லது நான்கு ஆண்டுகளுக்கொருமுறை 4000 கி.மீ. செல்வதற்கோ அளிக்கப்படுகிறது. **1964 — ஆம் ஆண்டு முதல் அமுலில் இருக்**கும் இச் சலுகைகள் அனேகமாக எல்லா அரசாங்க நிறுவனங்களாலும் அளிக்கப்படுகின்றன.

தனியார் நிறுவனங்களைப் பொறுத்த வரை இத் தொகை அவரவர் பதவி, சம்பள விகிதம் ஆகியவற்றைப் பொறுத்து வேறுபடுகிறது. ஆனால் பயணச் சீட்டுகளைக் காண்பித்தாக வேண்டும் போன்ற விதிமுறைகள் தனியார் நிறுவனங்களில் செயல்படுத்தப்படுவதில்லை. உயர் அதிகாரிகளுக்குச் சுமார் 2600 ரூபாயிலிருந்து 4000 வரை, மற்றவர்களுக்கு அவர்கள் சம்பள விகிதத்துக்கு ஏற்றவாறு ஒரு தொகையை அளித்து விடுகிறார்கள். அதை அவர்கள் தம் வங்கிக் கணக்கில் சேர்த்துக் கொள்கிறார்களா, வந்தவாசி போய் வந்தார்களா என்றெல்லாம் கண்காணிப்பதில்லை.

ஆனால் இந்த விடுமுறையை எடுத்துக் கொண்டு வீட்டில் உட்கார்ந்தோமானால்



தொடர்ந்து தொலைபேசி அழைப்புகள் வரும். இந்த 'மேட்டரை' விளக்க வேண்டும். அந்த 'ஸ்டேட்மெண்டி'ல் கையெழுத்துப் போட வேண்டும் என்று. கடைசியில் விடுமுறையாவது ஒன்றாவது. திரும்பவும் அலுவலகச் சூழலில் சிக்கிக் கொள்ள வேண்டியதுதான். இதைத் தவிர்த்து நிஜமாகவே எந்த ஊருக்காவது சென்று வந்தால் பாட்டரியை 'ரீசார்ஜ்' செய்வது போல புதுத் தெம்பும் உற்சாகமும் பெற்று அலுவல்களை இரட்டிப்பு மடங்கு ஊக்கத்துடன் கவனிக்கலாம்.

சரி, விடுமுறை செல்வதாகத் தீர்மானித்து விட்டீர்கள். தொகையும் ரெடி. ஆனால் எங்கே போவது, பயண ஏற்பாடுகளை யார் கவனிப்பது என்று தலையைச் சுற்றுகிறதா? கவலையை விடுங்கள். இந்திய சுற்றுலா வளர்ச்சிக் கழகத்துக்கு நடையைக் கட்டுங்கள். அங்கே உயர் அதிகாரி திரு. எம். எஸ். செங்குட்டுவனைச் சந்தித்து உங்கள் 'பட்ஜெட்', குடும்ப நபர்கள், விடுமுறை நாட்களின் எண்ணிக்கை, ஆகிய விவரங்களைச் சொல்லி விட்டீர்களானால் போதும். 'மளமள'வென்று எந்த ஊருக்கு எந்த 'பேக்கேஜ் டூர்' இருக்கிறது, என்ன செலவு என்று பட்டியலே கொடுத்து விடுவார். தூண்டுதலுக்கு வழ,வழ பேப்பரில் கண்ணைப் பறிக்கும் பல படங்களையும் உங்கள் முன் போட்டு விடுவார். தேர்ந்தெடுப்பது உங்கள் சாமர்த்தியம்!

"ஆனால் விடுமுறைப் பயணங்களை வீண் செலவாகக் கருதும் வழக்கம் இன்னும் தமிழ் நாட்டவர்களை விட்டு விடவில்லையே" என்று வருத்தப்படுகிறார் செங்குட்டுவன். "பம்பாய், டில்லி போன்ற நகரங்களில் வார இறுதி விடுப்பைக் கூட அருகிலுள்ள இடங்களுக்குக் குடும்பத்தினருடன் 'பிக்னிக்' சென்று இன்பமாகக் கழிக்கும் வழக்கம் உள்ளது. ஆனால் நாங்கள் ஏற்பாடு செய்யும் முப்பத்தைந்து பேர் கொண்ட பேருந்துகளில் ஒன்றிரண்டு பேர்தான் தமிழர்களாக இருப்பார்கள்" என்பது இவருடைய குற்றச்சாட்டு. உண்மைதானே. கோடை விடுமுறையில் கூடக் குழந்தைகளை அத்தை வீட்டிற்கு அனுப்பலாமா என்று

...ான் சிந்திக்கிறோம். நாமும் பிறந்தகத்துக் நச் சென்று கூட இரண்டு சண்டைகளை விலைக்கு வாங்கிக் கொண்டு வருகிறோம். முற்றிலும் மாறுபட்ட ஒரு சூழ்நிலையை அனுபவித்து மகிழ்வதுதான் விடுமுறை என்பதை என்று உணரப் போகிறோமோ?

'வேற்றுமையில் ஒற்றுமை' என்று பிரமாதமாகக் கூறிக் கொள்கிறோமே தவிர நம்மில் எத்தனை பேர் கேரளக் குருவாயூரின் பக்திப் பரவசத்தில் திளைத்துத் திணறியிருக்கிறோம்? ஆந்திர நிஜாமின் சப்தர்ஜங் அருங்காட்சியகத்தைக் கண்டு அதிசயித்திருக்கிறோம்? கர்நாடகப் பிருந்தாவன நீருற்றுச் சீறலை நின்று ரசித்திருக்கிறோம்? இவ்வாறு வெவ்வேறு மாநிலங்களில் வெவ்வேறு அழகுக் குவியல்களாய் அற்புதம் காட்டும் இந்தியத் தாயின் பல வடிவங்களை அனைவரும் உணர்ந்து மகிழ வேண்டும் என்றுதான் இந்தியச் சுற்றுலாக் கழகம் 1966—ல் துவக்கப்பட்டது.

வெளிநாட்டுப் பயணிகளுக்கு நம் கலைப் பெட்டகங்களின் பெருமையை அடிக்கோடிட்டுக் காட்டுவதோடு நின்று விடுவதில்லை இவர்கள். அவர்கள் அதிகம் வராத ஏப்ரல் முதல் செப்டம்பர் வரை பல சலுகைகளை உள்ளூர்ப் பயணிகளுக்கும் அளிக்கிறார்கள். இந்தியா முழுவதிலும் மூன்று முதல் ஐந்து நட்சத்திர அந்தஸ்து வரை பெற்ற 23 ஹோட்டல்களும், 2 கடற்கரை உல்லாச மாளிகைகளும் இவர்கள் சுற்றுலாச் சங்கிலியில் அடக்கம். மாணவர்களுக்கு, வயது முதிர்ந்தவர்களுக்கு (60 வயதிற்கு மேற்பட்டவர்கள்), தேனிலவுத் தம்பதியருக்கு என்று விசேஷக் கட்டணச் சலுகைகளும் உண்டு. NRI என்று கூறப்படும் அயல் நாட்டில் வசிக்கும் இந்தியக் குடிமகனுக்கு 50% தள்ளுபடியும் அளிக்கிறார்கள்.

"இதில் ஒரே ஒரு முட்டுக்கட்டை நம் தமிழக அரசு விதித்திருக்கும் ஹோட்டல்களுக்கான 20% சொகுசு வரிதான்" என்கிறார் செங்குட்டுவன். "டில்லியில் இவ்வரி அறவே இல்லை. அண்டை மாநிலங்களான கேரளத்திலும், கர்னாடகாவிலும் 10%தான். இதனால்தான் 'ரூம்' வாடகை ரூ. 90/தான் என்று முகமலர்ச்சியுடன் முன்வரும் மாணவன் ரூ. 120/— வரியாகக் கட்ட வேண்டுமென்று அறிந்தவுடன் 'சுண்டைக்காய் கால் பணம், சுமை கூலி முக்கால் பணமா?' என்று முகஞ்சுளித்து ஒதுங்கி விடுகிறான். சுற்றுலாவை வளர்க்க நினைக்கும் தமிழக அரசு ஆவன செய்யுமா?" என்று கேட்கிறார். வாரம் இருமுறை உள்ள தென்னகச் சுற்றுலாக்களைத் தவிர இந்தியாவின் எல்லா முக்கிய நகரங்களுக்கும் அவரவர் 'பட்ஜெட்'படி பயண ஏற்பாடுகளைச் செய்து தருகிறார்கள். பெரும்பாலும் இந்தப் பயணங்களை மேற்கொள்பவர்கள் மத்திய வர்க்கத்தினர்தாம் என்கிறார். மேலை நாடுகளில் உள்ளது போல இங்கும் 'ஹாலிடே கிளப்' போன்ற அமைப்புகள் தோன்றி அடிக்கடி கூட்டங்கள் நடத்தி விடுமுறை

அன்றும் இன்றும் - 1

# அரைக்கில் அன்றே சந்தனம் கமழும்!
# சேமிப்பினால் அன்றே வாழ்க்கை வளம் பெருகும்!

இவரது குடும்பத்துடன் ஐம்பது வருடங்களுக்கும் மேலாகத் தொடர்பு கொண்டுள்ளது சிட்டி யூனியன் வங்கி.

இவர்களது ஆரம்ப கால கஷ்டநஷ்டங்களிலும் தற்போதைய பாதுகாப்பான வாழ்க்கையிலும் பங்கு கொண்டு பரிவன்புடன் உதவியும் வருகிறது எங்களது வங்கி.

பல்வேறு சேமிப்புத் திட்டங்களால் உங்களுக்கு வாழ்நாள் முழுவதும் பல வகையிலும் பாதுகாப்பு அளிக்கிறது சிட்டி யூனியன் வங்கி.

தேர்ந்தெடுக்கப் பல திட்டங்கள்:

- சேமிப்புக் கணக்கு
- மாதாந்திர சேமிப்புத் திட்டங்கள்
- ரொக்கப் பத்திரங்கள்
- வாமன விஸ்வரூப வைப்புத் தொகை
- கால வரை வைப்புத் தொகை
- வெளிநாட்டில் வாழ்வோர் சேமிப்புக் கணக்கு

***நாடுவீர் எம்மை—***
***பெறுவீர் நன்மை!***




**CUB**

சிட்டி யூனியன் பாங்க் லிட்...

பதிவு அலுவலகம்: கும்பகோணம்–612 001.

**CUB—உங்கள் வளர்ச்சிக்கேற்ற வங்கி.**

MCS/CUB/303

# நெஸ்டம் பேபி ஸிரியல.
# ஆரம்பத்திற்கு பொருத்தமானது.
# வளர்ச்சிக்கு உன்னதமானது.

**நெஸ்டமும் பாலும்—முழுமையான போஷாக்கு உணவு.**

உங்கள் குழந்தைக்கு நான்கு மாதங்களாகும்பொழுது அவனுக்கு பாலுடன் திட உணவும் தேவை. அவனுடைய ஜீரணத்திற்கு உகந்த நெஸ்டம் கொடுங்கள்.

நெஸ்டத்தை கொதிக்க வைத்த வெதுவெதுப்பான பாலில் கலக்குங்கள். முழுமையான போஷாக்கு உணவு தயார். இது குழந்தை ஆரோக்கியமாக துறுதுறுவென்று வளர உதவுகிறது.

**நெஸ்டம் குழந்தை உணவு பலவித சுவைகளில்**

உங்கள் குழந்தை வளர வளர அவனுக்கு புதிய சுவைகளை அறிமுகப்படுத்துங்கள். உதாரணமாக, மசிய வைத்த காய்கறிகள், வேக வைத்த பழங்கள் மற்றும் பருப்பு வகைகள் முதலியன. இது அவன் விரைவில் பெரியவர்களுடன் உணவை பகிர்ந்துகொள்ள உதவும்.

## நெஸ்டம்® ரைஸ்

இரும்புச்சத்து மற்றும் வைட்டமின்கள் அடங்கியது. பாலுடன் கலக்கவும்.






வசதிகள் பற்றிய விவரங்களை எடுத்துக் கூறி அது பற்றிய கருத்தரங்கங்களை நடத்தினால் அது பொது மக்களிடையே ஒரு விழிப்புணர்வைத் தோற்றுவிக்கும் என்பது இவரது ஆலோசனை.

இந்தியச் சுற்றுலாக் கழகப் பயணங்களின் மற்றொரு சிறப்பம்சம் கூடவே வந்து உறுதுணை புரியும் இவர்களுடைய வழித்துணைகள். இத் துறையில் ஒன்பதாண்டுகள் அனுபவமுள்ள ஆனந்தி ராமச்சந்திரன் கூறுகிறார் —

''பலதரப்பட்ட மக்களோடு பயணம் செய்து அவர்கள் தேவைகளைக் கவனித்து, குறைகளைச் சமாளிப்பது ஒரு சுவையான அனுபவமே. இடையில் வரும் தடங்கல்களை வெற்றி கொள்ள மன உறுதியும் தேவை. சில நாட்கள் ஒன்றாகப் பயணித்தவர்கள் இறுதியில் பிரியும் போது ஏற்படுகிறதே ஒரு பாசப் பிணைப்பு அதுதான் இப் பணியின் பெரிய பரிசு'' என்கிறார் இவர். இவரைப் போலவே பயணங்களில் ஆர்வம், பலவித மக்களைச் சந்தித்துப் பழகும் பாங்கு, நம் நாட்டுக் கலாசாரத்தை நன்கறிந்து கொண்டு அதை மற்றவர்களுக்கு விளக்கிச் சொல்லும் நேர்த்தி, ஏதாவது ஒரு அயல்நாட்டு மொழியில் தேர்ச்சி — இவை எல்லாம் பெற்றவர்களுக்கு இத் துறையில் வாய்ப்புகள் காத்திருக்கின்றன.

பக்திப் பாரம்பரியத்திலேயே பல்லாண்டுகளாக ஊறி வந்துள்ள நாம், உல்லாசப் பயணங்களை வீண் செலவாகக் கருதினாலுங் கூட ஆலய தரிசனங் காணச் செல்லும் புனிதப் பயணங்களை வாழ்வின் ஒரு பகுதியாகவே கருதுகிறோம்.

''குருவாயூர் போக வேண்டுமென்று கொள்ளை ஆசை எனக்கு. அதனால் மகனுக்கு அங்கே 'அன்னப்பிராசனம்' செய்ய வேண்டும்னு வேண்டிக் கொண்டேன். பிரார்த்தனை என்றால் மாமியார் கூட 'அப்ஜெக்ட்' பண்ணத் தயங்குவாரே'' என்று குறும்புச் சிரிப்புடன் கூறுவாள் என் தோழி. ஆம்! காசியில் விசாலாக்ஷியாக, காஞ்சியில் காமாக்ஷியாக, கன்னடத்துக் கொல்லூரில் மூகாம்பிகையாக ஒரே பரம்பொருளை வேறு வேறு வடிவங்களில், வண்ண அலங்காரங்களில் கண்டு மகிழ்வதில்தான் நமக்கு எத்தனை திருப்தி!

''மக்களின் இந்த ஆவலைப் பூர்த்தி செய்வதுதான் எங்கள் நோக்கம்'' என்கிறார் டில்லி திரு. கே. ஆர். சங்கரன் புனிதப் பயணக் குழுவின் சென்னை பொறுப்பாளர் திரு. வராகன். ''1968 முதல் டில்லி பஜனை சமாஜத்திற்காக இப் பயண ஏற்பாடுகளைக் கவனித்துக் கொண்டிருந்த சங்கரன் 1978 முதல் தானே முழுப் பொறுப்பையும் ஏற்று நடத்துகிறார். முக்திநாத், பத்ரி நாத், கேதார் நாத், கங்கோத்ரி, யமுனோத்ரி, அமர்நாத், பசுபதி நாத் போன்ற தலங்களுக்கு ஆண்டு தோறும் நூற்றுக்கு மேற்பட்ட யாத்திரிகர்களை அழைத்துச் செல்கிறார்கள். தானே தனிக் கவனம் செலுத்துவதால் குடும்பத்துப் பெரியவர்களுக்கு அனுசரணையாக வைதீகக் காரியங்களை முடித்துத் தருகிறார்கள். இவர்களது குழுவின் மற்றொரு சிறப்பம்சம் — கூடவே கைதேர்ந்த சமையற்கலை வல்லுநர்களை அழைத்துச் சென்று எங்கும் உணவுப் பிரச்னை தலைதூக்காமல் பார்த்துக் கொள்வது.

முன்பின் அறிமுகமில்லாத அன்னியக் குடும்பங்களுடன் பழகி, புது நட்புகளைத் துவக்கிக் கொண்டு, புது உறவுகளை நிலை நிறுத்திக் கொண்டு எண்ணங்களின் பரிமாற்றமே இன்பமாகப் பயணிப்பது ஒரு வகை. ''நான், என் குடும்பம், என் சுற்றம் அதுவே என் உலகம் என்று கருதுபவர்கள் இன்னொரு வகை. இவர்களின் விடுமுறை

* கேரளாவில் பூரம் பண்டிகை





* மதுரை கோயில்

வசதிக்காகக் கார்களை மகாபலிபுரத்துக்கு ரூ.350, திருப்பதிக்கு ரூ. 650 என்ற கட்டண விகிதத்திலே மதுரை போன்ற வெளியூர்ப் பயணங்களுக்கு கிலோ மீட்டருக்கு ரூ. 1.90—ம், ஒட்டுநருக்கு ரூ. 30, இரவு தங்க ரூ. 30 என்ற கட்டணத்திற்கு வாடகைக்குத் தருகிறார்கள். இத்துறையில் இருப்பவர்களின் ஒருமித்த குறை இதுதான் —

''நம் மாநிலத்தில் ஏழு இருக்கைகளுக்கு மேல் இருக்கை வசதி கொண்ட கார்களுக்கு அனுமதிச் சீட்டு மறுக்கப்படுகிறது. 12, 17 பேரை ஏற்றிச் செல்லும் ஆல்வின் நிஸான் போன்ற வண்டிகள் சந்தையிலே வந்திருக்கையில் அவை அதிகம் பேராக விடுமுறை செல்ல எண்ணும் குடும்பத்தினருக்கு வசதியாக இருக்கும். இப்போது அடுக்கு மாடிக் குடியிருப்புகள் அதிகமாகி விட்டதால் சேர்ந்து வசிக்கும் இரண்டு, மூன்று குடும்பத்தினர் ஒன்றாக வெளியூர் செல்வதை விரும்புகிறார்கள். இதற்காகப் பலர் ஆந்திராவில் தற்காலிக அனுமதிச் சீட்டு பெற்று விட்டு மூன்று மாதங்களுக்கொரு முறை அதைப் புதுப்பித்துக் கொள்கிறார்கள். சில நேரங்களில் நமது வழக்கமான 'சம்திங்'கும் வேலையை முடித்துக் கொடுக்கிறது. இதைத் தவிர்க்க மாநில அரசு வழி செய்தால் அது அரசுக்கு ஒரு வருமானத்தையும் அமைத்துக் கொடுக்கும்'' என்று இவர்கள் ஆலோசனை கூறுகிறார்கள்.

சரி, உள்ளூரெல்லாம் பார்த்து அலுத்து விட்டது. கடல் தாண்டிக் கண்ணைப் பதிக்கலாமே என்கிறீர்களா? 'அயல் நாட்டுப் பயணங்களுக்குத் தேவையான எல்லா ஏற்பாடுகளையும் கச்சிதமாக முடித்துத் தர நாங்கள் இருக்கிறோம்'' என்று முன் வருகிறார் 'சீதா டிராவல்ஸின்' சென்னைக் கிளை மேலாளர் திரு. வி. மகாதேவன். 1979—ஆம் ஆண்டிலிருந்து செயல்படும் இந்நிறுவனம் இன்று இந்தியா முழுவதும் பதினைந்து கிளைகளாகப் படர்ந்திருக்கிறது. ஆண்டு தோறும் சுமார் எழுநூற்றைம்பது இந்தியர்கள் இவர்களுடைய விடுமுறை வசதிகளைப் பயன்படுத்திக் கொண்டு கிழக்கே சிங்கப்பூர், தாய்லாந்து என்று மேற்கே ஜெர்மனி, இத்தாலி என்று கண்டுகளித்துத் திரும்புகிறார்கள். இவர்கள் பயணக் குழுவுடன் அயல்நாட்டு அனுபவம் கண்ட திருமதி ஜெயஸ்ரீ மித்தல் கூறுகிறார்:

'பாஸ்போர்ட், விசா ஆகிய எல்லாத் துவக்கப் பிரச்னைகளையும் இவர்களே கவனித்துக் கொண்டு விடுகிறார்கள். முற்றிலும் புதிய ஊர்களுக்குப் போய் எங்கே செல்வது என்ன செய்வது என்று 'திரு திரு'வென விழித்துக் கொண்டு நிற்க வேண்டாம். இவர்களே பாங்காக் என்றால் ரோஸ் கார்டன், மணிலா என்றால் பாங்சென் நீர்வீழ்ச்சி, சிங்கப்பூர் என்றால் சந்தோஷா தீவு என்று திட்டமிட்டு அழைத்துச் சென்று விடுகிறார்கள். எங்கே பொருட்கள் மலிவாகக் கிடைக்கும் என்று யோசனையும் கூறுகிறார்கள். மொத்தத்தில் மலைப்பாகத் தெரியும் அயல் நாட்டுப் பயணம் மனநிறைவு தரும் அனுபவமாக மாற்றித் தரப்படுகிறது.'

வீட்டின் அன்றாட அலுவல்களிலிருந்து விடுபட்டுவித்தியாசமான அனுபவங்களைப் பெற வேண்டும் என்ற விழிப்புணர்வின் பலனாக விடுமுறை உலகுக்குக் கிட்டியிருக்கும் மற்றொரு புது அறிமுகம் — ஸ்டெர்லிங் ரிசார்ட்ஸ், டால்மியா ரிசார்ட்ஸ் ஆகியோர் கொண்டு வந்திருக்கும் ''காலப் பங்கீடு'' முறை.

ஸ்டெர்லிங் நிறுவனத்தின் விற்பனைப் பிரிவு அதிகாரி திரு. ஜே. ஆர். கே. ராவ் கூறுகிறார்: ''சர்வதேச அரங்கில் சுமார் 25 வருடங்களுக்கு மேலாகப் பிரபலமாக இருந்து வரும் முறையை இந்தியாவுக்கு நாங்கள் கொண்டு வந்தது 1986 — இல். ஐந்து நட்சத்திர ஓட்டல் வசதிகளை மத்திய தரத்தவரும் அனுபவிக்குமாறு செய்ய வேண்டியதுதான் எங்கள் நோக்கம். விரும்பும் அறைகளின் இடப் பரப்புக்கேற்ப சுமார் 15,000 ரூபாய் முதல் 33,000 வரை எங்களிடம் முதலீடு செய்து விட்டால் வருடத்தில் ஒரு வாரம் எங்கள் விடுமுறை மாளிகை

கள் அவருக்குச் சொந்தமாகிறது. அவரால் வர இயலவில்லை என்றால் வேறு யாருக்காவது அன்பளிப்பாகவோ, வாடகைக்கோ அளிக்கலாம். தனக்குப் பிறகு இன்னாருக்கு என்று எழுதி வைக்கும் உரிமையும் அவருக்குண்டு. தற்போது ஊட்டி, கொடைக்கானல், ஸ்ரீநகர், கோவா, லோனாவ்லா போன்ற இடங்களில் இவ்விடுமுறை மாளிகைகளையோ, அல்லது அதற்குத் தக்க ஹோட்டல் வசதிகளையோ ஏற்பாடு செய்திருக்கும் நாங்கள் ஒரு வருடத்துக்கு ஒன்று அல்லது இரண்டு கூடுதல் இடங்களைச் சேர்த்துக் கொண்டு 10 வருடங்களில் சுமார் 20 விடுமுறை வாசஸ்தலங்களை எங்களை முதலீட்டாளர்களுக்கு அளிப்பதற்குத் திட்டங்கள் வைத்திருக்கிறோம்."

"இத்திட்டம் ஒரு லாபகரமான முதலீடு" என்பது பல் மருத்துவர் ஜெயக்குமார் அவர்களின் கருத்து. "இரண்டு வருடங்களுக்கு முன்னால் 25,000 ரூபாய்க்கு நான் பெற்றுக் கொண்ட இடத்தின் இன்றைய மதிப்பு சுமார் 50,000. ஊட்டி, கொடைக்கானல் போன்ற இடங்களில் வருடத்துக்கொருமுறை செல்ல என்று பங்களாக்களை வாங்கினால் மற்ற நேரங்களில் அதைப் பராமரிப்பது யார்? ஆகும் செலவு என்ன? ஆனால் இங்கோ செல்லுமிடங்களில் அடுப்பு, பாத்திரங்கள், குளிர்பதனப் பெட்டி எல்லாம் உள்ள சிறிய சமையலறையும் உள்ளதால் போக்குவரத்துச் செலவோடு மளிகைச் செலவுடன் விடுமுறையை முடித்துக் கொண்டு விடலாம். நாம் முதலில் கட்டும் தொகையைச் சாமர்த்தியமாக முதலீடு செய்து அதன் வருவாயிலேயே இவ்விடங்களைப் பராமரிக்கிறார்கள். மேலும் ஒரு குறிப்பிட்ட வாரத்துக்காகப் பெருந்தொகையைக் கட்டியிருக்கிறோம் என்ற உணர்வே, நம்மை அலுவல்களையெல்லாம் கொஞ்சம் ஒதுக்கி வைத்துவிட்டுக் "கட்டாய ஓய்வு" எடுத்துக் கொள்ளத் தூண்டுகிறது."

ஆகவே, இப்படிப் பற்பல விடுமுறை வசதிகள் 'வா; வா' என்று அழைக்க, விடுமுறையும் வாழ்வின் ஒரு முக்கியமான அங்கம் தான் என்று நிரூபித்...... என்ன ஆளைக் காணோம்? கட்டுங்க மூட்டையை, கிளம்புங்க ரேர் என்று புறப்பட்டு விட்டீர்களா? பலே! பலே! ஜமாயுங்கள். Have a happy holiday!

— நிர்மலா சக்கரவர்த்தி.

துணி உலர்த்துவதற்கு இடம் சரியாக இல்லா விட்டால் இரண்டு கம்பிகளை இணையாக கட்டி நடுவில் துணியை கிளிப் போட்டு உலர்த்தினால் நிறைய துணிகளை உலர்த்தலாம்.

— ஜெயஸ்ரீ.

# என்னாலான உதவி

## ராஜி சுப்ரமணியம்

சமையலறை திமிலோகப்பட்டது. காரணம், என் நண்பன் சோமாஸூம் (சோம சுந்தரம்) அவன் மனைவி லதாவும் இன்று எங்கள் வீட்டிற்குச் சாப்பிட வருவதாகக் கூறியிருந்தனர். சோமாஸ் ஒரு சாப்பாட்டுப் பிரியன் என்று என் மனைவியிடம் சொல்லியிருந்தேன். அவள் தன் திறமையை எல்லாம் சமையலில் காண்பித்துக் கொண்டிருந்தாள்.

திடீரென்று வீடு முழுவதும் இருட்டாகியது போல் தோன்றியது. திரும்பிப் பார்த்தால்.......! வாசலை அடைத்துக் கொண்டு மனைவியுடன் சோமாஸ் நின்றிருந்தான். ஈர்க்குச்சியை இஸ்திரி பண்ணியது போன்ற உடல்வாகுடன் சோமாஸும் லதா என்ற தன் பெயருக்கு நேர் விரோதமான பூமி உருண்டை போல் காட்சியளித்த அவன் மனைவியும் அடுத்தடுத்து நடந்து வந்தது 10 என்ற எண் உயிர் பெற்று நடந்து வருவது போலிருந்தது.

''அடே பழி! எப்படி இருக்கே'' என்று தன் ஒல்லிக் கையால் 'சுளீ'ரென்று என் முதுகில் ஒரு அடி வைத்தான் சோமாஸ்.

பயலுக்குச் சாப்பாடு பூராவும் எலும்புக்குள்தான் சங்கமம் ஆகிறது போலிருக்கிறது என்று மனத்திற்குள் சபித்த வண்ணம்,

''அடியே அவர்கள் இருவரும் வந்தாச்சு இங்கே வா,'' என்று குரல் கொடுத்தேன்.

''வாங்க.... வாங்க'', — வரவேற்றாள் மனைவி.

''எதை வாங்கச் சொல்றீங்க'' — அசட்டு ஜோக் ஒன்றை உதிர்த்தபடி உள்ளே வந்த சோமாஸ், ''லதுக்குட்டி, இவன்தான் என் பிரண்ட் ரமணி, இதுதான் அவனோட மிஸஸ்'' — மனைவியைக் கொஞ்சியபடி எங்களை அறிமுகப்படுத்தினான்.

ஹாலில் போட்டிருந்த புதிய சோபாவில் இருவரும் அமர்ந்தனர். அந்த வேகத்தில் அரையடி ஆழம் உள்ளே போன சோபா வேதனை தாங்காமல் ''கிரீச்'', என்று முனகியது.

எங்கள் மூவருக்கும் காப்பி கொடுத்த பின் 'மீதி' சமையலை கவனிக்க உள்ளே சென்று விட்டாள் என் மனைவி.

என்னிடம் 'பத்து நிமிடங்கள் (அதில் ஒன்பதே முக்கால் நிமிடம் மனைவி புராணம்தான்) பேசிய பின் நான் இருப்பதை அறவே மறந்தவனாய் தன் மனைவியை விழுங்கி விடுவது போல் பார்த்து (முடியுமா) கொஞ்சலாகப் பேசத் துவங்கினான், சோமாஸ். மலரும் நினைவுகள் நிகழ்ச்சி போல் ஹனிமூனுக்கு ஊட்டிக்குப் போய் குளிரில், ஒரே ஐஸ்கிரீமை இருவரும் சாப்பிட வேண்டும் என்று ஆசைப்பட்டு வாங்கி வெடவெடத்தது முதல் சென்ற வாரம் உடுப்பி ஹோட்டலில் சாம்பாரைத் தவறி மேலே கொட்டிக் கொண்டது வரை அளந்து கொண்டிருந்தான். அவனது சட்டை பட்டனைத் திருகியபடி நாணத்தோடு பதிலுக்குக் கொஞ்சினாள் லதா. கதவிடுக்கில் அகப்பட்ட எலி போல் அவள் குரல் நாராசமாக இருந்தது. ''கல்யாணமாகி ஐந்து வருடங்கள் ஆகின்றன. புதுமணத் தம்பதிகள் போல் என்ன கொஞ்சலும் குலவலும் வேண்டிக்கிடக்கிறது'' — என் மனக் கண் முன் வெறுப்பில் பல்லைக் கடித்தபடி தோளில் முகவாயை இடித்தபடி என் மனைவியின் முகம் தோன்றியது.

திடீரென்று துள்ளி எழுந்தாள் லதா. இந்த அதிர்ச்சியை சோபாவால் தாங்க இயலவில்லை. இவள் எழுந்த வேகத்தில் சோபா நிமிர்ந்ததில் சோமாஸ் ஒரு அடி தள்ளிப் போய்ச் சாய்ந்தான். சமாளித்துக் கொண்டு நிமிர்ந்தான்.

மனைவியைக் காதலுடன் பார்த்து, ''என்ன லதா?'' என்றான்.

''பாவம்! அக்கா தனியே செய்கிறார்கள். நானும் கூடப் போய் அவங்களுக்கு ஹெல்ப் பண்ணறேன்'' — லதாவுக்குத் திடீரென்று ஞானோதயம் வந்தது.

''ஹி... ஹி.... அவ எப்பவுமே இப்படித்தான். ஒரு நிமிஷம் கூட அவளால் சும்மா இருக்க முடியாது. 'பரபர' என்று தேனீ மாதிரி சுறுசுறுப்பா இருக்கத்தான் அவளுக்குப் பிடிக்கும்'' — மனைவியைச் சிலாகித்தான் சோமாஸ்.

''என்னக்கா நீங்க? எல்லாவற்றையும் தனியே இழுத்துப் போட்டு செய்கிறீர்களே. நானும் ஏதாவது ஹெல்ப் செய்கிறேனே. என்ன செய்யணும் சொல்லுங்கோ'' வன் குரலில் கேட்டாள் லதா.

''கூட்டுக்குத் தேங்காய் போட்டுக் கொதிக்க விடணும். எல்லாவற்றுக்கும் தாளித்துக் கொட்ட வேண்டும். பாயசத்துக்கு ஏலக்காய் பொடிக்க வேண்டும். அவ்வளவுதான். மற்ற எல்லா வேலையும் முடிந்து விட்டன. நான் பார்த்துக் கொள்கிறேன்,'' — பெருமையுடன் என் மனைவி சொன்னாள்.

''இல்லை அக்கா. அந்த ஏலக்காயைப் பொடித்தாவது தருகிறேன்.''

''சரி உன் ஆசையைக் கெடுப்பானேன். அந்த அலமாரியில் மேல் தட்டில் இருக்கிறது பார்'' — சுட்டிக் காட்டினாள் என் மனைவி.

லதா அதைக் கவனிக்காமலே, ''எந்த

அலமாரி'' என்றாள்.

''அடுப்பு மேடைக்கு இடது பக்கம் இருக்கிற அலமாரியில் பார்.

''என்ன டப்பா?''

''அந்தச் சின்ன பச்சை பிளாஸ்டிக் டப்பா.''

''எந்தப் பச்சை?''

என் மனைவியின் எரிச்சலின் டிகிரி ஏறிக் கொண்டே போகிறது. அலமாரியிலிருக்கும் டப்பாக்களின் பெரும் பகுதி கீழேயும், மாற்றி மாற்றியும் ஒன்றின் மேல் ஒன்றாகவும் வைக்கப்பட்டு அந்த இடம் யுத்தகளம் போல் காட்சியளித்தது. ஒவ்வொரு டப்பாவாக இதுவா? இதுவா? என்று முகத்துக்கு நேரே நீட்டி நீட்டிக் கேட்டவாறு இருந்த உரையாடலின் விளைவுகள்: நான்கு தரம் தாளித்துக் கொட்டிய கடுகு தீய்ந்து போயிற்று; ஒரு தரம் முந்திரிப் பருப்பு கருகியது. கூட்டு அடிப் பிடித்து விட்டது. கடைசியில் பொறுக்க மாட்டாமல் ஏலக்காய் டப்பாவைத் தானே எடுத்துக் கொடுத்த பின்னும் கொஞ்சம் எலிக் குரலில் கேள்விக் கணைகள் தொடர்ந்தன:

''எத்தனை ஏலக்காய் அககா?

''எங்கே பொடிக்கணும் அக்கா

''கல் எங்கே இருக்கிறது அக்கா?''

(இத்தனை அக்கா சத்தம் கேட்டு முற்றத்தில் காக்கைகள் கூட்டம் வராதது அதிசயம் தான்)

கல்லை எடுக்க மேடையை நோக்கிப் புறப்பட்டாள் லதா.

சுவர் ஓரத்தில் சற்று முன் காய்ச்சி வைக்கப்பட்டிருந்த புத்துருக்கு நெய்த் தூக்கை புட்பால் மாதிரி ஒரு உதை விடவும் அந்தத் தூக்கு ஸ்பின்னிங் முறையில் சுழன்றாடி உருண்டு சுவர், கீழேயுள்ள பாத்திரங்கள் தண்ணீர்ப் பானைகள், தரை எல்லாவற்றிலும் நெய்யை 'ஸ்பிரே' செய்தவண்ணம் சென்று தொட்டி முற்றத்தில் போய்ச் 'சிவனே' என்று நின்றது. நல்ல காலம்! என் மனைவிக்கு நெற்றிக் கண்ணைக் கடவுள் கொடுக்கவில்லை.

''அடடா! நெய் கொட்டி விட்டதா ஸாரி அக்கா. ஏன் கீழே வைத்தீர்கள்? கையோடு எடுத்து வைத்திருந்தால் கொட்டியிருக்காதே. எதையும் உடனுக்குடன் செய்ய



பால் திரியப் போகிறது என்று சந்தேகமாய் இருந்தால் ஓர் எலுமிச்சம் பழமோ அல்லது ஒரு கரண்டி தயிரோ சேர்த்தால் நன்றாய் திரிந்து விடும். நன்கு வடி கட்டிய பிறகு நன்கு அழுத்தி பிசைந்து சர்க்கரைப் பொடி கலந்து சிறு சிறு பேடாக்களாகத் தட்டி, செர்ரித் துண்டோ அல்லது கிஸ்மிஸோ வைத்து அலங்கரியுங்கள். தயாராகி விட்டது வங்காளத்து சந்தேஷ்!

— மீனா.

ணும்'', என்று நீட்டி முழக்கியபடி அசால்டாகச் சொல்லி விட்டு முக்கி முனகி நாலு ஏலக்காயைப் பொடித்து எடுத்துக்கொண்டு, ''அக்கா இதைப் பாயசத்தில் போட்டு விடவா?'' — என்று கேட்டபடி பாயசத்துக்கு அருகில் வைத்திருந்த சாம்பாரில் போட்டுக் கரண்டியால் கிளற வேறு செய்து விட்டாள். (சோடா பாட்டில் கண்ணாடி போட்டே இந்த லட்சணம்).

சாப்பாடு பரிமாறும் போது சாம்பாரில் ஏலக்காய் வாசனை. கூட்டு அடிப்பிடித்த வாசனை. (என் மனைவி சமையலை எங்க அம்மாவே பாராட்டியிருக்கிறாள் என்னும் போது வேறே சர்டிபிகேட்டே தேவையில்லை)

சும்மா இருக்காமல் சோமாஸு, ''இருந்தாலும் எங்க லதா சமையல் மாதிரி வராது. கூட்டு அவ பண்ணினா தேவாமிருதம் மாதிரி இருக்கும்'' என்றான்.

''சும்மா இருங்க'' — லதா நாணத்துடன் சொன்னாள்.

இந்தக் குளிரிலும் எனக்கு உஷ்ணக் காற்று அடித்தது என்றால் அதற்குக் காரணம் என் மனைவியின் பார்வையைத் தவிர வேறு என்ன இருக்க முடியும்?

சோமாஸுவும் லதாவும் விடைபெற்றுக் கொண்டு போன போது என்னிடமிருந்த தைரியமும் விடைபெற்று விட்டது. ஏற்படப் போகும் புயல், சூறாவளி, பூகம்பம் போன்றவற்றை எண்ணி நானறிந்த சைவ, வைணவ, மற்றும் சகல தெய்வங்களையும் துணைக்கு அழைத்தேன். ''கடவுளை நம்பினோர் கைவிடப்படார்''. நான் கடவுளை நேரில் கண்டேன், தபால்காரர் வடிவத்தில்.

தன் பெயருக்கு வந்த கடிதத்தைப் பிரித்துப் படித்த என் மனைவி (போர் இரண்டு நிமிடம் ஒத்திப் போடப்பட்டிருந்தது). மகிழ்ச்சியால் பூரித்தாள். தன் கோபதாபங்களை மறந்து ''இதோ பார்த்தீர்களா? ''பெண் பூ'' பத்திரிகைக்கு நான் அனுப்பின சமையல் குறிப்புக்கு முதல் பரிசு கிடைத்திருக்கிறதாம். ஆசிரியரே எழுதியிருக்கிறார்'' என்றாள். எனக்கும் பெருமையாகத்தான் இருந்தது.

''ஆசிரியர் சார் என்னை எவ்வளவு பெரிய ஆபத்திலிருந்து காப்பாற்றி விட்டீர்கள்'' மானசிகமாக அவருக்கு நன்றி கூறினேன்.

# தங்க கவரிங் நகைகளுக்கு
# தன்னிகரற்ற பெயர் ''மேரி''

கண்ணைக் கவரும், அழகும், பொலிவும், தரமும் உத்திரவாதமும் உடைய உலகப் புகழ்பெற்ற 22ct ''மேரி'' தங்க கவரிங் நகைகளை வாங்கி அணிந்து மகிழுங்கள்!

நகைகளின் நம்பர்களைக் குறிப்பிட்டு எழுதினால் வி.பி.பி. மூலம் நகைகள் அனுப்பப்படும். வி.பி.பி. சார்ஜ் தனி. இலவச கேட்லாக்கைப் பெற எழுதுங்கள்!




## மேரி கோல்டு கவரிங் ஒர்க்ஸ்

தபால்பெட்டி : 1405, 14, ரங்கநாதன் தெரு,
தி. நகர், சென்னை-600017.

வீட்டிலிருந்தே சம்பாதிக்கலாமே – 2

# சுலபமாய்ச் செய்யலாம் ஸ்கிரீன் பிரிண்டிங்

**நா**ம் அன்றாடம் புழங்கும் பலவித ரெடிமேட் பண்டங்கள் அடைக்கப்பட்டிருக்கும் பிளாஸ்டிக் கன்டெய்னர்கள், சிறிய பிளாஸ்டிக் சிமிழ்கள், பாட்டில்கள் இவற்றின் மீது அக்கம்பெனியின் பெயரும் இதர விவரங்களும் பெயிண்டினால் அச்சடிக்கப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். ஆம், அது என்ன பொருள், என்ன கம்பெனி என்பதை அறிய மட்டுமே பார்க்கிறோம். இன்னும் கொஞ்சம் பார்வையையும், சிந்தையையும் கூர்மையாக்கிப் பார்த்தால், இப்பெயர்களை அந்த டப்பாவின் மீது எப்படி பிரிண்ட் செய்தார்கள் என்ற ஆராய்ச்சியும், ஆர்வமும் ஏற்படும். இதன் ப்ய்னை அனுபவிக்கும் அளவிற்கு இது எவ்வாறு செய்யப்படுகிறது என்பதை நாம் அறியவில்லை. ''இது ஒரு எளிய லாபம் தரும் தொழில் மட்டுமல்ல, இருக்கும் இடத்திலேயே எந்த இல்லத்தரசியும் செய்யலாம்'' என்று உற்சாகமாகக் குரல் கொடுக்கிறார் 'ஃபைவ் ஸ்டார் இண்டஸ்ட்ரீஸ்' என்னும் நிறுவனத்தை (வீட்டிலேயே) நடத்தும் திருமதி அன்னபூரணி பத்மநாபன்.

சுறுசுறுப்பாக இயங்கும் இவரது தொழிலகத்தைப் பார்வையிட்டுக் கொண்டே கேள்விகளைக் கேட்டேன். சில பெண்கள் தயாரிக்கப்பட்ட குப்பிகள், மூடிகள், இன்னர்கள் (பிளாஸ்டிக் கிண்ணம் போன்ற பாகம்) இவைகளை பிளேடினால் விளிம்புகளைச் சீராக்கிக் கொண்டிருக்க, ஒருவர் கன்டெய்னர்களிலும், மற்றொருவர் பிளாஸ்டிக் மூடிகளின் மீதும் ஸ்கிரீன் பிரிண்ட் செய்து கொண்டிருந்தார்கள்.

**ஸ்கிரீன் பிரிண்ட் என்பது என்ன?**

''சமதளமான துணி, அல்லது காகிதங்களில் சாதாரண அச்சு மெஷின்களால் பிரிண்ட் செய்து விட முடியும். ஆனால் வளைவான, பல வடிவங்களுள்ள பொருட்களின் மீது இத்தகைய அச்சு மெஷின்களால் பிரிண்ட் செய்ய முடியாது. இதற்கு ஒரே வழி ஸ்கிரீன் பிரிண்ட்தான். கன்டெய்னர்கள், விசிட்டிங் கார்டுகள், டின் ஷீட்கள், ஸ்டிக்கர்கள், வாழ்த்து அட்டைகள், பால் பென் இப்படிப் பலவற்றின் மீது ஸ்கிரீன் பிரிண்ட் செய்ய முடியும். குறைந்த எண்ணிக்கையில் செய்ய முடியும் என்பதோடு தயாரிக்கும் செலவும் குறைவு என்பது குறிப்பிடத்தக்கது.''



**நீங்கள் எப்படி ஸ்கிரீன் பிரிண்டிங் செய்யத் துவங்கினீர்கள்? இதற்கெனத் தனிப் பயிற்சி மேற்கொண்டீர்களா?**

''நான் இதைத் துவங்கியதே சுவையான விஷயம். என் கணவர் நீண்ட நாட்களாகவே பிளாஸ்டிக் தொழிற்சாலை ஒன்றைத் துவங்க வேண்டும் என்று ஆசைப்பட்டு மிகச் சிறிய அளவில் பிளாஸ்டிக் மூடிகளைத் தயாரிக்கும் பணியைத் துவக்கினார். மூடிகளைக் கம்பெனிகளுக்குக் கொடுத்த போது அவர்கள் கன்டெய்னர்கள் தயாரிக்க முடியுமா என்று கேட்க, கன்டெய்னர்களையும் தயாரிக்கத் துவங்கினோம். பிறகு பல கம்பெனிகள் அவற்றின் மீது தங்கள் கம்பெனி பெயர், மற்ற விவரங்களையும் பிரிண்ட் செய்து தருமாறு கேட்க நாங்களே ஸ்கிரீன் பிரிண்டிங்கும் ஆரம்பித்து விட்டோம். இப்போது ஸ்கிரீன் பிரிண்டிங்கை நான்தான் கவனிக்கிறேன். இதற்கென தமிழ்நாட்டில் பல இடங்களில் பயிற்சி நிறுவனங்கள் உள்ளன. இரண்டு மாதப் பயிற்சி போதும். நான் அனுபவ பூர்வமாகத்தான் கற்றேன். பயிற்சி ஏதும் பெறவில்லை.''



**ஸ்கிரீன் பிரிண்ட் எவ்வாறு செய்யப்படுகிறது என்பதை விளக்குங்களேன்?**

''ஒருவர் விசிட்டிங் கார்ட் ஒன்றைக் கொடுத்து பிரிண்ட் செய்யச் சொல்வதாக வைத்துக்கொள்வோம். முதலில் அதே மாதிரி ஒன்றை வரைபடமாகத் தயார் செய்வோம். இதற்கு ஆர்ட் வொர்க் என்று பெயர். இதைத் தனியாக செய்து தர ஓவியர்களும் இருக்கிறார்கள். பிறகு பிரத்தியேகஸ்டுடியோ ஒன்றில் இந்த மாதிரி கார்டின் நெகடிவ், பாஸிடிவ்களை ஃபிலிமில் தயாரிக்கச் சொல்வோம். அடுத்து ஒரு சதுரமான மர ஃபிரேமில் நைலான் மெஷ்ஷை இழுத்து ஒட்டி, அதன் மத்தியில் விசேஷ ஃபிலிம் ஒன்றை வைத்து, துணியின் அடியில் இரசாயனப் பொருள் ஒன்றைத் தடவினால் இந்த பிலிம் ஒட்டிக் கொண்டுவிடும். (இதை இருட்டறையில் செய்ய வேண்டும்.) பத்து நிமிடங்களில் காய்ந்துவிடும். பிறகு இதன் மீது பாஸிடிவ்வை வைத்து நல்ல சூரிய ஒளியில் இரண்டு நிமிடம் காட்டிவிட்டு எடுத்து வந்து விட வேண்டும். பிறகு குரோம் பிலிமை உரித்தால் நைலான் துணியில் பாஸிடிவ் உள்ள எழுத்துக்கள் பிரிண்டாகி இருக்கும். இதற்கு ஸ்கிரீன் என்று பெயர். இது தயாராகி விட்டால் பிறகு எவ்வளவு கார்டுகளில் வேண்டுமானாலும் பிரிண்டிங் இங்க், ஸ்க்வீஜ் இவைகளைப் பயன்படுத்தி பிரிண்ட் போட்டு விடலாம்.''

**நீங்கள் ஸ்கிரீன் பிரிண்ட் செய்யப் பல விதப் பொருட்களைக் குறிப்பிட்டீர்களே? இவைகளை எங்கே, எப்படி வாங்குகிறீர்கள்?**

''நுட்பமான பிரிண்டானால் மிக உயர்ந்த நைலான் மெஷ் முதல் சாதாரண பிரிண்டானால் சுமாரான மெஷ் வரை பலவகை



உண்டு. அதேபோல இங்க்கிலும் பலவகை, பல தரம். ஆனால் நாம் எத்தகைய பொருள் மீது என்ன மாதிரியான பிரிண்ட் செய்ய விரும்புகிறோம் என்று சொன்னால் போதும் செட்டாக எடுத்துக் கொடுக்கும் கடைகள் கோடம்பாக்கம், திருவல்லிக் கேணி பகுதிகளில் உள்ளன. அங்குதான் வாங்குகிறோம்.''

**இத்தொழிலை எப்போது ஆரம்பித்தீர்கள்? ஆரம்ப நிலையில் தொழில் எப்படி இருந்தது?**

''ஸ்கிரீன் பிரிண்டிங்கை நான்கு வருடங்களாகச் செய்கிறேன். நான் முன்பே குறிப்பிட்டது போல் என் கணவர் தயாரித்த கன்டெய்னர்களுக்கு பிரிண்ட் போட்டாலும் முதலில் வந்த ஆர்டர் 'காஸ்டிரோ' என்னும் ஆயுர்வேதசூர்ணம்தயாரிப்பவர்களுடையது தான். பிறகு பாண்ட்ஸ் ஸ்நோ குப்பிகளுக்கு பிரிண்ட் போட்டேன். ஆரம்பத்தில் மூலப் பொருட்கள் மற்றும்தேவையான கருவிகளுக் காக ரூ. 5000/— முதலீடு செய்தேன். இதற்கு வங்கிகள் கடன் கொடுக்கின்றன. ஆயினும் நான் வங்கயில் கடன் வாங்கவில்லை.

**உங்களுக்கு ஆர்டர்கள் எப்படிக் கிடைக்கின்றன? எப்படிப் பொருட்களை டெலிவரி செய்கிறீர்கள்?**

தெரிந்தவர்கள், உறவினர்கள், நண்பர்கள் மூலம் ஆர்டர்கள் வரும். சில சமயம் ஒரு கம்பெனி மூலம் அடுத்த கம்பெனிகளுக்குப் பரவி, அப்படியும் ஆர்டர் வரும். நானாகவே இதுவரை நேரடியாகச் சென்று ஆர்டர் பிடித்ததில்லை., உள்ளூர் ஆர்டர்கள் என்றால், என் பிள்ளை நேரில் சப்ளை செய்து விடுவான். வெளியூர் என்றால், ஒவ்வொரு சனிக்கிழமையும் வேன் அமர்த்தி அனுப்பி விடுவேன்.''

**இத்தொழிலுக்கு உங்கள் குடும்பத்தினர் ஒத்துழைப்பு எப்படி?**

''என் கணவர் முதலில் பிளாஸ்டிக் தொழில் துவங்கிய போது குடும்ப உறுப்பினர்களே அதில் ஈடுபட்டோம். பிறகுதான் வெளி ஆட்களை அமர்த்தினோம். அதே போல் ஸ்கிரீன் பிரிண்ட் செய்வதிலும் என் பிள்ளை, பெண் உதவுகிறார்கள். நான் பிரிண்ட் செய்ய, என் பெண் எடுத்து வைக்க, என் பையன் துடைத்து வைப்பான். ஒருவரே மூன்றையும் செய்தால் இங்க் உலர்ந்து விடும். எனவே, மற்றவர் உதவி கட்டாயம் தேவை. தவிர ஆர்டர்கள் பெறுவது, பொருட்களை டெலிவரி செய்வது இவற்றிலும்இவர்கள்உதவுகிறார்கள்.காலை 8.30 முதல் மாலை 5.30 வரை வேலை நேரம். இடைப்பட்ட நேரத்தில் அவ்வப் போது வீட்டையும் கவனிப்பேன்., காலை எட்டரைக்குள் சமையல் வேலை முடிந்து விடும். மாலை ஐந்தரைக்கு மேல் இரவு சமையல் வேலை துவங்குவேன். இதனால் என் அன்றாட வீட்டு வேலைகள் பாதிக்கப் படுவதில்லை. பிள்ளை, பெண் எல்லோரும் பெரியவர்களாகி விட்டதால், பிரச்னை இல்லை.''

**தங்கள் தொழில் தற்போது அபிவிருத்தி அடைந்திருக்கிறதா? லாப வாய்ப்பு எப்படி யிருக்கிறது?**

''தற்போது நன்கு வளர்ச்சியடைந்துள்ளது. கன்டெய்னர்களையும் செய்வதால் அதிலும், ஸ்கிரீன் பிரிண்டிலுமாக 15 பேர் வேலை செய்கிறார்கள். சென்ற வருடம் மின் கம்பியில் ஏற்பட்ட ஷார்ட் சர்க்யூட் காரணமாக ஒரு தீவிபத்தில் எனக்கு ஓரளவு நஷ்டம் ஏற்பட்டு விட்டது. எனவே தற்சமயம் வரும் லாபத்தை எல்லாம் மீண்டும் பொருட்கள், மர ட்ரே, பீரோ, டேபிள் முதலியவை வாங்கப் பயன்படுத்துகிறேன்.''

**இதேபோலத் தொழில் துவங்குபவர்களுக்குத் தொழில் வாய்ப்பு எப்படி?**

''பிளாஸ்டிக் யுகமான தற்காலத்தில் பிளாஸ்டிக் பொருட்கள் மீது பிரிண்ட் செய்ய ஸ்கிரீன் பிரிண்டிங்கிற்கு நல்ல வரவேற்பும் வாய்ப்பும் உள்ளது. இவ்வளவு ஏன், ஒரு மேஜை, லி க்ளேம்ப், ஒரு இல் இவற்றோடு ரூ. 500 மூலதனம் இருந்தால் போதும். விஸிடிங் கார்டு, திருமண அட்டை, வாழ்த்துக்கள், ஸ்டிக்கர்கள் என்று பலவிதப் பொருட்கள் மீது ஒற்றை ஆளாகவே ஸ்கிரீன் பிரிண்ட் செய்து தொழில் செய்யலாம். விரைவில் அபிவிருத்தியாகும் எளிய தொழில் இது. லாப வாய்ப்பும் உண்டு.''

**தங்கள் தொழிலில் பிரச்னை என்பது என்ன? தங்களைப் போலவே தொழில் செய்ய விரும்புகிறவர்களுக்குத் தங்களது ஆலோசனைகள் என்னென்ன?**

''பிரச்னை என்று பெரிதாக ஒன்றுமில்லை. சில சமயம் வாடிக்கையாளர்கள் பணம் தருவதில் கால தாமதம் ஏற்படலாம். அதேபோல மழைக் காலத்தில் ஸ்கிரீன் தயாரிக்கப் போதிய சூரிய ஒளி கிடைக்காது. இவை தவிர விடாமுயற்சி, தன்னம்பிக்கை, அயராத உழைப்பு இருந்தால் எவரும் இத்தொழிலில் முன்னேறி விடலாம். பயிற்சி நிலையங்களில் பயிற்சி பெறும் தொழிலைத் துவங்கலாம். விரும்புகிறவர்களுக்குத் தேவையான விவரங்களைக் கொடுக்க எப்போதும் நான் தயாராக இருக்கிறேன்.''

— லக்ஷ்மி சங்கர்

---

**காலையில் வைத்த சாம்பாரை மீண்டும் மாலையில் இட்லி, தோசை போன்ற டிபனுக்கு தொட்டுக் கொள்ள உபயோகப்படுத்தும் பொழுது சிறிது வெந்தயத்தையும் ஒரு டீஸ்பூன் கொத்தமல்லி விதையையும் வறுத்துப் பொடி செய்து போட்டால் ஓட்டல் சாம்பார் போல் நல்ல வாசனையாகவும் ருசியாகவும் இருக்கும்.**

— மீனா.

# இம்மாத இல்லத்தரசி



• சாந்தா



• ரமணி



• அகிலாண்டேஸ்வரி

**முதல் பரிசு:**

## மட்டர் பன்னீர்

தேவையான பொருட்கள்:

பச்சைப் பட்டாணி — 1 கப்,
பாலாடைக்கட்டி (வடிகட்டியது)—1 கப்,
பெரிய வெங்காயம் — 4,
பூண்டு பருப்புகள் — 4,
பச்சை இஞ்சி — 1 துண்டு,
பச்சை மிளகாய் — 2,
பெரிய தக்காளி — 2,
சமையல் எண்ணெய் — 1 தேக்கரண்டி,
மஞ்சள் பொடி,
தனியா பொடி,
(இரண்டும் தேவைக்கேற்ப),
உப்பு — தேவைக்கேற்ப,
கொத்துமல்லிக் கட்டு ஒன்று சிறியது.

செய்முறை:

பட்டாணியை பிரஷர் குக்கரில் வேக விடவும். அதன் மேல் ஒரு தட்டில் தக்காளியையும் வைத்தால் நன்றாக வெந்துவிடும் பட்டாணியை வடிகட்டி, தக்காளியையும் தோல் நீக்கி நன்றாகக் குழைய மசித்துக் கொள்ளவும். மிக்ஸியில் வேண்டுமானால் ஓர் அடி அடிக்கலாம். இஞ்சி, பச்சை மிளகாய், பூண்டு, இவைகளையும் மிக்ஸியிலோ அல்லது அம்மியிலோ அரைத்துக் கொள்ளவும்.

பாலாடைக்கட்டியை வாணலியில் வதக்கிக் கொள்ளவும். அவை கட்டிகளாக பொன் னிறத்தில் உருவெடுக்கும். தக்காளி கலவையைப் போட்டு அதன்மேல் பட்டாணியை மிதக்கவிட்டு, பாலாடைக் கட்டி

• மீனா



• ஜெயசித்ரா



களை அங்கும் இங்கும் பரவலாகத் தூவி, மிதமான எண்ணெய் ஊற்றி இரண்டு கொதி வந்ததும் பூண்டுக் கலவையையும் இட்டு இறக்கவும். விருப்பமானவர்கள் கரம் மசாலா சிறிது சேர்க்கலாம். இல்லையெனில் தனியா பொடி தூவி, கொத்துமல்லியைத் தூவி அழகு செய்து பரிமாறவும். பூரி, சப்பாத்தி, தோசை, நான் போன்ற எல்லா வற்றிற்கும் இது ஒரு சிறந்த சைட் டிஷ்.

— சாந்தா ராமசாமி, சென்னை — 34.

## இரண்டாம் பரிசு:
## பட்டாணி மோனிஷா

தேவையான பொருட்கள்:

பச்சைப் பட்டாணி — 2 கப்,
ரொட்டித் துண்டு — 5 துண்டுகள்,
பால் பவுடர் — ½ கப்,
கெட்டிப்பால் — 1 கப்,
சோடா உப்பு — ¼ டீஸ்பூன்,
சர்க்கரை — 250 கிராம்,
ஏலப்பொடி — 1 டீஸ்பூன்,
பொரிக்க டால்டா — 400 கிராம்,
வெண்ணெய் — 2 டீஸ்பூன்,
தேங்காய்த் துருவல் — ½ கப்,
ரோஸ்கலர், கிரீன் கலர்—சிலசொட்டுகள்

செய்முறை:

பட்டாணியை வேக வைத்துத் தோல் நீக்கி, நீர் விடாமல் கெட்டியாக நன்கு அரைத்துக்கொள்ளவும். ரொட்டித்துண்டங்களைச் சிறிது பாலில் ஊற வைத்து அதனுடன் சிறிது வெண்ணெய், சோடா போட்டு மீதிப் பாலையும் விட்டு நுரை வரும்படி நன்றாகத் தேய்த்துப் பிசையவும். பிறகு இரண்டு மாவையும், பால்பவுடரையும் ஒன்றாகச் சேர்த்து, ஏலக்காய்த்தூளையும்போட்டு நன்கு பிசையவும். பிசைந்த மாவை எலுமிச்சங்காய் அளவு உருட்டி வைக்கவும்.

250 கிராம் சர்க்கரையை அரை தம்ளர் தண்ணீர்விட்டு அடுப்பில் வைத்துக் கம்பிப் பாகாக்கி, அடுப்பின் அருகிலேயே இறக்கி வைக்கவும்.

தேங்காய்த்துருவலை வறுத்து அதில் பாதியுடன் ரோஸ் கலரையும், மறுபாதியுடன் கிரீன் கலரையும் விட்டு கலர்க் கொப்பரையாக்கிக் கொள்ளவும்.

வாணலியில் டால்டாவை விட்டு அடுப்பில் வைக்கவும். டால்டா காய்ந்ததும் உருண்டைகளை வடைபோல் தட்டிப் போட்டு பொரிக்கவும். அது பொன்னிறத்தில் வெந்ததும் எடுத்துச் சர்க்கரைப் பாகில் போட்டுச் சிறிது ஊற வைத்து எடுத்துத் தட்டில்வைக்கவும். உருண்டைகள் முழுவதையும் இப்படியே செய்தபின் தேங்காய்த் துருவல்களைத் தூவவும்.

— ரமணி தாணுப்பிள்ளை,
சென்னை — 43

## மூன்றாம் பரிசு:
## பட்டாணி உருண்டைக் குழம்பு

தேவையான பொருட்கள்:

**உருண்டைக்கானவை:**

பட்டாணி உரித்தது — 100 கிராம்,
கோஸ் (சிறியது) — 1,
துவரம் பருப்பு — 100 கிராம்,
கடலைப்பருப்பு — 50 கிராம்,
கடலை மாவு — 10 கிராம்,
மிளகாய் வற்றல் — 5,
கரம் மசாலாத் தூள் — 1 டீஸ்பூன்,
மஞ்சள் தூள் — 1 டீஸ்பூன்,
உப்பு — தேவையானது,
எண்ணெய் — பொரிப்பதற்கு.

தேவையான பொருட்கள்:

**குழம்பு:**

வெங்காயம் — 100 கிராம்,
இஞ்சி — 1 துண்டு,
பூண்டு — 8 பல்,
தக்காளி — 4 பெரியதாக,
தயிர் கெட்டியாகக் கடைந்தது — 400 கிராம்,
சீரகம் — 1 ஸ்பூன்,

செய்முறை:

கோஸைப் பொடியாக நறுக்கிக் கொள்ளவும். பட்டாணியைக் கொஞ்சமாக தண்ணீர் விட்டு வேக வைத்துக் கொள்ளவும். இரு பருப்புகளையும் அலம்பி, உப்பு, மிளகாய் சேர்த்து மிக்ஸியில் கரகரப்பாக அரைத்துக் கொள்ளவும். அரைத்த விழுதுடன் நறுக்கிய கோஸ், வேக வைத்த பட்டாணி, கரம் மசாலா, மஞ்சள் தூள், சிறிது கடலை மாவு, கலந்து வைத்துக் கொள்ளவும். (கடலை மாவு கலந்தால் உருண்டைகள் உதிராமல் இருக்கும். அடுப்பில் எண்ணெய் வைத்துக் காய்ந்ததும் கலந்து வைத்திருக்கும் மாவைச் சிறுசிறு உருண்டைகளாக பொரித்து எடுத்து வைத்துக் கொள்ளவும். உருண்டைகள் ரொம்பவும் சிவக்காமல் பாதி வெந்ததும் எடுத்து விடவும்.

குழம்பு செய்முறை:

வாணலியில் கொஞ்சம் எண்ணெய் விட்டுச் சீரகம் தாளித்து வெங்காயம், இஞ்சி, பூண்டை விழுதாக அரைத்ததைக் கொட்டி, உப்பு, மஞ்சள் தூள் கலந்து நன்றாக வதக்கவும். எண்ணெய் நன்றாக மேலே வரும்படி சிவப்பாக வதக்கவும். பிறகு தக்காளியை நறுக்கி அதனுடன் கலந்து பின்னும் சிறிது நேரம் வதக்கவும். கலவை நன்றாகக் குழைந்து வந்ததும் கடைந்து வைத்திருக்கும் தயிருடன் சிறிது கடலை மாவு சேர்த்து அடுப்பில் இருக்கும் மசாலாவுடன்

கலந்து கொதிக்க விடவும். கொதிக்கும் போதே தயாரித்து வைத்திருக்கும் பட்டாணி உருண்டைகளையும் சேர்த்துக் கொதிக்க விடவும். உருண்டைகள் மிருதுவாக ஆன பிறகு இறக்கி வைத்து கொத்துமல்லித் தழைகளைப் பொடியாக நறுக்கிப் போட வும். பட்டாணி உருண்டை குழம்பு தயார். இது சாதத்துடன் கலந்து சாப்பிடச் சுவை யாக இருக்கும்.

— திருமதி அகிலாண்டேஸ்வரி,
புதுதில்லி — 2.

## ஆறுதல் பரிசு:
## ஃப்ரைட் பீஸ் கப்ஸ்

தேவையான பொருட்கள்:

புளித்த தோசை (அ) இட்லி மாவு — 1 லி,
பச்சைப் பட்டாணி — 400 கிராம்,
இஞ்சி — 1 துண்டு,
பச்சை மிளகாய் — 6,
கரு.வேப்பிலை, கொத்துமல்லி, — 2 ஸ்பூன்
தேங்காய் — இரண்டு ஸ்பூன்,
தாளிக்க — கடுகு, சீரகம்,
பொரித்தெடுக்க எண்ணெய்

செய்முறை:

பச்சைப் பட்டாணியை உரித்துக் கொதிக் கும் வெந்நீரில் அரை மணி நேரம் ஊறப் போடவும். புளித்த தோசை மாவில் ஊறிய பட்டாணியைப் போட்டு, பச்சை மிளகாய், இஞ்சி, தேங்காய் ஆகியவற்றை அரைத்துப் போட்டு, சிறிதளவு உப்பிட்டு, கடுகு, சீரகம் தாளிக்கவும். (மசாலா வாசனை விரும்பு பவர்கள் சீரகத்திற்குப் பதில் சோம்பு தாளிக்கலாம்) கொத்துமல்லி கறிவேப்பிலை யைப் பொடியாக நறுக்கித் தூவி, அப்பக் குழியில் எண்ணெயைக் காய வைத்து, இந்த மாவைக் கொஞ்சம் கொஞ்சமாகப் பொரித் தெடுக்க பீஸ் கப்ஸ் தயார்.

— மீனா சுரேஷ், திருச்சி — 5.

## ஆறுதல் பரிசு:
## பட்டாணி பக்கோடா

தேவையான பொருட்கள்:

பட்டாணி — ¼ கிலோ,
அரிசி மாவு — சிறிதளவு,
கடலை மாவு — ½ கிலோ,
பெரிய வெங்காயம் — 3,
தேவையான உப்புப் பொடி,
தேவையான காரப் பொடி,
விரும்பும் எண்ணெய் — ¼ கிலோ,

செய்முறை:

முதலில் பட்டாணியை வாணலியில் சிறிது வறுத்துக் கொள்ள வேண்டும். தண் ணீரில் உடனே ஊறப் போட வேண்டும். ஊறியதை வடிக்கட்டியில் வடிகட்டிக் கொள்ள வேண்டும். கடலை மாவு அரிசி மாவையும் சலித்து ஒன்று சேர்த்துத் தண் ணீர் ஊற்றிப் பிசைந்து கொள்ள வேண் டும். அத்துடன் நறுக்கிய வெங்காயம், உப்புப் பொடி, காரப் பொடியையும் சேர்த்து பக்கோடாப் போடும் பதத்தில் தயார் செய்து கொள்ள வேண்டும். அடுப்பில் வாணலியில் எண்ணெய் வைத்து, முதலில் எண்ணெய் நன்கு காய அடுப்பை எரிய விட்டுப் பின் எரிச்சலை மட்டுப்படுத் திக் கொண்டு, ஊறி, வடிகட்டிய பட்டாணி யைக் கலவையில் நன்கு புரட்டி எடுத்து எண்ணெயில் போட வேண்டும். லேசாகச் சிவக்க வைத்துக் கிளறிக் கிளறி விட்டுப் பதமாகப் பொரித்தெடுக்க வேண்டும். மாலை வேளைக்கு மொர மொரப்பான கரகரவென்று சுவைத்துத் தின்பதற்கு ஓர் எளிய தின்பண்டம்.

— எஸ். ஜெயசீதா, சிதம்பரம்.

## பரிசுப் பொருட்கள்:



# இதோ ஒரு ஸ்ரீராம் குடும்பம்!



நிற்பவர்கள் : 1. குமாரி ஜி. பரணி கோமதி 2. ஜி. துரைமுருகன்.
உட்கார்ந்திருப்பவர்கள் : 1. பால இரமணி 2. ஆண்டாள் பிரியதர்சினி, 3. புலவர் திருமதி ஆ. சுப்புலட்சுமி கணபதி. 4. கவிஞர், புலவர் நெல்லை ஆ. கணபதி.

''எங்கள் குடும்பம் ஒரு இனிய குடும்பம். நான், என் மனைவி, இருமகள்கள், மருமகன், மகன் ஆகிய 6 பேர்கள் கொண்ட குடும்பம். எங்கள் குடும்பத்தினர் ஆசிரியத்துறை, எழுத்துத்துறை, இலக்கியத்துறையில் ஈடுபாடு கொண்டவர்கள். நாங்கள் எல்லோருமே நெடுங்காலமாக ஸ்ரீராம் சீட்டு நிதியில் அங்கத்தினர்களாக உள்ளோம். மிக்க பயன் அடைந்துள்ளோம். எங்கள் வீட்டு திருமணத்திற்கும், வீடு புதுப்பிக்கவும் ஸ்ரீராம் சீட்டு நிதி தக்க சமயத்தில் உதவியது. எங்களைப் போலவே எல்லோரும் ஸ்ரீராமில் சேர்ந்து பயன்பெற வேண்டுமென்பதே எங்கள் அவா.''

கவிஞர், புலவர் நெல்லை ஆ.கணபதி M.A., M.Ed.

இந்த இனிய குடும்பத்தைப்போல் தென்னாட்டில் பல ஆயிரம் குடும்பங்கள் ஸ்ரீராம் சீட்டு நிதியில் அங்கத்தினராக உள்ளன.

ஸ்ரீராம் குடும்பம் பெரிது. 1,25,000 அங்கத்தினர்களை உடையது. உங்கள் எல்லோரது உறுதுணையினால்தான் இன்று நாட்டிலேயே முதன்மையான சீட்டு நிறுவனமாகத் திகழ்கிறது ஸ்ரீராம். ஆண்டுக்கு ரூ.80 கோடிக்கு மேல் பட்டுவாடா செய்கிறது. தமிழ்நாடு, ஆந்திரா, கர்னாடகா ஆகிய இடங்களில் மட்டும் 21 கிளைகளைக் கொண்டது.

மேலும் சில இடங்களில் புதிய கிளைகளை தமிழ்ப்புத்தாண்டு தினத்தன்று தொடங்குகிறோம்.

**புத்தாண்டுப் புதுமலர்!**

தமிழ்ப்புத்தாண்டு தினத்தன்று சேரும் புதிய அங்கத்தினர்களுக்கு சிறப்பு அன்பளிப்புகள் பல உண்டு!




**ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி.லிமிடெட்.**

நிர்வாக அலுவலகம்: ''சுப்பிரமணியம் பில்டிங்'', 1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 2. போன்: 474451/475536/470400/473932.

**ஸ்ரீராம் சேமிப்பில் சேருங்கள், சீரும் சிறப்புமாய் வாழுங்கள்.**

ADWAVE/SCI/3745

வெள்ளிக்கிழமை காலை. எண்ணெய்க் கிண்ணத்தை எடுத்துக் கொண்டு கோவிலுக்குக் கிளம்பினேன்.

எதிரே வந்தாள் அலமேலு மாமி.

''என்ன மாமி, உங்களை கண்ணிலேயே காணலியே?'' என்று கேட்டேன்.

''ஏண்டி கேட்க மாட்டே நீ? மூணு தரம் நான் உங்காத்துக்கு வந்தேன். கதவு பூட்டியிருந்தது. என்னைக் காணலியேன்னு நீ கேட்கிறே?'' என்றாள் மாமி.

''ஸாரி மாமி. நீங்க சொன்னது போல நான்தான் ஊரில் இல்லை. ஒன்றரை மாதம் கோடைக்கானலில் இருந்துவிட்டு, போன வாரம்தான் வந்தேன். என்னவோ ஞாபகம். உங்களைக் கேட்டுட்டேன். வீட்டிலே எல்லோரும் சௌக்கியம்தானே?'' என்று விசாரித்த நான், சட்டென்று நினைவு வந்தவளாக, ''உங்க பிள்ளை சிவாவிற்கு,



